# கீதாசார்யன்



திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதி

*With Best Compliments From :*

**S. Venkatakrishna Battachariar**

Periyamurai Archagam

Sri Parthasarathi Swamy Devasthanam, Triplicane, Madras.

ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்



"कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन ।"

# கீதாசார்யன்
# முதலாண்டு மலர்




M. A. வேங்கடகிருஷ்ணன், M.A.
ஆசிரியர்

P. T. சுந்தரவரதன்
நிதிக்காப்பாளர்

N. கணபதி
விளம்பரப் பொறுப்பாளர்.

7, தெற்கு மாடவீதி திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005

5 - 2 - 80]

[விலை ரூ. 5-00

# பொருளடக்கம்

# எமது உளங்கனிந்த நன்றி!

இம்மலரை உருவாக்குவதற்கு வேண்டிய நம்பிக்கையும், தைரியத்தையும் வழங்கும் கீதாசார்யன் ஸ்ரீபார்த்தசாரதியை 'எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு உற்றோமே ஆவோம்! உனக்கே நாமாட் செய்வோம் என்ற நிலையை எங்களுக்கு அருளுமாறு பிரார்த்திக்கிறோம். வெகு தாமதமாகவே வாசகர்களுக்கு மலர் கிடைத்த பொழுதினும் இந்த அழகான அமைப்போடு இதனை விளங்க உதவிய அனைவருக்கும் எங்கள் உளங் கனிந்த நன்றியை உரித்தாக்கி 'தலையில்லால் கை மாறிலேன்' என்ற ஆழ்வார் பாசுரப்படி அனைவருக்கும் கடமைப் பட்டிருக்கிறோம்.

குறிப்பாக,

(1) ப்ரதி பலன்களை எதிர் பாராது, 'இதுவும் ஒரு அறிவுக் களஞ்சியம்' என ஆக்கி தந்த ஸ்ரீ. உ. வே, அண்ணங்கராசாரியர் ஸ்வாமி, ஸ்ரீ உ. வே. வேளுக்குடி வரதாச்சாரியார் ஸ்வாமி, ஸ்ரீ சாண்டில்யன், ஸ்ரீதீபம் நா. பார்த்தசாரதி, ஸ்ரீகண்ணதாசன், ஸ்ரீ வேணுகோபாலன் ஸ்ரீ உ. வே. பிள்ளைலோகம் ஸ்தலசயனத்துறைவார் ஸ்வாமி, Dr. V. V. ராமானுஜம், பேராசிரியர் அரங்கராசன், பேராசிரியர் K A. மணவாளன், திரு T. A. பாஷ்யம், திருமதிபிரேமாவரதன், திருமதி மோஹனா திருமலை ஆகியோருக்கு எங்கள் சிரம் தாழ்ந்த வணக்கத்தோடு நன்றியை தெரிவிக்கிறோம்.

---

**கீதாசார்யன் நிர்வாக உறுப்பினராக இல்லாதிருந்தும் ஆரம்பம் முதல் எங்களுக்கு ஆலோசனைகள் பல வழங்கி, அனைத்து உதவிகளையும் புரிந்து வரும் ஸ்ரீ உ. வே. P. T விஜயராகவன், M. Sc, B L அவர்களுக்கும், திரு ரவிசந்திரன் அவர்களுக்கும், எங்கள் உளம் குழைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.**

---

(2) இன்றிருக்கும் நிலையில் 'எது இருந்தும் நிதி இல்லையெனில் கதி அதோ கதி' என்றிருக்கும் போது, 'கீதாசார்யன்' ஒரு சமயப் பத்ரிகை என்றிருந்தும், எங்களுக்கும் பெருவாரியாக விளம்பரங்கள் கொடுத்து, 'கீதாசார்யனை' நிதித் துறையிலும் ஒரு சக்தி வாய்ந்த பத்ரிகையாக ஆக்கித்தந்த ஒவ்வொரு விளம்பரதாரர்களுக்கும் எங்கள் நன்றியை தனித்தனியே தெரிவித்துக் கொள்கிறோம்.

முக்கியமாக, விளம்பரங்கள் பெறுவதற்கு பெரு உதவி செய்த திரு P. T. விஜயராகவன், திரு ரவிச்சந்திரன், திரு T. A. திரு வேங்கடாச்சாரியார் ஸ்வாமி, திரு ஆதிகேசவலு குப்தா, திரு மோகன், திரு கேசவன், திரு P. சேகர் ஆகியோர்களுக்கு எங்கள் நன்றியை தெரிவிப்பதோடு மேன்மேலும் அவர்கள் எங்களுடைய ஆத்மீகப் பணிக்கு உதவி புரியவும் வேண்டி நிற்கிறோம்.

(3) "அழகிய செடியிலே சில ரோஜாப்பூக்கள்" போல இம் மலரிலே நான்கு வண்ணப்படங்களை அச்சிடுவதற்கு நன்கொடைகள் அளித்துதவிய பெரியோர்களுக்கும், குறிப்பாக அதற்கான காகிதங்களைக் கொடுத்துதவிய ஸ்ரீமான் A. V. கன்னய்ய நாயுடு அவர்களுக்கும் எமது ஆத்மார்த்தமான நன்றி!

(4) 'Printers Devil' என ஆங்கிலத்திலே கூறுவர்; நாம் எவ்வளவுதான் உயர்ந்த சிறந்த செய்திகளைத்தர விரும்பினாலும், புத்தகம் சரியாக வெளியிடப்படவில்லையென்றால், எத்துணைப் பெரிய செய்திகளும் பயனற்றுப்போய்விடும்; அவ்வாறில்லாமல் இம்மலரை யாவரும் விரும்பிப் படிக்கும் வண்ணம் அச்சிட்டுத் தந்த குரு அச்சகத்திற்கு எமது மனமார்ந்த நன்றி!

(5) இதுதவிர, எங்கள் அட்டைப் படத்தையும் மற்றும் வண்ணப் படங்களையும் மிகவும் சிறப்பாக அச்சிட்டுத் தந்த 'Shammi Syndicate' க்கும், அதற்கு ப்ளாக் செய்த ராயன் & கம்பெனிக்கும் எங்கள் நன்றி!

(6) கடைசியாக, ஆனால் கடைந்து எடுத்த ஒன்றாக, இம் மலரை வாங்கி வாசித்து இன்புறும் வாசகர்களுக்கு எவ்வாறு நன்றிச் சொல்வது எனப் புரியாமல் திகைக்கிறோம். ஓர் ஆங்கிலப் புலவன் கூறியதுபோல் Readers are the best judges. இம்மலரின் அருமை பெருமைகளையும் குற்றம் குறைகளையும் காணப் போகும் வாசகர்கள் இன்றி நாங்கள் இல்லை. எனவே எங்களது ஒவ்வொரு வெற்றிக்கும் வாசகர்களே பொறுப்பு! ஆனால் குற்றங்களுக்கும், குறைகளுக்கும் எங்களது அனுபவமின்மையே காரணமாக இருப்பதால், வாசகர்கள் பெரு உள்ளம் கொண்டு எங்களது குற்றங்களைப் பொறுத்து எங்களை நல்வழிப்படுத்துமாறு வேண்டுகிறோம்.

'கீதாசார்யன்' சிறப்பாக வளர, அதற்காக எங்கள் வாசகர்கள் வளர, எல்லாம் வல்ல 'கீதாசார்யன்' அருள் புரிந்து நிற்பானாக!

இவண்
பி. டி. சுந்தரவரதன்
நிதிக்காப்பாளர்

# கீதாசார்யன்

## முதலாண்டு மலர்

**5-3-80**

வெளியிட்டவர் :

மேதகு தமிழக ஆளுநர்

**ஸ்ரீ பிரபுதாஸ் பட்வாரி** அவர்கள்

பெற்றுக் கொண்டவர் :

ஸ்ரீ நாதெள்ள ஆதிகேசவலு குப்தா

தலைமையேற்றவர் :

ஸ்ரீ உ. வே. மஹாவித்வான்

**P. B. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி**

சிறப்புரை ஆற்றியவர்கள் :

திரு. சாண்டில்யன்

திரு. 'தீபம்' நா. பார்த்தசாரதி

N. Audikesavulu Gupta
PARTNER
M/s. NATHELLA SAMPATHU CHETTY & SON
JEWELLERS

123, N. S. C. BOSE ROAD,
MADRAS-600001.

GRAMS: "NATHELLA"
PHONES: 32002, 35937

29-2-1980

Geethacharyan is celebrating its first anniversary on the 5th of March, 1980. As a monthly religious Journal, the Articles it carries about Alwars and the Acharyas, philosophy by eminent scholars and pandits, deserve high praise. I hope and trust that the publication will maintain its high standard and achieve a place of eminence in propagating the sublime ideals of vaishnava siddhantha among its readers and the public at large. I wish Sri U.Ve. M.A. Venkata Krishnan, M.A., all success in this noble endeavours.

N. AUDIKESAVULU GUPTA,
Partner,
NATHELLA SAMPATHU CHETTY & SON,
MADRAS-600 001.



ஸ்ரீரங்கம் ரங்கநாதன்

*With Best Compliments From :*

**Sri. Nathella AUDIKESAVULU GUPTA,**

Secretary, Sri Ranganatha Swamy Koil Tiruppani Committee, Srirangam.



திருமலை ஸ்ரீ நிவாஸன்

*With Best Compliments From :*

**P. B. Ananthachariar**, Advocate
Madras-1.



காஞ்சீபுரம் வரதராஜன்

*With Best Compliments From :*

**K. S. Venkatakrishnan & K. S. Gopalakrishnan**

TRIPLICANE

# ஆசிரியரும் ஆலவாயனும்

(வாசகர்கள் சார்பில் ஆலவாயன் ஆசிரியரை பேட்டி காண்கிறார்)

**ஆலவாயன் :** என்ன ஆசிரியரே! உமது பத்திரிகைக்கு ஒரு வயது முடிந்து மூன்று மாதங்களுக்கு மேல் ஆகிவிட்டன. இப்போதுதான் ஆண்டு மலர் வெளியிடுகிறீர்களே!

**ஆசிரியர் :** உண்மைதான் ஆலவாயா! வாசகர்கள் சார்பில் கேள்விகள் கேட்கும் உனக்கு பதில் சொல்லக் கடமைப் பட்டிருக்கிறேன். தவிர்க்க முடியாத சில காரணங்களால் இந்தத் தாமதம் ஏற்பட்டுவிட்டது. மாத இதழ்களைத் தயாரித்துக் கொண்டே, கூடவே ஆண்டு மலரையும் தயார் செய்வது கடினமாக இருக்கிறது. மேலும் 'ஏதோ தயாரித்தோம், வெளியிட்டோம்' என்றில்லாமல் மலர் சிறப்பாக அமைய வேண்டுமல்லவா? அதுவும் தாமதத்திற்கு ஒரு காரணம். இது நமது முதல் முயற்சி என்பதை நினைவில் வைத்துக் கொண்டு வாசகர்கள் எங்களை மன்னிப்பார்கள் என்று நம்புகிறோம்.

**ஆலவாயன் :** ஓராண்டை முடித்து இரண்டாம் ஆண்டில் நடைபயிலும் கீதாசார்யனின் முதலாண்டு இதழ்களைப் பற்றிச் சில அபிப்ராயங்களை வாசகர்கள் சார்பில் தெரிவிக்கிறேன், அவைகளுக்கு தேவரீரது விளக்கங்களையும் எதிர்பார்க்கிறேன்.

**ஆசிரியர் :** நன்று ஆலவாயா நன்று. பொதுவாக நீ பாசுரங்களில் மிக நல்ல சந்தேகங்களை கேட்பது போலவே இப்போதும் திறமையாகக் கேட்பாய் என்று நம்புகிறேன்.

**ஆலவாயன் :** கீதாசார்யன் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு திவ்ய தேசத்து எம்பெருமானது திருவுருவப் படத்தை வண்ணத்தில் தாங்கி வருவது பிரமிக்க வைக்கிறது. இதற்காக சிறந்த பாராட்டுக்கள். தவிர கண்ணன் பார்த்தன் இருவரும் யாத்திரை செல்லும் பாணியில் திவ்ய தேசத்தைப் பற்றிய விவரங்களைத் தெரிவிப்பது மிகவும் அழகாக இருக்கிறது. ஸ்ரீ உ. வே ஸ்தலசயனத்துறைவார் ஸ்வாமி எழுதும் கட்டுரைகளும் மிக எளிய தமிழில் அழகாகவே இருக்கின்றன. ஆனால் இவ்வளவு குறைந்த பக்கங்களுள்ள பத்ரிகையில் ஒரே விஷயத்தைப்பற்றி இருவர் எழுதவேண்டியது அவசியமா? இது மட்டுமேயல்ல. ஸ்ரீ பாஷ்யத்தைப் பற்றியும் இருவர் எழுதுகின்றார்கள். இது அவசியமா?

**ஆசிரியர் :** உண்மையில் நீ கேட்கும் இந்தக் கேள்விகளை நேரிலும் கடிதம் மூலமும் நாற்றுக் கணக்கான வாசகர்கள் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஸ்ரீ உ. வே. ஸ்தலசயனத்துறைவார் ஸ்வாமி திவ்யதேசங்களைப்பற்றி எழுதும் கட்டுரையில் அந்த திவ்யதேசத்தைப் பற்றிய சில முக்யமான பாசுர விளக்கங்களையும், குறிப்பாக பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் பாடியுள்ள நூற்றெட்டு திருப்பதி அந்தாதிப் பாசுர விளக்கத்தையும் காணலாம். ஆனால் ஸ்ரீ உ. வே T. A. பாஷ்யம் (கண்ணன் பார்த்தன் யாத்திரைப்பாணியில்) எழுதும் கட்டுரையில் ஒவ்வொரு திவ்யதேசத்தைப் பற்றியும் விவரங்கள் மட்டுமே தெரிவிக்கப்படுகின்றன. எனவே இரண்டு கட்டுரைகளுக்கும் தலைப்பு ஒரே மாதிரியாக இருந்தாலும் தெரிவிக்கப்படும் விஷயங்கள் வெவ்வேறானவை. இதுபோலவே ஸ்ரீ உ. வே. க. சந்தானம் அவர்கள் எழுதும் ஸ்ரீ பாஷ்யம்—தூய தமிழாக்கத்தை மட்டும் கொண்டது. ஆனால் ஸ்ரீ. உ. வே. மஹாவித்வான் P. B. A. ஸ்வாமி எழுதும் ஸ்ரீ பாஷ்யஸாரம் ஸ்ரீ பாஷ்யத்தில் கூறப்படும் விஷயங்களை அற்புதமான முறையில் விளக்குவது.

**ஆலவாயன் :** கீதாசார்யன் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தை வளர்ப்பதற்காகத் தொடங்கப்பட்ட பத்ரிகை. இதில் ராசிபலன் பகுதி அவசியமா? வியாபார நோக்கத்திற்காக மற்றவர்கள் செய்யும் காரியங்களை நாமும் செய்யவேண்டுமா?

**ஆசிரியர் :** சிலர் நீ சொல்வது மாதிரி நினைக்கலாம். ஆனால் சென்ற சித்திரை மாதம் தவிர்க்க முடியாத காரணங்களால் ராசிபலன் பகுதியை பிரசுரிக்க முடியாமல் போனபோது பெரும்பாலான வாசகர்கள் 'ராசிபலன் பகுதியை நிறுத்திவிடாதீர்கள்' என்று எழுதியிருக்கிறார்கள். மேலும் ராசிபலன் பகுதியையும் ஸம்பிரதாயத்திற்கு ஏற்ற முறையில் வழங்குகிறார் ஸ்ரீ உ.வே. ஸ்ரீரங்கம் குண்டலம் திருமலாசாரியர் ஸ்வாமி. அதாவது ஒரு குறிப்பிட்ட ராசிக்காரருக்கு ஏற்பட்டுள்ள தோஷங்களைப் போக்கிக் கொள்ள 'ஆழியெழ' பதிகம் அநுஸந்தானம், ஸுந்தர காண்ட, விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் போன்றவை வலியுறுத்தப்படுகின்றன. இம்மாதிரி வலியுறுத்துவதன் மூலம் அனைவரும் நடைமுறையில் ஸம்ப்ரதாயப் பழக்க வழக்கங்களை பின் பற்றுவார்கள் என்ற நம்பிக்கையோடுதான் ராசிபலன் வெளியிடப்படுகிறதே தவிர வியாபார நோக்கத்தோடு அல்ல.

**ஆலவாயன் :** வாசகர்களால் மிகவும் விரும்பி வரவேற்கப்பட்ட பகுதிகளாகிய 'கீதாசார்யன் பதில்கள்', 'அன்புள்ள கீதாசார்யரே!' போன்ற பகுதிகளை ஏன் நிறுத்திவிட்டீர்கள். கேள்வி பதில் பகுதி மிகவும் பயனுள்ளதாகவன்றோ இருந்தது?

**ஆசிரியர் :** உண்மைதான் ஆலவாயா! ஆனால் வாசகர்கள் அப்பகுதிகளைப் படிப்பதில் காட்டிய ஆர்வத்தை எழுதுவதில் காண்பிக்கவில்லை. முதலில் சில இதழ்களுக்கு கேள்விகள் வந்தவண்ணமிருந்தன. அதேபோல் தான் வாசகர் கடிதங்களும். ஆனால் மாதங்கள் செல்லச் செல்ல, வாசகர்களுக்கு கேள்விகளும் கடிதங்களும் எழுதும் ஆர்வம் குறைந்து விட்டது என்றே தோன்றுகிறது. வேறு சில பத்திரிகைகளில் செய்வதுபோல் நாமே வாசகர்கள் பெயரில் கேள்விகளும் கடிதங்களும் எழுதி பிரசுரிக்க விரும்பவில்லை. எனவே அப்பகுதிகள் தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டிருக்கின்றன. வாசகர்கள் ஆர்வத்துடன் எழுதினால் மீண்டும் அப்பகுதிகள் தொடங்கப்படும்.

**ஆலவாயன் :** முதல் பக்கத்தில் ஸ்ரீமத் பகவத் கீதையை உரையோடு வெளியிட்டு வருகிறீர்கள். அவ்வுரையானது மிகவும் எளிய முறையில் எல்லோருக்கும் புரியும்படி இருக்கிறது. ஆனால் உரைகள் மிக மிகச் சுருக்கமாக, வெறும் பொழிப்புரையாகவல்லவோ இருக்கிறது! சற்று விளக்கமாக எழுதலாமே;

**ஆசிரியர் :** ஸ்ரீமத் பகவத்கீதையின் முதல் அத்யாயம் பகவத்கீதைக்கு ஒரு முன்னுரை போன்றது. பாண்டவர்களும் கௌரவர்களும் யுத்தத்திற்குத் தயாராவதைப் பற்றிக்கூறும் அத்யாயமே அது! அதில் விளக்கங்களுக்கு இடமில்லை. உண்மையான பகவத்கீதை இரண்டாம் அத்யாயத்தின் 12வது சுலோகத்தில்தான் ஆரம்பிக்கிறது. அதாவது தத்துவ அர்த்தங்கள் அங்கிருந்துதான் ஆரம்பிக்கப்படுகின்றன. எனவே அங்கிருந்து நாமும் விளக்கமாக எழுதுவோம்.

**ஆலவாயன் :** குறைகளை மட்டுமே கூறுவது சரியல்ல. எனவே இனி பாராட்டப்பட வேண்டிய அம்சங்களுக்கு வருவோம். தேவரீர் சாதித்துள்ள சாதனைகளில் மிகப் பெரியது திரு சாண்டில்யன் அவர்கள் எழுதும் கதைதான். இந்த யோசனை உங்களுக்கு எப்படித் தோன்றியது என்று விளக்க முடியுமா?

**ஆசிரியர் :** நமது பத்திரிகையின் நோக்கமே பிரபலமான முறைகளில் நமது ஸம்ப்ரதாயத்தைப் பரப்புவதுதான் அதற்காக முதன் முதலில் எழுத்துலகில் மிகவும் பிரபலமாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் திரு சாண்டில்யன் அவர்களையும் திரு நா பார்த்தசாரதி அவர்களையும் அணுகினோம். அவர்களும் கட்டுரைகள் எழுதித்தர அன்புடன் இசைந்தார்கள். பிறகு நமது ஸம்ப்ரதாயத்தின் நிகழ்ச்சி ஒன்றை அடிப்படையாக வைத்து ஒரு கதை வெளியிடலாமென்ற யோசனை உதித்தது. சரித்திரக் கதைகள் எழுதுவதில் தன்னிகரற்றவரான சாண்டில்யனை அணுகினோம். அவரும் மகிழ்ச்சியுடன் ஒரு கதை

எழுதுவதற்கு இசைந்தார். அதன்படி ஸ்ரீ ராமாநுஜருடைய சீடரான பிள்ளை உறங்காவில்லி தாஸருடைய கதை தேர்ந்தெடுக்கப்பட்டு 'கவர்ந்த கண்கள்' என்ற பெயரில் வெளிவருகின்றது. பல பிரபல பத்திரிகைகள் அவரை கதை எழுதித்தரும்படி நிர்பந்தித்துக் கொண்டிருக்கையில், நமது பத்திரிகைக்கு அவர் சன்மானம் எதுவும் பெறாமல் கதை எழுதித் தருவதற்கு நாம் அவருக்குப் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறோம்.

**ஆலவாயன் :** தற்கால மக்களுக்கு ஸம்ப்ரதாயத்தை அறிந்து கொள்ளும்படி செய்ய புதுமையான முறை இது இம்மாதிரி வேறு ஏதாவது புதுமை செய்யும் எண்ணம் உண்டா?

**ஆசிரியர் :** புதுமையான முறையில் ஸம்ப்ரதாய நிகழ்ச்சிகளை (ஐதிஹ்யங்களை) அடிப்படையாக வைத்துக் கதைகள் எழுதும் முயற்சிக்கு முதன் முதலாக வழிகாட்டியிருக்கிறார் திரு சாண்டில்யன். அதைப் பின்பற்றி பேராசிரியர் இரா. அரங்கரசன், திருமதி பிரேமா வரதன் போன்றோர் எழுதும் சிறுகதைகளை அவ்வப்போது பிரசுரித்து வருகிறோம். தீபம் நா பார்த்தசாரதி அவர்கள் எழுதியுள்ள சிறு கதைகளையும், பிரபல நாவலாசிரியர் ஸ்ரீ வேணுகோபாலன் அவர்கள் எழுதியுள்ள தெய்வீகத் தொடர்கதை ஒன்றையும் விரைவில் பிரசுரிக்கப் போகிறோம்.

**ஆலவாயன் :** அப்படியா! மிகமிக மகிழ்ச்சி! ஸ்ரீதாசார்யனில் பாராட்டப்படக்கூடிய பகுதிகள் மேலும் பல உள்ளன. ஸ்ரீ. உ. வே. வித்வான் வேளுக்குடி K. வரதாசாரியர் ஸ்வாமியும், ஸ்ரீ. உ. வே. Dr. V. V. ராமானுஜம் அவர்களும் எழுதும் கட்டுரைகளில் பூர்வாசாரியர்களின் வியாக்கியானங்களை மிக அழகாக விளக்குகிறார்கள். ஸகல தேவாலய உத்ஸவங்களையும் ஒருங்கே வெளியிடுவது மிகவும் உபயோகமாக இருக்கிறது. நாங்கள் பஞ்சாங்கமே வாங்குவதில்லை. ஒவ்வொரு மாதமும் ஸ்ரீதாசார்யனில் வரும் பஞ்சாங்கத்தையே உபயோகித்துக் கொள்கிறோம்.

**ஆசிரியர் :** அத்தனை பாராட்டுதல்களுக்கும் நன்றி. ஸ்ரீதாசார்யன் சிறந்த முறையில் அமைந்திருக்கிறது என்றால் அதில் கட்டுரைகள் எழுதித்தரும் எழுத்தாளர்களும் அவற்றை விரும்பிப் படித்துவரும் வாசகர்களாகிய நீங்களுமே அதற்குக் காரணம். இதில் எமது திறமை என்பது ஒன்றுமில்லை.

**ஆலவாயன் :** அப்படி ஒதுங்கி விடாதீர்கள் ஆசிரியரே! ஸ்ரீதாசார்யனில் மேலும் பற்பல புதுமைகளை எதிர்பார்த்துக் கொண்டிருக்

கிறோம் முதலாண்டின் முடிவில் தாங்கள் வாசகர்களுக்கு அளிக்கும் பரிசு என்ன?

**ஆசிரியர் :** கீதாசார்யன் பத்திரிகையின் நோக்கமே 108 திவ்ய தேசங்களின் பெருமைகளைப் பரப்புவதுதான். அதன்படியே ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு திவ்ய தேசத்து எம்பெருமானது திருவுருவப் படத்தையும் (Photo), அந்த திவ்ய தேசத்து விவரங்களையும் பிரசுரித்து வருகிறோம். இப்படி 108 திவ்யதேசங்களையும் பற்றி வெளியிடுவது என்றால் சுமார் 10 வருடங்களாகும். அவ்வளவு நாள் காத்திருப்பது மிகவும் கடினமல்லவா? பெரும் வெள்ளம் வருவதற்கு முன் பூமியானது புறம் பொசிந்து காட்டுவதுபோல் இவ்வாண்டு மலரில் 108 திவ்ய தேசங்களை பற்றிய விவரங்களை சுருக்கமாக வெளியிடுகிறோம். அதோடுகூட அன்பளிப்பாக 108 திவ்ய தேசத்து எம்பெருமான்களது திருவுருவங்களையும் ஒருங்கே கொண்ட படத்தையும் வழங்குகிறோம்.

**ஆலவாயன் :** மிக்க நன்றி ஆசிரியரே! பல்லாயிரக்கணக்கான வாசகர்கள் இதயத்தில் எழுந்துள்ள சந்தேகங்களையே நான் கேட்டிருக்கிறேன். அவையனைத்துக்கும் தகுந்த விளக்கங்கள் அளித்து திருப்திப்படுத்தியமைக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். உம்முடைய இந்தச் சிறந்த பணி எவ்வித இடையூறுமில்லாமல் சிறந்து விளங்க அருள்புரியுமாறு வாசகர்களாகிய நாங்கள் அனைவரும் கீதாசார்யனை பிரார்த்திக்கிறோம்.



# திவ்யதேச விவரங்கள்

## சோழநாட்டு திவ்ய தேசங்கள் (40)

**1. ஸ்ரீரங்கம் :** இத் திருப்பதி 108 திவ்வியதேசங்களுள் தலைமை பூண்டதும், 'கோயில், திருமலை பெருமாள் கோயில்' என்று பிரதானமாக எடுத்துக் கூறப்படுகின்ற தலங்களுள் முதன்மையானதும், பூலோக வைகுண்டம், போக மண்டபம், பெரிய கோயில் எனப் பலவாறு சிறப்புப் பெயருடையதுமாம். ஸ்வயம்வ்யக்த க்ஷேத்திரங்கள் எட்டினுள் முதன்மையானது 'பெருமாள் திருப்பலகையிலமுதுபடியிலே மற்றைத் திருப்பதிகள் நாயன்மாருக்கு அளந்து கொடுக்குமாபோலே" என்று பகவத் விஷய வாக்கியம். இது பெரிய ஊர். பல தர்மசாலைகள் உள்ளன. இங்கிருந்து கொண்டே சுற்றிலுமுள்ள திருப்பதிகளுக்குச் சென்று வரலாம். அருகே காவேரியின் தென் கரையிலே திருச்சிராப்பள்ளி என்ற பெரிய நகரமுள்ளது. அங்கிருந்து பல திசையில் பஸ்களும், ரயில்களும் செல்கின்றன. விழுப்புரம்—திருச்சி குறுக்கு வழியில் ஸ்ரீரங்கம் ரயில்வே ஸ்டேஷனுள்ளது.

**2. உறையூர் :** திரு உறை—நித்தியவாஸம் செய்தருளும் காரணம் பற்றி 'திருவுறையூர்' என்று பெயர் பெற்றது. கோழி எனப்படுவதும் இதுவே. சோழர் இராசதானியாயிருந்தது. திருப்பாணாழ்வார் அவதரித்த தலம். திருச்சிக்கோட்டை ரயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கே ஒரு மைலிலுள்ளது. பஸ் வசதியுமுண்டு. திருச்சி நகருள் ஒரு பிரிவாயுள்ளது.

**3. தஞ்சை மாமணிக் கோயில்** என்பது வெண்ணாற்றங்கரையிலுள்ளது. தஞ்சையாளி என்ற நரசிம்மர் கோயிலும் இதன் அருகேயுள்ளது. தஞ்சாசுரனைக் கொன்ற தலமாதலால் இது தஞ்சையெனப் பெயர் பெற்றது. பிற்காலச் சோழ அரசர்களது தலைநகரம் இது. விழுப்புரம்—திருச்சி மெயின் லயனில் தஞ்சாவூர் ரயில்வே ஸ்டேஷன். தஞ்சாவூர்—திருவையாறு பஸ் மார்க்கத்தில் இவ்விடமுள்ளது. தஞ்சாவூரிலேயே ஓர் கோயிலுமுள்ளது.

**4. அன்பில்** அம்பில் எனவும் வழங்கப்படும். அன்பிலுக்குத் திருச்சியிலிருந்து பஸ் உள்ளது. ஸ்ரீரங்கத்திற்குக் கிழக்கே திருவானைக்காவல் பஸ் நிற்குமிடத்திலும் ஏறலாம். இங்கிருந்து கொள்ளிடத்தைக் கடந்து திருப்பேர் நகர் 8-வது திருப்பதி சென்று வரலாம். வெகு சமீபமே.

**5. உத்தமர் கோயில்** ஸ்ரீரங்கத்திற்கடுத்து கொள்ளிடம் தாண்டினதும் ரயில் நிற்குமிடமிறங்கினவுடன் இருக்கிறது.

மூர்த்திகளும் இங்குள்ளனர். பிரார்த்தனை ஸ்தலம். கல்யாணம் முதலியவை இங்கு நடைபெறுகின்றன.

6. **திருவெள்ளறை** திருச்சி — துறையூர் பஸ் மார்க்கத்தில் மண்ணச்ச நல்லூர் தாண்டினதும் இருக்கின்றது. கோயில் கோட்டை போன்றது. உய்யக்கொண்டார், எங்களாழ்வான் அவதாரஸ்தலம். இங்கு பிராகாரத்து மண்டபமொன்றின் அருகு பேசினால் எதிரொலி தெளிவாய் கேட்கப்படுகிறது.

7. **புள்ளம் பூதங்குடி.** கும்பகோணமிருந்து பஸ் மார்க்கமாகச் செல்லலாம். இதன் அருகே 9-வது திருப்பதியும் உள்ளது. தொண்டரடிப் பொடியாழ்வார், அவதார ஸ்தலமான மண்டங்குடியும் இதன் சமீபமேயுள்ளது. சுவாமிமலை ரயில்வே ஸ்டேஷனில் இறங்கியும் செல்லலாம். கும்பகோணம் பெரிய நகரம். அங்கிருந்து கொண்டே சுற்றிலுமுள்ள திருப்பதிகளுக்குச் சென்று வரலாம். ஜடாயு வென்ற புள்ளிற்குப் பிரத்யக்ஷமாய் இராமபிரான் மோக்ஷம் கொடுத்த தலமாதலால் இது புள்ளம்பூதங்குடி எனப் பெயர் பெற்றதென்பர்.

8. **திருப்பேர்நகர்:** கோவிலடி எனவும் வழங்கப் பெறும். வலது திருக்கையின் கீழே அப்பக்குடம். ஆகவே பெருமாளுக்கு அப்பக்குடத்தான் எனவும் பெயர். ஆருவயிற்றான் என நம்மாழ்வார் ஈடுபாடு. 4-வது திருப்பதியிலிருந்து கொள்ளிடந்தாண்டி இங்கு வரலாம். இங்கு ராயர் அன்ன சத்திரமுள்ளது.

9. **ஆதனூர்:** காமதேனுவுக்குப் பிரத்யக்ஷமான தலமாகையால் இது ஆதனூர் எனப் பெயர் பெற்றது. 7-வது திருப்பதியின் சமீபமாயே இது உள்ளது.

10. **தேரழுந்தூர்:** இது மாயவரம் கும்பகோணம் பிரிவில் குத்தாலம் ரயில்வே ஸ்டேஷனுக்கடுத்து தேரழுந்தூர் என்ற சிறு ஸ்டேஷனில் இறங்கிச் சேரக்கூடியது. உபரிசரவசு என்பவன் தேவரிஷி விவாதத்தில் பக்ஷபாதமாகத் தீர்ப்புச் சொன்னமையால் சாபம் பெற்று பூமியிலிறங்க நேரிட்டது. அவன் தேர் இங்கு அழுந்தினமையின் இத்தலம் தேரழுந்தூர் எனப்பட்டது.

11. **சிறுபுலியூர்:** இத்தலத்துக்கு மாயவரம் — திருவாரூர் பிரிவில் கொல்லுமாங்குடி என்னும் ஸ்டேஷனில் இறங்கிக் கிழக்காக ஒரு மைல் செல்ல வேண்டும். இங்கு வியாக்கிரபாதருக்குப் பாலசயனமாய் சேவை சாதித்தது பற்றி இப்பெயர் பெற்றது.

**12. திருச்சேறை** என்பது கும்பகோணம் திருவாரூர் வண்டிச் சாலையிலுள்ளது. பஸ் வசதியுண்டு. வடமொழியில் இதற்குப் பஞ்ச ஸாரக்ஷேத்திரம் எனப் பெயர். பெருமாள், தாயார், விமானம், தீர்த்தம், நிலம் ஐந்தும் சாரமானது.

**13. தலைச்சங்க நாண்மதியம்:** சீர்காழி ஆக்கூர் பஸ் மார்க்கத்தில் நடராசப் பிள்ளை சாவடிக்கடுத்து முக்கூட்டு ரோடு சந்திப்பில் இறங்கிச் செல்லலாம். மாயவரம் தரங்கம்பாடிப் பிரிவில் ஆக்கூர் ஸ்டேஷனில் இறங்கியும் செல்லலாம். தலைச்சங்கம்—உயர்ந்த சங்கம் —நாண்மதியம்—நிறைமதி உவா நாட்சந்திரன். உயர் சங்கமேந்தி அடியார்க்கு மதிபோன்று இன்பமளிக்கும் பெருமான் எழுந்தருளி யிருப்பது பற்றி இப்பெயர் வந்தது. வடுகநம்பி ராமநுஜதாசரின் சிறந்த் கைங்கரியம் போற்றற்பாலது.

**14. திருக்குடந்தை:** கும்பகோணம் பெரிய ஊர். தஞ்சை ஜில்லாவில் சிறப்புற்ற நகரம். இங்குத் தங்கி சுற்றும் பல பதிகள் சென்று வரலாம். சக்கரபாணி கோவில், ராமஸ்வாமி கோயில் முதலியன சேவிக்கத் தக்கவை. ராமஸ்வாமி கோவிலில் சிற்பவேலை விசேஷம்.

**15. கண்டியூர்:** இது தஞ்சாவூர் திருவையாறு பஸ் மார்க்கத்தில் இருக்கிறது. வடமொழியில் கண்டநபுரம் என்பது பெயர். அரன் சாபத்தைக் கண்டித்தமை பற்றி ஏற்பட்ட காரணப் பெயர்.

**16. திருவிண்ணகர்:** கும்பகோணத்திலிருந்து இரண்டாவது மைலில் உள்ளது. ஒப்பிலியப்பன் என்பது உப்பிலியப்பன் என வழங்கப்பட்டு அதற்கான கதையும் அதையொட்டி உப்பில்லாது அமுது செய்விக்கிற அநுஷ்டானமும் ஏற்பட்டது வரப்பிரசாதி. கல்யாணம் முதலிய இங்கு நடைபெறுகிறது.

**17. திருக்கண்ணபுரம்:** மாயவரம் திருவாரூர்ப் பிரிவில் நன்னிலம் ரயில்வே ஸ்டேஷனில் இறங்கி பஸ்ஸில் திருப்புகலூர் வரைச் சென்று தெற்கே ஒரு மைல் சென்றடையலாம். கீழ வீடு எனச் சிறப்புற்றது. உத்பலாவதக விமாநம் என்பதற்கு 'உத்பல' என்னும் ரிஷிகள் தொழும் (தேகத்தை உபேக்ஷித்திருக்கும் முமுக்ஷுக்களை ரக்ஷிக்கும்) எம்பெருமான் எழுந்தருளியுள்ள விடம் என்பது பொருள்.

**18. திருவாலி திருநகரி** என்னுமிவ்விடத்திற்கு விழுப்புரம் மாயவரம் பிரிவில் சீய்யாழி என்னும் ரயில் ஸ்டேஷனிலிறங்கி சீர்காழி —திருவெண்காடு பஸ்ஸில் புதுத்துறை என்னுமிடத்தில் இறங்கிச்

செல்லலாம். திருமங்கையாழ்வார் அவதார ஸ்தலம். குறையலூர் என்பது இதன் அருகேயுள்ளது ஆழ்வார்ததீயாராதனம் செய்த இடமான மங்கைமடம் உள்ளது. திருமங்கையாழ்வார் திருநகரியிலே கோயில் கொண்டெழுந்தருளியிருக்கிறார். திருமகள் எம்பெருமானை ஆலிங்கனம் செய்து கொண்டமை பற்றி இப்பெயர்

19. திருநாகை: இங்கே நாகப்பட்டணம் ஸ்டேஷன் உள்ளது. திருவாரூர் நாகூர் பிரிவில் இவ்விடம். இது சிறு துறைமுகப் பட்டிணமாய் இருக்கிறது. இங்கு தங்கமயமான புத்த விக்கிரத்தை வழியறிந்து களவாடி ஸ்ரீ ரங்கநாதனுக்குத் தேவையான கைங்கரியம் செய்தவர் திருமங்கையாழ்வார்.

20. திருநறையூர்: இவ்வூர் கும்பகோணம் திருவாரூர் பஸ் மார்க்கத்தில் உள்ளது. நறுமணம் மிக்க இடம் நறையூர். வடமொழி யில் ஸுகந்தகிரி. நாச்சியாருக்குப் பிரதாந்யமளித்தான் எம்பெருமான். கல்கருடன் உத்ஸவம் விசேஷம். திருமங்கையாழ்வாருக்கு எம் பெருமான் பஞ்சஸம்ஸ்காரம் செய்தருளினான், திருவிலச்சினை செய் தருளினான். மேதாவி ரிஷியின் பெண்ணை பலி என்பவன் அபஹரிக்க, மீட்டுக்கொடுத்தவர் பெருமாள்.

21. நந்திபுர விண்ணகரம்: இது நாதன் கோவில் என வழங்கப் படும். கும்பகோணத்திற்கும் தென் மேற்கே 3 மைலிலுள்ளது நந்தி பணி செய்த நகர் என்பது. நந்திதேவருமாகாலாம். நந்திவர்மன் என்னும் பல்லவ அரசனுமாகலாம்.

22. திருவிந்தளூர்: இது திருவழுந்தூர் என வழங்கப்படுகிறது. காவேரிக் கரையில் இத்தலம் உள்ளது. மாயவரம் டவுனின் ஒரு பிரிவாக இது உள்ளது. பஸ் வசதியுண்டு. ஐப்பசி மாதத்தில் காவேரி நிமித்தமாக 10-நாள் உத்ஸவம் விசேஷம். 21உ முதல் 30உ வரை நடைபெறும். வடமொழியில் ஸுகந்தவநம் எனப்பெயர் திருமங்கை யாழ்வார் தானான தன்மையிலேயே எம்பெருமானோடு பிரணய ரோஷத்தோடு பேசியருளிய திவ்யதேசம்.

23. தில்லைத் திருச்சித்திரகூடம்: இது தில்லை எனச் சிறப்புற்ற சிதம்பரம் என்னும் ஊர். விஷ்ணு ஸ்தலங்களில் ஸ்ரீரங்கம் போன்று சிவ ஸ்தலங்களில் இவ்வூர் மிகச் சிறந்தது. கோயில் என இதற்குச் சைவத்தில் சிறப்புப் பெயர். நடராஜனும் கோவிந்தராஜனும் ஒரே கோயிலில் எழுந்தருளியிருக்கின்றனர். பெரிய ஊர். பல தர்மசாலை உள்ளன சமீபத்தில் அண்ணாமலை சர்வகலா சாலையுள்ளது விசேஷம்.

**24. தாடாளன் கோயில் :** இது சீய்யாழி ரயில் ஸ்டேஷனுக்கு மிக அணித்தாக இருக்கிறது. சைவ அடியாரான ஸம்பந்தர் அவதரித்த ஊர். திருமங்கையாழ்வாருக்கும் ஸம்பந்தருக்கும் வாதம் நடந்து ஆழ்வார் வெற்றி பெற்ற ஏற்றமுடையது இவ்விடம்

**25. கூடலூர் : ஆடுதுறைப்** பெருமாள் கோவில் என பிரஸித்தி. தேவர்கள் கூட்டமாகக் கூடி எம்பெருமானைச் சேவித்ததால் கூடலூர் எனப் பெயர். கும்பகோணம்—திருவையாறு பஸ் மார்க்கத்தில் கபித்தலத்திற்கு அடுத்து மேற்கேயுள்ளது இவ்விடம். காவேரி கரை.

**26. திருக்கண்ணங்குடி :** இது திருவாரூர் – நாகூர் லைன் ஸ்டேஷனில் இறங்கி கிழக்கே 2-மைல் சென்றடையலாம். இங்கு திருமங்கையாழ்வார் 'நாகையிலிருந்து பொன் புத்த விக்ரகத்தை எடுத்து வரும்போது பகல் முழுவதும் ஒரு நிலத்தடியில் மறைத்து வைத்து இரவு ஸ்ரீரங்கம் புறப்பட்டார். அந்நில உடையானுடன் ஏற்பட்ட வழக்கு மறுநாள் முதல் தீராததாயே முடிந்தது

**27. திருக்கண்ணமங்கை** யென்பது திருவாரூருக்கு வடமேற்கே 5-மைலிலுள்ள ஓர் ஊர். பஸ் மார்க்கம் சௌகரியம். திருக்கண்ண மங்கையாண்டான் என்ற ஆசாரியர் இங்கு எழுந்தருளியிருந்தார் சந்நிதியில் தேன்கூடு உள்ளது. ரிஷிகள் தேனீக்களாய்ப் பெருமானை பூசித்தனர்.

**28, கவித்தலம்;** இது கும்பகோணம் திருவையாறு பஸ் மார்க்கத்தில் உள்ளது. தஞ்சை அரசன் அன்னசத்திரமுண்டு காவேரிக்கரையின் பத்து மைலுக்கொருதரம் அரசன் அன்ன சத்திரம் ஏற்படுத்தினன். அநுமாருக்குப் பிரத்யக்ஷமான தலமாமிது. ஆகவே கவித்தலமெனப் பெயர் பெற்றது.

**29. திருவெள்ளியங்குடி :** இது — மாயவரம் கும்பகோணம் பிரிவில் ஆடுதுறையில் இறங்கி திருப்பனந்தாள் போகும் பஸ்ஸில் சென்று 5-வது மைலிலிறங்கிச் செல்லக் கூடியது. வெள்ளி என்னும் சுக்கிரனுக்கு அருள் செய்தவிடம் இது. இச்சோழ மண்டலத்தில் சூரியனார் கோவில் தொடங்கி ஆங்காங்கு நவகிரகங்கள் தொடர்புற்ற தலங்கள் உள்ளன. இங்கு கருடன் சங்கு சக்ர ஹஸ்தத்துடன் சேவை சாதிக்கிறார். நித்திய முக்தர்களுக்கு நான்கு கையுண்டு.

30. மணிமாடக் கோயில்
31. வைகுந்த விண்ணகரம்
32. அரிமேய விண்ணகரம்
33. திருத்தேவனார் தொகை
34. வண்புருடோத்தமம்
35. செம்பொன் செய்கோயில்
36. திருத்தெற்றியம்பலம்
37. திருமணிக்கூடம்
38. காவளம்பாடி
39. திருவெள்ளக்குளம்
40. பார்த்தன்பள்ளி

30 முதல் 40 வரை பதினொரு திருப்பதிகள் திருநாங்கூர் திவ்ய தேசம் என்னப்படும். திருநாங்கூர் தங்குவதற்கேற்ற ஊர். வடுக நம்பி ராமாநுஜதாசர் இராமாநுஜகூடம் உள்ளது. திருநாங்கூரில் 30 31, 32, 34, 35, 36, ஆறு திருப்பதிகள் உள்ளன. மேற்கே ஒரு மைலில் 39-வதும் கிழக்கே ஒரு மைலில் 37-வதும் தென் கிழக்கே 2 மைலில் 40-வதும் வடகிழக்கே 2-மைலில் 38-வதும் வடக்கே 2-மைலில் 33-வதும் திருப்பதிகள் உள்ளன. சீர்காழி ஆக்கூர் பஸ் மார்க்கத்தில் அண்ணன் கோவில் என்றவிடத்தில் இறங்கினால் கிழக்கே 1½-மைலில் இவ்விடம் உள்ளது. நல்ல மணற்சாலையுண்டு. இங்கு ஒவ்வொரு வருஷமும் தை அமாவாசையன்று திருமங்கையாழ்வார் எழுந்தருளி எம்பெருமான்களை மங்களாசாஸனம் செய்தருளுகிறார். மறுநாள் 11 கருடசேவையும் ஆழ்வாருக்கு ஹம்ஸவாஹனமும் விசேஷம். அனைவரும் சேவிக்க வேண்டிய உத்ஸவம். மறுநாள் திருமங்கை ஆழ்வார், திருநகரி எழுந்தருளும் போது அங்கு கருடசேவை. இப்படி மூன்று தினங்கள் விசேஷமான உத்ஸவம். திருமங்கையாழ்வார் ஆழ்வார்திருநகரியிலிருந்து நம்மாழ்வாரை ஸ்ரீரங்கம் எழுந்தருளப் பண்ணி அத்யயனோத்ஸவம் நடத்திவைத்ததற்குச் சம்மானமாக அரங்க நகரப்பன் ஆழ்வாருக்குத் தான் கண்டருளின தை அமாவாசை மஞ்சள் குளி உத்ஸவத்தை யளித்ததாகவும் அன்று முதல் ஆழ்வார் அவ்வுத்ஸவத்தைக் கண்டருளுவதாகவும் கர்ண பரம்பரை.

## பாண்டி நாட்டு திவ்ய தேசங்கள் (18)

41 **திருமாலிருஞ்சோலை ;** இத்திவ்ய தேசம் அழகர் கோவில் எனவும் வழங்கப் பெறும். சித்திரா பௌர்ணமியன்று அழகர் மதுரைக்கு எழுந்தருளி உத்ஸவம் கண்டருளுகிறார். கூரத்தாழ்வான் பட்டர் முதலான ஆசார்யர்கள் அரச விரோதத்தால் நலியப்பட்ட போது இங்கு எழுந்தருளினர். மதுரையிலிருந்து 12 மைலில் இத்திவ்ய தேசம் இருக்கிறது. அடிக்கடி பஸ் வசதியுள்ளது.

**42. திருக்கோட்டியூர் :** இத்திவ்ய தேசத்தில் தேவர்கள் கோஷ்டியாகக் கூடி கம்ஸன் முதலான துஷ்டர்களின் நிரஸனார்த்தமாக ஆலோசித்து இவ்வெம்பெருமானை ஸௌம்ய நாராயணனே கண்ணனாக அவதரிக்கக் காரணமானமையில் கோஷ்டீபுரம் என இது அழைக்கப்படுகிறது. விட்டு சித்தரான பெரியாழ்வார் காலத்துச் சிறப்புற்றிருந்த செல்வநம்பி இத்திவ்ய தேசத்தினர். ஸ்ரீராமாநுஜரின் ஆசார்யர்கள் ஐவருள் ஒருவரான திருக்கோட்டியூர் நம்பிகள் இத்திவ்ய தேசத்தினர். அவர் தாம் மிக வருத்தப்படுத்தி உபதேசித்த திருமந்த்ரார்த்தத்தை தம் இன்னருளால் அங்குள்ள முமுக்ஷுக்களுக்கு உபதேசித்த ஸ்ரீ ராமாநுஜரைக் கொண்டாடியணைத்து 'எம்பெருமானாரே' என அழைத்தருளினார். திருப்பத்தூர் சிவகெங்கைச் சாலையில் இத்திவ்ய தேசம் உள்ளது.

**43. திருமெய்யம் :** திருப்பத்தூர் — புதுக்கோட்டைச் சாலையில் உள்ளது. பஸ் வசதியுள்ளது. திருச்சி காரைக்குடி லயனில் திருமயம் ரயில்வே ஸ்டேஷன் இருக்கிறது கோவில் கோட்டைக்குள் இருக்கிறது. இங்கு ரங்கநாதர் பெரிய திருமேனியுடன் சேவைசாதிக்கிறார். ஆதிசேஷனைக் கையால் அணைத்துக் கொண்டிருக்கிறார். ஆதிசேஷன் விஷஜ்வாலைக்கஞ்சி பிராட்டிமார் திருவடிவாரத்துக் கீழ் பக்கமாக எழுந்தருளியிருக்கிறார்கள். மதுகைடபர்களை அழித்த அவசரம். கர்பகிருகத்தின் சுவர் மேல்வரிசையில் பல தேவதா மூர்திகள் உள்ளன. விசாலமான கர்ப கிருகம். அவச்யம் சேவிக்கவேண்டிய திருமேனி.

**44. திருப்புல்லாணி :** இத்திவ்ய தேசம் ராமநாதபுரம் ரயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கே 4 மைலில் இருக்கிறது. பஸ் வசதியுள்ளது. ஆதிஸேது எனும் திருவணை மகோததி ஸ்நான கட்டம் உள்ளது. இங்கு ஸ்நாநம் செய்தால் பாவமெலாம் நீங்கும். புத்திரர்கள் இல்லாதவர்களுக்கு புத்திர பாக்யம் ஏற்படும். தர்பசயனப் பெருமாள் ஜகன்னாதப் பெருமாள் சேவை அற்புதம்.

**45. திருத்தண்காலூர் :** ஸ்ரீ வில்லிபுத்தூர் சிவகாசி விருதுநகர் சாலையில் சிவகாசிக்கடுத்து இருக்கிறது. பஸ் வசதியுள்ளது. தனிக் கோவில் தாயார் நின்ற திருக்கோலத்தில் இரண்டு கைகளுடன் சேவை சாதிப்பது விசேஷம்.

**46. திருமோகூர் :** வைகைப் பாலத்தருகில் பிரியும் மதுரை மேலூர் வழியில் மதுரையிலிருந்து 7 மைலில் உள்ளது. மதுரையிலிருந்து பஸ் வசதியுள்ளது. கோயில் வடபார்ச்வத்துள்ள தாமரைத் தடாகம்—புஷ்கரணி, தாளதாமரைத்தடமணி வயல் திருமோகூர் என நம்மாழ்வார் அநுஸந்தித்தது

**47. திருக்கூடல் :** இத்திவ்ய தேசம் மதுரை ரயில்வே ஸ்டேஷனுக்கு ½-மைல் தூரத்தில் உள்ளது. அஷ்டாங்கவிமானத்தின் 3 தட்டுகளில் இரண்டு எம்பெருமான்கள் நின்ற திருக்கோலத்திலும், சயனத் திருக்கோலத்திலும் சேவை சாதிக்கின்றனர். பெரியாழ்வார் பரதத்துவ நிர்ணயம் செய்து பாண்டியன் கட்டின கிழியைப் பெற்றதும், இந்த எம்பெருமானைப் பல்லாண்டு பாடியருளினதும் இங்கு விசேஷம்.

**48. ஸ்ரீவில்லிபுத்தூர் :** பெரியாழ்வார் ஆண்டாள் அவதரித்தருளின ஸ்தலம். ஆண்டாள், ரங்கமன்னார். பெரியதிருவடி (கருடாழ்வார்) மூவரும் ஒரே ஆஸனத்தில் எழுந்தருளி சேவை சாதிப்பது விசேஷம். பிரணவப் பொருள் விளங்குகிறது. விருதுநகர் தென்காசி லயனில் ஸ்ரீ வில்லிபுத்தூர் ரயில்வே ஸ்டேஷனுள்ளது. மதுரை திருநெல்வேலி முதலிய இடங்களிலிருந்து பஸ் வசதியும் உண்டு.

**49. திருக்குருகூர் :** ஆழ்வார் திருநகரி எனவும் வழங்கப்பெறும். நம்மாழ்வார் அவதார ஸ்தலம். ஆழ்வார் எழுந்தருளியிருந்த திருப் புளிமரம் இன்னமும் உள்ளது. வைகாசி விசாகத் திருநாள் ஐந்தாம் திருநாள் இதன் சமீபமுள்ள ஆழ்வார் உகந்து மங்களாசாஸனம் செய்தருளிய நவ திருப்பதி எம்பெருமான்கள் இங்கு எழுந்தருள ஆழ்வார் மங்களாஸசனம் செய்தருளுவதும் இரவு ஒன்பது கருடசேவை உத்ஸவமும் அவச்யம் சேவிக்கவேண்டிய உத்ஸவம். திருநெல்வேலி, திருச்செந்தூர் பிரிவில் ஆழ்வார் திருநகரி ரயில்வே ஸ்டேஷன் உள்ளது. பஸ் வசதியுமுண்டு.

**50 தொலை வில்லிமங்கலம்:** ஆழ்வார் திருநகரிக்கு கிழக்கே சுமார் 3 மைல் தொலைவில் இது இருக்கிறது. தாம்ரபர்ணியில் இறங்கி அக்கரைக்குச் (வடகரைக்குச்) சென்று சேவிக்கவேண்டும். இங்கு பக்கத்து பக்கத்து இரண்டு சன்னிதியுள்ளது. ஆகவே இது இரட்டைத் திருப்பதியென வழங்கப்படுகிறது.

**51 திருக்கோளூர் :** இது ஆழ்வார் திருநகரிக்கு கிழக்கே சுமார் 2 மைலில் உள்ளது. ஆழ்வார் தவிர தேவு மற்றறியாதவரான மதுரகவியாழ்வார் அவதார ஸ்தலம். மதுரகவி யாழ்வார் நவதிருப்பதி உத்ஸவத்தில் எழுந்தருளி நம்மாழ்வாரை மங்களாசாஸனம் செய்கிறார்.

**52 திருப்பேரை :** இது ஆழ்வார் திருநகரிக்கு சமீபம் சுமார் மூன்று மைலில் உள்ளது. பஸ் வசதியுள்ளது சன்னிதி அழகியது. ஏகாந்தமான ஸ்தலம். மனதிற்கு ரம்யமாயுள்ளது.

**53 ஸ்ரீவைகுண்டம் :** இவ்வூர் ஸ்ரீ வைகுண்டம் தாலூகா நகரம் ஆழ்வார் திருநகரிக்கு மேற்கே சுமார் 3 மைல் தாம்ரபரணி அக்கரையில் (வடகரையில்) உள்ளது

**54 திருப்புளிங்குடி :** இது ஸ்ரீ வைகுண்டத்துக்கு கிழக்கே உள்ளது. பஸ் வசதியுள்ளது.

**55. வரகுணமங்கை :** இத்திவ்ய தேசமும் முன் திவ்ய தேசத்துக்குச் சமீபமேயுள்ளது. புளிங்குடிக்கிடந்து வர குணமங்கை யிருந்து வைகுந்தத்துள் நின்று என இம் மூன்று திவ்ய தேசங்களும் சமீபமாயேயுள்ளன.

**56. பெருங்குளம் or திருக்குளந்தை :** இது ஸ்ரீ வைகுண்டத் திலிருந்து சுமார் 8 மைலில் உள்ளது பஸ் வசதியுள்ளது. பெரிய ஏரி உள்ளது பற்றி இவ்வூர் பெருங்குளம் என வழங்கப்பெறுகிறது என்னலாம்.

**57. ஸ்ரீவர மங்கை:** இது திருநெல்வேலி நாகர் கோவில் பெரிய சாலையில் உள்ளது. நாங்குனேரி என வழங்கப்பெறுகிறது வான மாமலை எனப்படுவதும் இத்திவ்யதேசமே. பஸ் வசதியுள்ளது. திருமஞ்சன எண்ணெய்க் கிணறு உள்ளது. அந்தத்தைலம் விசேஷமானது. தங்கரதம் முதலியன வாகனங்கள் பார்க்கத்தக்கவை. ஸ்ரீ வானமாமலை மடத்து ஆதீனத்தில் இத்திவ்ய தேசம் இருக்கிறது.

**58. திருக்குறுங்குடி :** இது நாங்குனேரியிலிருந்து 8 மைலில் உள்ளது. பஸ் வசதியுண்டு. இங்கு ஊருக்கு 5 மைலில் மலைமேல் நம்பி சன்னியுள்ளது வயலில் திருமங்கையாழ்வார் பரமபதித்த ஸ்தலம் ஒரு மண்டபம் உள்ளது. ஸ்ரீ ராமாநுஜர் அனுஷ்டானப்பாரை என்ற இடம் மிக ரமணீயமான இடம். நாற்புரமும் ஆறுபாய்கிறது. கைசிக ஏகாதசி த்வாதசிச் சிறப்புக்குக் காரணமான நம்பாடுவான் வ்ருத்தாந்தம் இவ்வூரில் நடைபெற்றது. நம்பாடுவான் எம்பெருமானை சேவிக்க அநுகூலமாக த்வஜஸ்தம்பம்பலிபீடம் கர்பகிருகத்துக்கு நேராகவன்றிச் சிறிது விலகியுள்ளது விசேஷம்.

## மலைநாட்டு திவ்ய தேசங்கள் (13)

1951ல் எழுதி வெளியிட்டவர் : ஸ்ரீ. உ. வே. மஹாவித்வான் பெருமாள் கோயில்

## P. B. அண்ணங்கராசாரியர்

நம் ஆழ்வார்களின் பாடல்பெற்ற திவ்யதேசங்கள் மலைநாட்டில் பதின்மூன்று உள்ளன. மலையாள தேசமே மலைநாடென்பது. மலையாளமென்பதற்கு யாது பொருளென்னில்; ழகரள கரங்களை அபேதமாகப் பலர் வழங்குவர்; வாளப்பளம், வாளித்திருநாமம் என்பன போன்ற வழக்குக்கள் பலவுண்டே; அவ்வகையில், மலையாழம் என்பதே மலையாளமென வழங்கப்பட்டு வருகின்றதாம். ஒருபுறம் மலையாகவும் மற்றொருபுறம் ஆழமான பாதாளமாகவும் காணப்படும் தேசமானதுபற்றி மலையாழமென்னப்பட்டு வந்தது. அதுவே வழக்கில் மலையாளமாயிற்று. இத்தேசத்திலுள்ள திவ்யதேசங்களை மலைநாட்டுத் திருப்பதிகளென்றே ஸம்ப்ரதாயத்தில் வழங்குவது.

நம்மாழ்வார் குலசேகராழ்வார் திருமங்கையாழ்வார் ஆகிய மூவரே மலைநாட்டுத் திருப்பதிகளைப் பாடினவர்கள். நம்மாழ்வார் பாடினவை பன்னிரண்டு திருப்பதிகள்; குலசேகராழ்வார் பாடினது ஒரு திருப்பதியே; நம்மாழ்வார் பாடின 12 திருப்பதிகளுள் மூன்று மாத்திரம் திருமங்கையாழ்வாராலும் பாடப்பெற்றவை.

திருநாவாய், திருமூழிக்களம், திருவல்லவாழ் ஆகிய இம்மூன்று திருப்பதிகள் நம்மாழ்வாராலும் திருமங்கையாழ்வாராலும் பாடப் பெற்றவை.

திருக்காட்கரை, திருக்கடித்தானம், திருவண்வண்டூர், குட்ட நாட்டுத் திருப்புலியூர், திருவாறன்விளை, திருச்செங்குன்றூர்த்திருச் சிற்றாறு, திருவனந்தபுரம், திருவாட்டாறு, திருவண்பரிசாரம் ஆகிய ஒன்பது திருப்பதிகள் நம்மாழ்வாரால் மாத்திரம் பாடப்பெற்றவை.

திருவித்துவக்கோடு ஒன்று குலசேகராழ்வாரால் மாத்திரம் பாடப் பெற்றது.

ஆக இப்பதின்மூன்று திவ்யதேசங்களும் மலைநாட்டுத் திருப்பதி களாகும். திவ்யப் பிரபந்தங்களில் மிக்க ஈடுபாடுடைய ஸ்ரீவைஷ்ணவர்

கள் தவிர மற்றையோர்கள் இத்திருப்பதிகளின் பெருமைகளையறிய மாட்டார்கள். திவ்யப்பிரபந்தம் வல்ல ஸ்ரீ வைஷ்ணவர்களிலுங் கூட இத்திவ்யதேசங்களின் அருமை பெருமைகளையறிந்து ஈடுபடுவார் மிகச் சிலரே. இத்தலங்கள் இன்னவிடத்திலிருக்கின்றன வென்பதே பலர்க்குத் தெரியாது. அது தெரிந்தாலும், நம் நாட்டுக் கோவில்கள் போலல்லாமல் ஸ்ரீ வைஷ்வணவர்களல்லாதாருடைய ஆக்ரமணத்திலிருப்பது பற்றி இவற்றை நாம் ஸேவிக்க வேண்டிய அவச்யமென்ன? என்கிற உபேக்ஷையுடையார் பலர். ஆகவே இப்பதின்மூன்று திவ்ய தேசங்களை விரும்பி ஸேவிப்பார் மிகச் சிலரேயாயினர் சிலர் என்பதேன்? இலர் என்றே சொல்லலாம்.

மலைநாட்டுத் திருப்பதிகளுள் தலைமைபெற்ற திருவனந்தபுரத்திற்குப் பதிகம் பாடா நின்ற நம்மாழ்வார் *படமுடை யரவில் பள்ளி பயின்றவன் பாதங்காண **நடமினோ நமர்களுள்ளீர்** நாமுமக்கறியச் சொன்னோம்* என்றருளிச் செய்திருப்பதை ஊன்றி நோக்குமிடத்து ஒரு அபிப்ராயம் நமக்குத் தெரியவருகிறது; கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான திவ்யதேசங்கள் போலல்லாமல் விஜாதியப்ரக்ரியையிலேயிருக்கின்ற இத்திவ்ய தேசத்தை ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஸேவிக்க விரும்பமாட்டார்களென்று பண்டே ஆழ்வார் திருவுள்ளத்தில் தோன்றவேதான் இங்ஙனே பாசுரம் அவதரித்தது. **நடமினோ நமர்களுள்ளீர் நாமுமக்கறியச் சொன்னோம்** -'ஆழ்வாருடைய ஸம்பந்தம் நமக்கு உத்தேச்யம்' என்றிருந்தீர்களாகில் நீங்கள் திருவனந்தபுரம் சென்று ஸேவிக்கவேணும் என்று நியமித்தருளுகிறாரென்று அறியக் கிடக்கிறது. இந்த நியமனம் திருவனந்தபுரத்திற்கு மாத்திரமென்று கொள்ளலாகாது; இதைச்சேர்ந்த மற்றைத்திருப்பதிகளுக்குமென்க. ஆகவே ஆழ்வாருடைய ஸம்பந்தமே நமக்கு நிதியானதென்று திண்ணமாக எண்ணுமவர்கள் மற்றைத் திவ்யதேசங்களிற் போலவே இம்மலைநாட்டுத் திருப்பதிகளிலும் அபிநிவேசங்கொள்வது அவசியமாகும். திருவரங்கம் பெரிய கோயிலில் பெரிய திருவத்யயநோத்ஸவத்தில் "நடமினோ நமர்களுள்ளீர்" என்கிற பாசுரத்தை அரையர் ஸேவிக்கக் கேட்டிருந்த ஆளவந்தார், '**நமர்களுள்ளீர்**' என்ற சொல்லின்பத்தை நோக்கியே, திருவனந்தபுரத்தை ஸேவிக்காவிடில் நமக்கு ஆழ்வார் ஸம்பந்தம் இல்லையாய்விடுமோவென்று அதிசங்கித்தே உடனே புறப்பட்டுத் திருவனந்தபுர யாத்திரை யெழுந்தருளினாரென்று காண்கிறோம்.

உண்மையில் மலைநாட்டுத் திருப்பதிகளின் ஸந்நிவேசம் தென்னாட்டுத் திருப்பதிகளிலீடுபட்ட நம்போல்வார் உகக்கும்படியான

ரீதியில் இல்லை; கோவில்களின் அமைப்பும் ஒருவிதம்; அங்குள்ளார்படி களும் விஜாதியம்; ஆனாலும் ஆழ்வார்களின் மங்களாசாஸனங்களை விசேஷமாகப் பெற்றது காரணமாகவே இத்தலத்தெம்பெருமான்கள் அடியேன்போல்வாருடைய உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் விதம் எழுதிமுடியாது. அருளிச்செயல் கோஷ்டிகளில் ஒரு குட்டநாட்டுத் திருப்புலியூர், ஒரு திருவாறன்விளை, ஒரு திருக்கடித்தானம், ஒரு திருக் காட்கரை, ஒரு திருவாட்டாறு இப்படிப்பட்ட திருப்பதிகள் விஷய மான திருவாய்மொழிகளை ஸேவிக்குங்காலங்களிலும் அவற்றைப்பற்றி உபந்யஸிக்க நேருங்காலங்களிலும் அடியேனுள்ளம் படும்பாடு அந்தர்யாமியொருவனுக்கே அறியவெளிதாம். *உள்ளெலாமுருகிக் குரல்தழுத்தொழிந்து உடம்பெலாங் கண்ணநீர்சோர நிற்கும்நிலை பரவசமாக வந்தெய்தும். அப்படிப்பட்ட திவ்யதேசங்களை இப்போது ஜனங்களுடன் கூடி ஸேவிக்க ப்ராப்தமாயிற்று.

ஸ்ரீ வைஷ்ணவர்களாய்ப் பிறந்து ஆழ்வாரருளிச் செயல்களில் அபிநிவேசமும் அவகாஹனமுமுடையரான அனைவரும் இத்திவ்ய தேசங்களை ஸேவித்தே பிறவிப்பேறு பெறவேணுமென்கிற அத்ய வஸாயங் கொண்டே அடியேன் இந்த யாத்திரைக் குறிப்பை வெளி யிடுகின்றேன். இத்திருப்பதிகட்கு வழியடைவு நன்கு தெரியுமாறு செய்வதே இவ்வெளியீட்டிற்கு முதற்பயன். மற்றும் பல விசேஷங் களையும் ஸ்வாநுபவத்தையொட்டித் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இதற்கு முன் இரண்டு முறை இத்தலங்களை அடியேன் ஸேவித்தபோது ஆழ்வார் திருநகரி வானமாமலை திருக்குறுங்குடி ஸேவித்துக் கொண்டு, திருவண்பரிசாரம் திருவாட்டாறு திருவனந்தபுரம் ஸேவித்து ஜனார்த்தநம் வழியாய் கொட்டாரக்கரையென்கிற ஸ்டேஷன் சேர்ந்து அங்கிருந்து திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு, திருவண்வண்டூர், குட்டநாட்டுத் திருப்புலியூர், திருவாறன்விளை, திருவல்லவாழ், திருக்கடித்தானம் இவை ஸேவித்துக் கொண்டு, செங்கணாஞ்சேரி, ஆலப்புழை, வழியாய் எரணாகுளம் சேர்ந்து திருக்காட்கரையும் திருமூழிக்களமும் ஸேவித்துக் கொண்டு ஷோரணூர் சேர்ந்து, அங்கிருந்து கள்ளிக்கோட்டை (கோழிக் கூடு) வழியில் திருவித்துவக் கோடும் திருநாவாயும் ஸேவித்து, போதனூர் வழியாய் காஞ்சீபுரம் சென்று சேரலாயிற்று. இப்போது நடந்த யாத்திரை அவ்வித மல்லாமல் திருவித்துவக்கோடு முதலாக நடந்தேறியது. இந்த யாத்ராக்ரமங்களை அடைவே விவரிக்கிறேன்.

**59. திருவித்துவக்கோடு** : இது குலசேகராழ்வாரால் மங்களா சாஸனம் செய்யப்பெற்ற திருப்பதி திருமிற்றங்கோடு என்று வழங்குவர். ஷோரணூர் ஜங்ஷனிலிருந்து **காலிகட்** (கோழிக்கூடு)

போகும் லயனில் மூன்றாவது ஸ்டேஷன் **பட்டாம்பி**. அங்கேயிறங்கி ஸ்டேஷன் ஸமீபத்திலேயே மிகப் பெரிய தரும சாலையில் சுகமாகத் தங்கினோம். இத்தரும சாலையானது **நிலா** என்னும் பெரிய நதியின் கரையிலுள்ளது. தருமசாலையிலிருந்தே இதற்குப் படித்துறையுள்ளது. இந்த நதி பாரதப்புழையென்றும் வழங்கப்படும். இந்நதியின் அக்கரையிலுள்ளது திருவித்துவக்கோடு; நதியின் மீதுள்ளபாலத்தின் மூலம் அக்கரை சென்றால் இத்தலத்தைக் காணலாம். இங்கு ஒரு பக்கம் சிவபிரானுடைய சன்னிதானமும் காண்கிறது.

60. **திருநாவாய் :** இது நம்மாழ்வாராலும் திருமங்கையாழ்வாராலும்மங்களாசாஸனம் செய்யப் பெற்ற திவ்யதேசம். நம்மாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். திருமங்கையாழ்வார் "**நாவாயுளானை** நறையூரிற்கண்டேனே" என்றார். வானமாமலை என்ற எம்பெருமானுடைய திருநாமமே சிரீவரமங்கலநகர்க்கு வழங்கப்பட்டதுபோல் இங்கும் நாவாய் என்று எம்பெருமானுடைய பெயரே தலத்திற்கு வழங்கப்பட்டதாக ஆசார்யஹ்ருதயகாரர் திருவுள்ளம்பற்றியதை மணவாளமாமுனிகள் விவரித்தருளியுள்ளார். வடமொழி நூல்களில் எம்பெருமானை **விஷ்ணுபோதம்** என்று நாவாயாக [தோணியாக]ச் சொல்லியிருப்பதால் இங்குள்ள எம்பெருமான் அத்திருநாமம் பெற்றானென்க.

மேழ தெரிவிக்கப்பட்ட பட்டாம்பி ஸ்டேஷனிலிருந்து நான்காவது ஸ்டேஷன் **எடக்கோலம்** என்பது. அந்த ஸ்டேஷனிலிறங்கி முக்கால் மைல் தூரம் சென்றால் நிலா நதியின் இக்கரையிலேயே இத்தலத்தைக் காணலாம். ஸன்னிதி பரமவிலக்ஷணமாகவுள்ளது. இங்கிருந்து மறுபடியும் பட்டாம்பி தருமசாலைக்கே சென்று சேர்ந்தோம்.

அங்கிருந்து **குருவாயூர்** என்கிற க்ஷேத்திரம் 20 மைல் தூரத்திலுள்ளது. இது ஆழ்வார் பாடல்பெற்ற தலமன்றாகிலும் கண்ணபிரான் அற்புதமாக ஸேவைஸாதிக்கும் திவ்யஸ்தலம். இந்த ப்ராந்தத்திலுள்ளவர்கள் இத்தலத்தை மிகமிகக் கொண்டாடுகிறார்கள். பெரிய ஸன்னிதானம். பரமவைதிகர்கள் இங்கு விளங்குகின்றார்கள். (பஸ் மார்க்கமாக வந்து) இத்தலத்தையும் கண்டு களித்தோம். 400 வருஷங்களுக்கு முன்பு திருநாவாயில் **நாராயண பட்டத்ரீ** என்றொரு பண்டிதர் இருந்தார். அவர் அலங்காரம் வியாகரணம் முதலான சாஸ்த்ரங்களில் மிகவல்லவர். அவர் இத்தலத்துப் பகவான் விஷயமாய் மிக அற்புதமாக ஆயிரத்து முப்பத்தாறு

ச்லோகங்கள் கொண்ட ஸ்தோத்ரமொன்று பணித்துள்ளார். அது நாராயணீயமென்று ப்ரஸித்தம். வியாக்யானத்தோடுங்கூட திருவனந்தபுரத்தில் தேவநாகரலிபியில் அது அச்சிடப்பட்டிருக்கிறது. பெரும்பாலும் ஸ்ரீ பாகவதமே இந்நூலாக வடிவெடுத்ததென்னலாம் சொல்நோக்கும் பொருள்நோக்கும் வெகு ஆச்சரியமாக அமைந்துள்ளது அந்நூலை நாம் ஏற்கனவே அநுபவித்திருந்தபடியாலும் இத்தலத்தைப் பற்றி மிகமிகக் கேட்டிருந்தபடியாலும் இங்கும் சென்று மகிழ்ந்தோம். இவ்விடத்தில் ஸ்தல ஜலஸௌகரியங்கள் நன்றாகவுண்டு.

61 **திருமூழிக்களம்!** குருவாயூரிலிருந்து பஸ் மார்க்கமாக இரண்டுமணி காலத்தில் **திருச்சூர்** வந்து சேர்ந்தோம். ஷொரனூருக்கும் எர்ணாகுளத்திற்கும் இடையில் திருமூழிக்களமும் திருக்காட்கரையுமாகிய இரண்டு திருப்பதிகளுள்ளன. அங்கமாலியென்கிற ஸ்டேஷனிலிறங்கி வண்டிமார்க்கமாக ஏழுமெயில் தூரம் சென்று திருமூழிக்களமடைய வேண்டும். இத்தலம் நம்மாழ்வாராலும் திருமங்கையாழ்வாராலும் மங்களாசாஸனம் செய்யப்பெற்றது. நம்மாழ்வார் பதிகம்பாடியுள்ளார். திருமங்கையாழ்வார் *முனியே திருமூழிக்களத்து விளக்கே* என்று பெரிய திருமொழியிலும், *பின்னுரு வணங்குஞ்சோதி திருமூழிக்களத்தானாய் முதல்வனே* என்று திருநெடுந்தாண்டகத்திலும், *மூழிக்களத்து விளக்கினை என்று பெரியதிருமடலிலும் துளுக்கைகள் பாடியுள்ளார். ஸந்நிதி பக்கத்தில் பெரியநதி பெருகுகின்றது. அதன் கரையிலேயே வஸதி ஸௌகரியமும் ஆனந்தமாகவுண்டு.

(ஆதிசங்கராசாரியருடைய ஜன்ம பூமியான காலடி யென்கிறவிடம் அங்கமாலி ஸ்டேஷனுக்கு 4 மைல் தூரத்திலுள்ளது.) திருமூழிக்களத்திலிருந்து மறுபடியும் அங்கமாலி ஸ்டேஷன் வந்து சேர்ந்தோம்.

62. **திருகாட்காரை!** இது நம்மாழ்வாரால் பாடப்பெற்ற திவ்ய தேசம். *உருகுமால் நெஞ்சம் உயிரின்பரமன்றிப் பெருகுமால் வேட்கையும் என் செய்கேன் தொண்டனேன், தெருவெல்லாங் காவி கமழ் திருக்காட்கரை மருவிய மாயன்றன் மாயம் நினைதொறே* என்கிற முதற்பாட்டும், *வாரிக்கொண்டு உன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்ற வென்னையொழிய என்னில் முன்னம்பாரித்து, தானென்னை முற்றப்பருகினான், காரொக்கும் காட்கரையப்பன் கடியனே* என்கிற பத்தாம் பாட்டும் கல்நெஞ்சையுமுருக்கும்.

ஸன்னிதியருகில் தடஞ்சுனையுள்ளது. அதன் கரையில் வஸதி ஸௌகரியமுள்ளது. [அங்கமாலி ஸ்டேஷனுக்கு மூன்றுவதான இடப்பள்ளி ஸ்டேஷனிலிருந்து 3, 4 மைல் சென்று சேரவேண்டிய தலமிது. திருக்காட்கரையப்பனை ஸேவித்துவிட்டு மறுபடியும் இடப் பள்ளி ஸ்டேஷனுக்கே வந்து சேர்வது.

இங்கிருந்து எர்ணாகுளத்தோடு ரைல் பாதை முடிகிறபடியால் மூன்றுவது ஸ்டேஷனாகிய எரணாகுளம் (south, சென்று சேர்ந்து அங்கு அரைமைல் தூரத்தில் ஸமூஹமடம் என்கிற பரமபாவனமும் மிக விசாலமுமான இடத்தில் சென்று தங்கினோம்.

**திருக்கடித்தானம், திருவல்லவாழ் திருவண்வண்டூர், திருப் புலியூர், திருவாறன் விளை, திருச்சிற்றாறு.** இந்த ஆறு திருப்பதிகளில் திருவல்லவாழொன்று மாத்திரம் நம்மாழ்வாருடையவும் திருமங்கை ஆழ்வாருடையவும் மங்களாசாஸனம் பெற்றது. (இருவரும் பதிகம் பாடினவர்கள்.) மற்ற ஐந்து திருப்பதிகளும் நம்மாழ்வாரொருவரு டைய மங்களாசாஸனம் பெற்றவை. இந்த ஆறு திருப்பதிகளையும் மோட்டார் ஸௌகரியங்கொண்டு ஒரே நாளில் ஸேவித்து முடித்தோம். காலால் நடந்து சென்று ஸேவித்தாலும் ஒரே நாளில் எளிதாக ஸேவிக்கலாம். இவ்வழிகளில் பஸ் ஓட்டமும் விசேஷமாக உண்டு.

திருவாறன் விளையொன்று மாத்திரம் திருச்செங்குன்றூரிலிருந்து ஏழுமைல் தூரம் சென்று ஸேவிக்க வேண்டும். மற்ற ஐந்து தலங் களும் செங்கணூச்சேரியிலிருந்து ஏழெட்டு மைல்களுக்குட்பட்டவை. மூன்று மைல் தூரத்திலுள்ளது திருக்கடித்தானம்.

63 **திருக்கடித்தானம் :** *திருக்கடித்தானமுமென்னுடைச் சிந்தை யும் ஒருக்கடுத்துள்ளேயுறையும் பிரான் கண்டீர்* என்பது முதலான பாசுரங்களினால் நம்மாழ்வாருடைய அபிநிவேசம் இத்தலத்தில் மிக மிக விளங்கும். ஸன்னிதியின் ஸந்நிவேசம் வெகு ரமணீயமாகவுள்ளது. கோவில் வாசலில் மிகப்பெரிய தடாகமுண்டு. மேளதாளங்களுடன் திருவாராதனம் சிறப்பாக நடக்கிறது. மிகப் புனிதமான ஸந்நிவேசம்.

64 **திருவல்லவாழ் :** திருக்கடித்தானத்திலிருந்து ஆறு மைல் தூரத்திலுள்ளது இத்தலம். இது பெரியவூர். **திருவல்லா** என வழங்கப்பட்டுவருகின்றது. நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் பதிகம் பாடியுள்ளனர் ஸன்னிதி மிகப் பெரியது. கோவில் வாசலில் பெரிய புஷ்கரிணியும் தருமசாலையுமுண்டு. செல்வம் மிகுந்த ஸன்னிதி இது. இவ்வூரில் மோட்டார்கார் ஸௌகரியம் மிகவுண்டு.

65 **திருவண்வண்டூர்** ! இதுவும் நம்மாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்றது. *தேறு நீர்ப்பம்பை வடபாலைத் திருவண்வண்டூர்* என்னப்பட்ட பம்பையாறு இத்தலத்திற்கு அருகில் இல்லை; (அது திருவாறன் விளைக்கு அருகிலுள்ளது) திருவல்லவாழிலிருந்து 6 மைல் தூரத்திலுள்ள தலம் திருவண்வண்டூர். இங்கு *மாறில் போரரக்கன் மதிள் நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகனார்க்கு* என்று நம்மாழ்வாராலும், *வைகல் திருவண்வண்டூர் வைகுமிராமனுக்கு* என்று மணவாளமாமுனிகளாலும் போற்றப்பட்ட சக்ரவர்த்தி திருமகனாருடைய ஸேவை மிக ஆனந்தம்.

66. **திருப்புலியூர்** ! குட்டநாட்டுத் திருப்புலியூர் என்பது இதுவே *கருமாணிக்க மலைமேல் என்கிற திருவாய்மொழியினால் நம்மாழ்வார் இத்தலத்தில் காட்டியுள்ள அன்பும் ஆர்வமும் வாசாமகோசரம். ஆதலால் ஸன்னிதியில் ஸந்நிவேசம் ஸாதாரணமாகவுள்ளது. இங்கு பிரம்மோத்ஸவம் நடந்துகொண்டிருக்கையில் சென்று ஸேவிக்க ப்ராப்தமாயிற்று. உயிரோடுள்ள யானையின்மீது அர்ச்சகர் பெருமானுடன் விற்றிருந்து கோவிலை வலம் வருவதுதான் பிரம்மோத்ஸவம். திருவண்வண்டூரிலிருந்து ஆறுமைல் தூரமுள்ளது இத்தலம். சிறிய திருமடலில் *பேராலிதண்கால் நறையூர் திருப்புலியூர்* என்றது சோழநாட்டிலுள்ள சிறுபுலியூரைச் சொன்னதாகக் கொள்ளாமல் இத்திருப்புலியூரைச் சொன்னதாகக் கொள்ளும் பக்ஷத்தில் இத்தலத்திற்குத் திருமங்கையாழ்வாருடைய பாடலுமுண்டென்று தேறும்.

67. **திருவாறன் விளை** ! இத்தலமும் நம்மாழ்வாருடைய மங்களாசாஸனம் பெற்றது. மிகப்பெரிய ஸன்னிதி இது. ஸ்வர்ணமயமான த்வஜஸ்தம்பமும் மிகப்பெரிது. இவ்விடத்திலும் பிரம்மோத்ஸவம் நடந்துகொண்டிருந்தது. ஸேவார்த்திகளான பக்தர்களின் திரள் அபரிமிதமாகக் காணப்பட்டது. இங்கும் (உயிருள்ள) யானையின்மீது நித்யபலிபேரஸ்வாமியை எழுந்தருளச்செய்து திருவீதிவலம் வருவது தான் பிரம்மோத்ஸவம். (**ஆரமுளா** என்று இத்தலம் வழங்கப்படுகிறது.) இத்திருப்பதி மிகவும் ரமணீயமாய் ஆகர்ஷமாயிருக்கின்றது. ஸன்னிதியின் பின்னே பம்பையாறு நிர்மலமாகப் பெருகுகின்றது.

68. **திருச்சிற்றாறு**: இதுவும் நம்மாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற தலம் ''திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு'' என்று பாடப் பட்டிருந்தாலும் **திருச்சிற்றாறு** என்பதே திவ்யதேசத்தின் திருநாமம். **செங்கன்னூர்** என்று வழங்கப்படுகிற ஊர் பெரிதாகக் காண்கிறது. அங்கே பெரிய சிவாலயமுள்ளது. ஒருபுறத்தில் இத்

திருப்பதியுள்ளது. மலைநாட்டுத் திருப்பதிகளுள் இத்தலமும் திருப் புலியூருமே ஏழைமையான நிலையில் காணப்படுவன. இவை யிரண்டுக்கும் நம்மாழ்வாருடைய பாசுரங்கள் மிகப் பெரியனவாதலால் அந்தப் பெருமையைக்கொண்டு இத்தலமாதான மடைந்தோம்.

திருவல்லா என்கிற திருவல்லவாழிலிருந்தும் செங்கனுஞ்சேரி யிலிருந்தும் பஸ்கள் இந்த ப்ராந்தத்தில் ஓடிக்கொண்டே யிருப்பதால் திருக்கடித்தானம் முதலான இவ்வாறு திருப்பதிகளையும் சிரமமில்லாதபடி ஸேவிக்கலாம். கடைசியாகச் செங்கன்னூர் [திருச் செங்குன்றூர்] வந்து சேர்ந்து அங்கே திருச்சிற்றாற்றுத் திருப்பதிக்கு இரண்டொரு பர்லாங்கு தூரத்திலுள்ள தருமசாலையில் இனிதாகத் தங்கினோம். இங்கிருந்து திருவனந்தபுரம் சேரவேண்டும். அதற்குக் **கொட்டாரக்கரா** என்கிற ஸ்டேஷன் சேர்ந்து அங்கிருந்து ரைல் மார்க்கமாகச் செல்வது. செங்கன்னூரிலிருந்து கொட்டாரக்கரா 30 மைல் தூரமுள்ளது. பஸ் போக்குவரத்து விசேஷமாகவுண்டு.

**ஜனார்தந க்ஷேத்ரம்** இது ஆழ்வார் பாடல் பெறாததாயினும் சிறந்த புராண ஸ்தலம். ச்ராத்தங்களில் '**ஸ தேவ, ஸ்ரீ ஜனார்தந ப்ரீயதாம்**'' என்பது இத்தலத்து ஸ்வாமியைப்பயே யென்பர். ஸன்னிதி மேட்டுநிலத்தில் மிக அழகாகவுள்ளது. வல்கல க்ஷேத்ரமெனப்படு கிறது. **வற்கலா** என்றே ஸ்டேஷன். கொட்டரக்கராவிலிருந்து இரண்டு மணி காலத்தில் இத்தலமடையலாம். இத்தலம் கடற்கரை யிலுள்ளது. ஸன்னிதி வாசலில் மிகப் பெரிய தடாகமும் தடாகதீரத் தில் மிகப்பெரிய தருமசாலையுமுள்ளது. அதிரமணீய வாஸயோக்ய ஸ்தலமிது வென்று தோன்றிற்று.

**69 திருவனந்தபுரம் :** ஜனார்த்தனத்திலிருந்து இரண்டு மணி காலத்தில் அடையக் கூடியதலமிது. நம்மாழ்வாருடைய பாடல் பெற்றது இதுவும். இத்தலத்தைப்பற்றி நாம் அதிகம் எழுத வேணுமோ? கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான நம் நாட்டுத் திருப்பதிகளோடொக்க விளங்குமித்தலத்தின் பெருமை உலகமறிந்ததே. ஸ்வர்ணமயமான உத்ஸவமூர்த்திக்குத் திருமஞ்சனம் தினந்தோறும் ஸுப்ரபாத காலத்திலேயே மிக அற்புதமாக நடந்து வருகிறது. இவ்வூரில் நம் நாட்டு ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஆதரவாகத் திருவேங்கடமுடையான் ஸன்னிதி ஸ்ரீ அனந்தபத்ம நாபனுடைய ஆலயத்திற்கு அருகிலேயே நவீனமாக அமைந்துள்ளது. இந்த ஸன்னிதியில் குலசேகராழ்வாரும் வேதாந்த தேசிகனும் ஸேவை ஸாதிக்கின்றனர். இவர்களுக்கு வருஷோத்ஸவங்களும் சிறப்பாக

நடந்து வருகின்றன. இந்த ஸன்னிதிக்கருகே தீக்ஷிதவீதியில் மிக விசாலமான வேதபாடசாலையில் ஸௌகரியமாகத் தங்கிருந்தோம்.

70. **திருவாட்டாறு:** நம்மாழ்வாருடைய மிக விலக்ஷணமான ஈடு பாட்டுக்கு ஆஸ்பதமான திவ்ய தேசமிது. ஸன்னிதி மிகப் பெரிது. வெகு அற்புதமான ஸன்னிவேசம். திருவனந்தசயனத்திற்போலவே இங்கும் த்வாரத்ரயத்தாலே முகநாபிபாதங்களின் ஸேவை. அனந்த பத்மநாபனுடைய இடையழகுக்குத் தோற்றதன்று இதுவும். ஸன்னிதியைச் சுற்றிப் பரமபவித்திரமான நதி [வட்டாறு] பெருகுமழகு மிக நன்று. ஸன்னிதியின் அமைப்பு மிகவும் அதிசயிக்கத் தக்கது. ஊரும் பெரிதே திருவட்டாறு என்பர்கள். ஸன்னிதியருகிலேயே வஸதி ஸௌகரியமுளது. திருவனந்தபுரத்திலிருந்து பஸ் மார்க்கமாய் இரண்டு மூன்று மணி காலத்தில் அடையக்கூடிய தலம் இது. இத்தலத்தை விட்டுக்கிளம்ப மனமேயில்லை.

71 **திருவண்பரிசாரம் :** (திருப்பதிசார மென்பர்கள்.) இது நம்மாழ்வாருடைய திருத்தாயாரான உடைய நங்கையாரின் அவதார ஸ்தலம். அந்த மாதரசியின் திருமாளிகையையும் இங்குக் காட்டுகிறார்கள். அது இப்போது ஒரு பஜனைமடமாக விளங்குகின்றது. இத்திருப்பதி மலைநாட்டுத் திருப்பதிகளில் கணக்கிடப் பெற்றாலும் பாண்டிநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாகவே எண்ணத்தக்கதாயுள்ளது. வாசலில் மிகப் பெரிய தடாகமும் ஊரின் வளமும் ஸன்னிதியின் அமைப்பும் நெஞ்சைக் கவர்கின்றன. இங்கு ஸேனை முதலியார் மூலமூர்த்தியாகவும் நம்மாழ்வார் உத்ஸவமூர்த்தியாகவும் ஆராதிக்கப் படுகிறார்கள். *வருவார் செல்வார் வண்பரிசாரத்திருந்த என் திருவாழ்மார்பற்கு* என்ற திருவாய்மொழிப் பாசுரத்தின்படி இத்தலத்தெம்பெருமானை இங்குள்ளார் திருவாழ்மார்பனென்றே வழங்கிவருகின்றார்கள். இப்பெருமானுக்கு உத்ஸவம் நடக்கிறபோது ஐந்தாறு வேளைகளில் நம்மாழ்வார் உடன் எழுந்தருள்வதுண்டாம். இங்குள்ள பிறமதத்தவர்களும் நம்மாழ்வாரிடத்தில் மிக்க பக்தி பூண்டிருக்கிறார்கள். நம்மாழ்வார் லைப்ரெரி, நம்மாழ்வார் வாசகசாலை என்று நிறுவியுள்ளார்கள். திருவாட்டாற்றிலிருந்து இரண்டு மணி காலத்தில் பஸ் மார்க்கமாய் அடையக் கூடிய தலமிது. நாகர் கோவில் ஸமீபம்.

இங்கிருந்து பஸ் மார்க்கமாகவே இரண்டு மூன்று மணி காலத்தில் திருக்குறுங்குடி சேர்வது இவ்வளவோடு மலைநாட்டுத் திருப்பதி யாத்திரை முடிவு பெறுகின்றது.

## நடு நாடு (2)

72 **திருவஹீந்திரபுரம் :** தென் ஆற்காடு ஜில்லா தலைநகரமான கடலூருக்குச் சமீபமுள்ளது. வண்டி பஸ் வசதி உண்டு. வேதாந்த தேசிகன் இங்கே வெகுகாலம் எழுந்தருளியிருந்தார். தேசிகன் யோகத்தில் ஸாக்ஷாத்கரித்த ஹயக்ரீவன் ஸந்நிதி உள்ளது.

73 **திருக்கோவலூர் :** விழுப்புரம் திருவண்ணாமலை பிரிவில் திருக்கோவலூர் ரயில்வே ஸ்டேஷன் உள்ளது. பஸ் வசதியுமுண்டு. ஓர் நாள் இரவு முதலாழ்வார்கள் மூவர் மழைக்கு ஒரு வீட்டு இடைகழியில் தங்க அங்கு, அவர்களை நெருக்கிக் கொண்டு வந்து எம்பெருமான் ஸேவை ஸாதித்தான்.

## தொண்டை நாடு(22)

காஞ்சிபுரம் சங்க காலந் தொட்டுப் பழமையானதும் பிரஸித்தமானதுமான பட்டணம். இந்நகரத்தில் 74-வது திவ்ய தேசம் முதல் 87-வது திவ்ய தேசம் வரை 14 திவ்ய தேசங்கள் உள்ளன.

74 **திருக்கச்சி அத்திகிரி :** திவ்ய தேசங்களுள் மூன்றாவது ஸ்தானத்தைப் பெற்றது. திருக்கச்சி நம்பிகள், ஸ்ரீராமாநுஜர் போன்ற ஆசாரியார்கள் இங்கு எழுந்தருளியுள்ள தேவப் பெருமாளுக்கு கைங்கர்யம் செய்திருக்கின்றனர். மிகவும் பெரியதாயுள்ள இக்கோயில் சின்ன காஞ்சி எனப்படும் சின்ன காஞ்சிபுரத்தில் உள்ளது.

75. **திரு அட்டபுயகரம் :** வரதராஜர் தேரடிக்குச் சமீபம் இந்த ஸந்நிதி உள்ளது. மூலவர் எட்டுத் திருக்கைகளுடன் ஸேவை ஸாதிக்கிறார்.

76 **திருத்தண்கா :** திபப்ரகாசர் என்பது எம்பெருமான் திருநாமம். தூப்புல் அக்ரகாரமும் இங்கேதான். வேதாந்த தேசிகனும், ப்ரதிவாதி பயங்கரம் அண்ணாவும் அவதரித்தது இங்கேயே.

77. **திருவேளுக்கை :** முன் திவ்ய தேசத்துக்குச் சமீபமாயே இதுவும் உள்ளது. வேள்—இருக்கை என்பது மருவி வேளுக்கை என வழங்கப்பட்டிருக்கலாம். காமாஸிகா என்பது வடமொழி.

78. **திருப்பாடகம் :** பெரிய காஞ்சிபுரத்தில் ஏகாம்பரேசுவரர் கோவிலுக்குச் சமீபம் இந்த ஸந்நிதி உள்ளது. மூலவர் பெரிய திருமேனியுடன் வீற்றிருந்த திருக்கோலமாக ஸேவை ஸாதிக்கிறார்.

துர்யோதனுதியர் பொய்யாஸனமிட்டபோவ அதன் கீழ் பள்
ளத்துள்ள வீரரையும் மற்றவரையும் அழியச் செய்தார், தம் பெ
திருமேனி விச்வரூபம் கொண்டு. அந்த அவசரம் இங்கு.

79. திருநீரகம் : உலகளந்தப் பெருமாள் ஸந்நிதியில் இது
80. திருஊரகம்; 81. திருக்காரகம், 82. திருக்கார்வானம் ஆ
திவ்ய தேசங்களும் உள்ளன. கலாபகாலங்களில் தனி திவ்ய தே
களாயிருந்தவை அழிந்திருக்கலாம்.

83. நிலாத்திகழ் துண்டம் : இவ்வெம்பெருமான் ஏகாம்ப
வரர் கோவில உட் ப்ரகாரத்தில் எழுந்தருளியிருக்கிருர்.

84. திருவெஃகா : பொய்கையாழ்வார் அவதார ஸ்தலம். ச
இலக்கியங்களிலும் இது ப்ரஸித்தமானது. திருமழிசையாழ்
சொற்படி தம் பைந்நாகப் பாயைச் சுருட்டிக்கொண்டு கிளம்பி
மறுபடி வந்து சயனித்தும் செய்தமையின் சொன்ன வண்ணம் செ
பெருமாள் என எம்பெருமான் திருநாமம் ஏற்பட்டது. யதோக்த
என்பது வடமொழி.

85. திருக்கள்வனூர் : இவ்வெம்பெருமான் காஞ்சி காமா
யம்மன் ஸந்நதிக்குள் கர்பக்ருகத்துக்குப் பக்கத்தில் எழுந்தருளியி
கிருர்.

86. திருப்பவளவண்ணம் : இது பெரிய காஞ்சிபுரத்
உள்ளது. இதன் சமீபம் பச்சை வண்ணர் ஸந்நிதியுமுள்ளது.

87. பரமேச்வர விண்ணகரம் : வைகுண்டப்பெருமான் கோ
என வழங்கப் பெறுவது இதுவே. இங்கு கி. பி. 5, 6-ம் நூற்றாண்
பல்லவச் சிற்பங்கள் அழகியன. பழம் பொருள் காட்சிப் பாதுகா
இலாகாவினரால் இது பாதுகாக்கப் பெறுகின்றது.

88. திருப்புட்குழி : காஞ்சிபுரம் ஆற்காடு பாதையில் உள்ள
பஸ் வசதியுண்டு. செட்டி சத்திரம் எனவும் இவ்விடத்துக்குப் பெ
வறுத்தபயறு முளைக்கும் மரகதவல்லித் தாயார் அருள் என உ
வழக்கு.

89. திருநின்றவூர் : சென்னை ஸெண்ட்ரல் அரக்கோண
பிரிவில் திருநின்றவூர் ரயில்வே ஸ்டேஷன். ஸ்டேஷனிலிருந்து ஸந்
ஒரு மைல் ஸந்நிதிக்கு மேற்கே பெரிய ஏரி உள்ளது. திரும
திருப்பதி பெரிய கேள்விஜீயர் ஆதீனத்திலுள்ளது இச்சந்நிதி.

90. **திருவெவ்வுளூர் :** இது அஹோபில மடத்து ஆதீனத்திலுள்ளது. திருவள்ளூர் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 2 மைல். பஸ் வசதியுண்டு. ஒவ்வொரு அமாவாஸ்யையும் இங்கு விசேஷம். தை அமாவாஸ்யை மிக விசேஷம்.

91. **திருநீர்மலை :** சென்னை எழும்பூர் தாம்பரம் பிரிவில் பல்லாவரம் ஸ்டேஷனில் இறங்கி மேற்கே 3 மைலில் இத்திவ்ய தேசம் சேரலாம். சென்னையிலிருந்து பஸ் வசதியுமுண்டு.

92. **திரு இடவெந்தை :** சென்னையிலிருந்து கேளம்பாக்கம் சென்று அங்கிருந்து கோவளம் வழியாக இங்கு வரலாம். செங்கல்பட்டிலிருந்து கேளம்பாக்கம் கோவளம் வழியாக இங்கு பஸ் செல்கிறது. முட்டுக்காடு வழியிலும் செல்லலாம். இங்கு எம்பெருமான் ஸ்ரீவராகரூபியாய் நிலமடந்தையை இடது பக்கம் வைத்துக் கொண்டுள்ளமையின் இடவெந்தை என இத்திவ்ய தேசம் பெயர் பெறுகிறது.

93. **திருக்கடன்மல்லை :** பூதத்தாழ்வார் அவதார ஸ்தலம் இது. மகாபலிபுரம் மாமல்லபுரம் எனப்படுவதும் இதுவே. இங்கு பல்லவ காலத்துச் சிற்பங்கள், கல்ரதங்கள் விசேஷமாக காணத்தக்கன. உள்நாட்டிலிருந்தும், வெளி நாட்டிலிருந்தும் தினம் பலர் வந்து சிற்பங்களைக் கண்டு வியந்து செல்கின்றனர். சென்னையிலிருந்தும், செங்கல்பட்டிலிருந்தும் பஸ் வசதியுண்டு.

94. **திருவல்லிக்கேணி :** இது சென்னை மாநகரின் தென் பாகத்து ஒரு பிரிவு. சென்னை மாநகரின் தென்பாகத்துப் பிரிவு. இந்த ஸந்நிதி யின் கிழக்கு பக்கம் பார்த்தஸாரதியும் மேற்கு பக்கம் தெள்ளிய சிங்கரும் ஸேவை தருகின்றனர். மாடமாமயிலைத் திருவல்லிக்கேணி என இதன் தெற்கேயுள்ள மயிலை பேயாழ்வார் அவதாரஸ்தலம்.

95. **திருக்கடிகை :** அரக்கோணமிருந்து பஸ்ஸில் இங்கு வந்து சேருவது சுலபம். அரக்கோணம், பெங்களூர் பிரிவில் சோளிங்கர் ரயில்வே ஸ்டேஷன் உள்ளது ஸ்டேஷனுக்கும் ஊருக்கும் 9 மைல். வண்டி, பஸ் வசதியுண்டு. பெரிய மலையில் அழகிய சிங்கரும் சின்ன மலையில் ஹநுமாரும் (சிறிய திருவடியும்) எழுந்தருளியுள்ளனர். ஹநுமார் மூலவர் சதுர்புஜராய் சங்கசக்ர தாரியாய் ஸேவை ஸாதிக்கிறார். இவர்கள் சந்நிதியால் பேய் முதலியன நீங்குகின்றன. இங்கு பிரம்ம தீர்த்தம் எனும் தக்கான் குளம் தீர்த்தம் விசேஷம். தீர்த்தக்கரையில் தொட்டையாசார்யரென்றும் மஹாசார்யருக்கு தேவப்

பெருமாள் உதய கருட ஸேவை ஸேவை சாதித்தருளினுர். அங்
ஸந்நிதியில் மூலவர் கருடாருடராய் எழுந்தருளியிருக்கிறுர்.

## வட நாட்டுத் திருப்பதிகள் (12)

96 **திருமலை திருப்பதி :** கீழே கோவிந்தராஜன் ஸந்நி உள்ளது. சமீபத்தில் 2 மைலில் திருச்சானூர் (திருச்சுகனூர்) என வழங்கப்படும் அலமேலுமங்காபுரம் உள்ளது. திருமலைக்கு கீழ் திருப்பதியிலிருந்து பஸ் மார்க்கம் உள்ளது. கலியுகதெய்வம் ஸ்ரீ வேங்கடாசலபதி. புரட்டாசித் திருவோணத்தன்று எம் பெரு மாளுக்குத்தி ருத்தேர் தீர்த்தவாரி.

97 **அஹோபிலம் :** இது நந்தியால் என்னுமிடத்திலிருந்து 3 மைலிலுள்ளது. சென்னை பம்பாய் பிரிவில் கடப்பா ரயில்வே ஸ்டேஷனிலிறங்கி ஆள கட்டா வழியாக பஸ்ஸில் செல்லலாம் வண்டி வசதியுமுண்டு. இங்கு 9 நரஸிம்ஹன் எழுந்தருளியிருக்கிறா அவர்களுள் மாலோலர் என்பவர் அஹோபிலமடத்து ஜீயர் ஸ்வா யால் ஆராதனம் செய்யப் படுவபர்.

98 **அயோத்தி .** இதற்கு கல்கத்தா டேராடூன் லயனி அயோத்யா ரயில்வே ஸ்டேஷன் இருக்கிறது. சக்கரவர்த்தித் திருமகன் (ராமபிரான்) அவதரித்த ஸ்தலம். முக்தி தரும் நகர் ஏழினுள் இது ஒன்று.

99. **நைமிசாரண்யம் :** அயோத்யா ஹரித்வாரம் பிரிவி பாலமு ஜங்ஷனில் இறங்கிச் செல்ல வேண்டும். ஸ்டேஷன் பெயரு இதுவே. நிம்ஸார் என்றும் வழங்கப்படும்.

100. **சாளக்கிராமம் :** நேபாள நாட்டின் தலைநகரமான காட் மாண்டு வழியாக பாதசாரியாகச் சென்று சேவிக்கவேண்டும். கண்ட நதியில் ஸாளக்ராம ஸ்ரீமூர்த்தியாக எம்பெருமான் ஆவிர்பவிக்கிறுன்

101 **பத்ரிகாச்ரமம் :** ஹ்ருஷீகேசத்திலிருந்து பஸ்ஸில் பிப்ப கோட்வரை சென்று அங்கிருந்து கால் நடையாக 39 மைலில் இத்தல சென்று சேர வேண்டும். நரநாராயணனுய் எம்பெருமான் இங் திருவஷ்டாக்ஷரமந்திரத்தை வெளியிட்டருளினுன்.

102 **கங்கைக் கரைகண்டம் :** தேவப்ப்ரயாகையென இது வழங்கப் பெறும். ஹ்ருஷீகேசத்திலிருந்து பஸ் வசதியுள்ளது. அல நந்தா பாகிரதீ ஸங்கம ஸ்தானம் இது.

103. **திருப்பிரிதி :** இது பிப்பல் கோட்டிலிருந்து பதரி செல்லும் வழியில் உள்ளது. ஜோஷிமட் எனவும் வழங்கப்பெறும். பதரியிலிருந்து இது 18 மைல். பனி காலம் 6 மாதம் பதரி உத்ஸவ எம்பெருமானை இங்கு எழுந்தருளப் பண்ணி திரு ஆராதனம் நடைபெறுவதாகக் கேள்வி.

104 **வடமதுரை :** சென்னை டில்லி ரயில்வே லயனில் மட்ரா ரயில்வே ஸ்டேஷன். இங்கு கண்ணபிரான் அவதரித்தருளினன்' முக்தி தரும் நகர் ஏழினுள் இது ஒன்று இங்கிருந்து 106-வது திவ்ய தேசம் சமீபமாயுள்ளது. சேவித்து வரலாம், கோவர்த்தனம் விருந்தாவனமும் இதன் சமீபமே.

105 **துவாரகை :** இத்தலத்திற்கு மதராஸ் பம்பாய் அஹமதாபாத் விராமகாம் ராஜ்கோட் ஜாம் நகர் வழியாகச் செல்லலாம். ஸ்டேஷனிலிருந்து ஸந்நிதி 2 மைல், பேட்த்வாரகைக்குப் படகில் சென்று வரலாம்.

106. **திருவாய்ப்பாடி :** கோகுலம் என்பதுவும் இதுவே கண்ணபிரான் இங்கு பால்ய சேஷ்டிதங்களை நடத்தியருளினன்.

107. **திருப்பாற்கடல் :** இது எம்பெருமானது வ்யூஹாவதார ஸ்தலம். ஸனகாதி ரிஷிகள் ப்ரம்ஹாதி தேவர்கள் கண்டு சேவிக்க முடியும். நம்மால் முடிவதன்று.

108 **பரமபதம் :** இது ஆசார்யஸமாச்ரயணம் பெற்று முமுக்ஷுக்களான நமது இத்தேகவியோகமான பிறகு நாம் சென்று சேவிக்க முடியும். "வந்தவர் எதிர் கொள்ள மாமணி மண்டபத்து அந்தமில் பேரின்பத் தடியரோடிருந்தமை" என்கிறபடி நித்யமுக்தர்களோடு ஒரு கோஷ்டியாகவிருந்து இருவருமான சேர்த்தியிலே அவர்களது குணாநுபவமடியாக ஸ்ரீய: பதிக்கு எல்லாவித கைங்கர்யங்களையும் எப்பொழுதும் எல்லாப்படியாலும் செய்து கொண்டு ஆநந்த பரிபூர்ணனாயிருத்தல் இங்கேதான்.



# வடநாட்டு யாத்திரை

## P. B. அண்ணங்கராசாரியர்

## யாத்ரா ரஸிகர்களான பக்தர்களுக்கு உபகாரமாக தெரிவிப்பது

அடியேன் வடநாட்டுத் தென்னாட்டு யாத்திரையைப் பலகால் செய்திருப்பதோடு யாத்திரையைப் பற்றி நான்கு பாஷைகளிலும் நூல்கள் அச்சிட்டிருந்தேன். அவற்றால் பலர் மிகமிக வுபகாரங் கொண்டதாகத் தெரிவித்துமிருந்தார்கள். அப்புத்தகங்கள் இப்போது கிடைப்பதில்லை. எனவே இப்போது ஸ்ரீதாசார்யன் ஆண்டு மலருக்காக மீண்டும் வெளியிடுகிறேன். திவ்யதேச யாத்திரையில் குதூஹலமுள்ள பக்தர்களுக்கு இது மிகவும் உதவியளிக்கும். வடநாட்டில், பண்டரிபூர் புனா, பாம்பே வழியாகச் சென்று கல்கட்டா ஜகன்னாதம் ஸ்ரீ கூர்மம், ஸிம்ஹாசலம், கோதாவரி, க்ருஷ்ணா வழியாகத் திரும்புகிற க்ரமம் ஒன்று. க்ருஷ்ணா கோதாவரீ, ஸிம்ஹாசலம், ஸ்ரீகூர்மம், ஜகன்னாதம் கல்கட்டா வழியாகச் சென்று பாம்பே வழியாகத் திரும்புகிற க்ரமம் மற்றொன்று. இங்கு அடியேன் தெரிவிப்பது கல்கட்டா வழியாகச் சென்று, பாம்பே வழியாகத் திரும்பும் க்ரமம், 75 நாள் அல்லது மூன்று மாதங்களில் சுகமாக வடநாட்டுத் திருப்பதி யாத்திரையைச் செய்து முடிக்கலாம். இரண்டொரு மாதத்திலுமாக லாம்.

**நெல்லூர், க்ருஷ்ணா, கோதாவரி:** சென்னைக்கு ஸமீபத்தில (110 மைல தூரத்தில்) உள்ளது நெல்லூர். இங்கு வடபெண்ணை யாற்றின் கரைமேல் ஸ்ரீ ரங்கநாதனுடைய ஸேவை முன்னம் ப்ராப்தமாகலாம். இங்கிருந்து விஜயவாடா சேர்ந்து க்ருஷ்ணாநதி ஸ்நானம் செய்து, அங்கிருந்து ஆறுமைல் தூரத்திலுள்ள மங்களகிரியில் பானகந்ருஸிம்ஹனை ஸேவித்து (விஜயவாடா ஸ்டேஷனிலிருந்து கோதாவரீ ஸ்டேஷனையடைந்து அங்கே கோதாவரீ ஸ்நானம் செய்து ஸிம்ஹாசலம் சேர்வது.

**ஸிம்ஹாசலம்:** ஸிம்ஹாசலமென்றே ஸ்டேஷனுள்ளது. வால்டேரிலிருந்தும் போகலாம். ஏறக்குறைய ஆயிரம் படிகளேறி ஸேவிக்க வேண்டிய இந்த க்ஷேத்திரத்திற்குச் சிலவாண்டுகளாய் பஸ் மார்க்க முள்ளது. ஸன்னிதி வெகு விஸ்தாரமாக அமைந்திருக்கின்றது.

இவ்விடத் தெய்வப்பெருமாளுக்கு வருஷத்திற்கு லக்ஷம் ரூபாய்க்கு மேற்பட்ட வருமானமென்று சொல்லப்படுகிறது. அதற்குத் தக்கபடி விசேஷமான போகங்களைக் கண்டருளுகிறார். ஸ்ரீ பாஷ்ய பகவத் விஷயாதிகாரிகள் பலர் இங்கு தினப்படியாக வந்து க்ரந்த பாராயணங்கள் செய்து தேவஸ்தான ஸன்மானம் பெறுகிறார்கள். தேசாந்தரிகளுக்கு வஸதி ஸௌகரியங்கள் விசேஷமாகச் செய்து கொடுக்கப்படுகிறது. இத்தலத் தெய்வப்பெருமாளுடைய திருமேனி ஸேவை வருஷத்தில் ஒருநாள் மட்டுமே [அக்ஷயத்ருதியையன்று] பக்தர்களுக்கு ப்ராப்தமாகும். மற்ற நாட்களில் சந்தனக் காப்பினால் திருமேனி முழுதும் கவசமணியப் பெற்றிருக்கும். *தெழி குரலருவித் திருவேங்கடத்திற் போலவே இங்கும். அருவிநீர் வீழ்ச்சி விசேஷமாக இருப்பதனால் தீர்த்த ஸௌகரியத்திற்குக் குறைவில்லை. இத்தலத்தில் நீழ தேவஸ்தானச் சார்பில் ஸம்ஸ்க்ருத வித்யாப்ரவசனங்கள் விசேஷமாக நடைபெற்று வருகின்றன.

**ஸ்ரீ கூர்மம்:** ஸிம்ஹாசலத்திலிருந்து ஸ்ரீகூர்மக்ஷேத்ரம். சிகாகுலம் ரோட் என்கிற ஸ்டேஷனில் இறங்கி ஸ்ரீகாகுலம் வழியாய் பதினெட்டாவது மைலில் பஸ்மார்க்கமாக ஸ்ரீகூர்மம் அடையத்தக்கது. இங்கு அழகிய அக்ரஹாரமுண்டு. ஸ்ரீகூர்ம நாதனுடைய ஸன்னிதி விசாலமாகவும் அதிரமணீயமாகவும் அமைந்துள்ளது. ஸன்னிதியைச் சார்ந்து விளங்கும் ஏரி போன்ற தடாகம் கண்ட காட்சியிலேயே ஸகலதாபங்களையும் ஆற்றக்கூடியது. இத்தலத்தில் எம்பெருமானார் சிலகாலமெழுந்தருளியிருந்து பரிஷ்காரங்கள் செய்தருளினதாகச் சொல்லப்படுகிறது. இஃது உண்மையானதென்றே நம்புவதற்கு இடமுள்ளது. நித்யாராதந நித்யோத்ஸவாதிகள் விலக்ஷண வைகரியாக நடந்து வருகின்றன. சிகாகுலம் ரோட் என்னுமிடத்திற்கு அமதாலவலஸா என்று பெயர். இங்கு ஸ்டேஷனுக்கு அதிஸமீபத்தில் ஸ்ரீவேங்கடரமண ஸ்வாமி ஸன்னிதியொன்று நவீன காலத்தில் ஏற்பட்டிருக்கிறது. மிகவுமழகாக அமைந்திருக்கும் இந்த ஸன்னிதியில் ரைல் வண்டியை எதிர்பார்த்து ஸௌகரியமாகத் தங்கியிருக்கலாம். தீர்த்த வஸதி நன்றாகவுண்டு.

**ஸ்ரீ ஜகன்னாதம்:** இதுவே புரீஜகன்னாதமெனப்படும். ஸ்ரீகூர்மத்திலிருந்து (கடற்கரையில) புரீஸ்டேஷன் சேர்ந்து ஸமீபத்தல் இந்த க்ஷேத்திரம் சேர்வது. வெகு புராதனமும் அதிவிசாலமுமான மந்திரம். இங்கு ஸ்ரீ வைஷ்ணவமடங்கள் இருபதுக்கு மேலுண்டு. ஸன்னிதி ஸமீபத்தில் எமார மடம், த்ரீமாலீமடம், உத்தரபார்சுவமடம் தங்குவதற்கு ஸௌகரியம், ஊரைச் சுற்றித் தீர்த்த விசேஷங்கள் பலவுண்டு.

**கல்கத்தா நகரம்:** ஸ்ரீ ஜகந்நாதத்திலிருந்து கல்கத்தா நகரம் (Howra) சேர்வது. க்ஷேத்ர தீர்த்தயாத்ரா ரஸிகர்களுக்கு இந்நகரில் கர்த்தவ்ய மொன்றுமில்லையாகிலும், தர்சநீயமான மஹாநகர மாயிருப்பதாலும், இதைக் கடந்தே மேல் யாத்திரை செல்ல வேண்டியிருப்பதனாலும் இங்கே இரண்டொருநாள் தங்கியிருக்கலாம். இங்கே ஸ்டேஷன் ஸமீபத்தில் கங்கை பெருகுகின்றதெனினும் அது வைதிகர்கள் உகக்கும் சுத்த கங்கையென்னப் பொருத்தமில்லை. இந்த நதியின் கரைக்கு (ஜகந்நாதகாட்) என்று பெயர். இங்கு பல தேவஜீ மந்திர மென்கிற கோவில் நூதன பரிஷ்காரங்கள் செய்யப்பட்டு வாஸயோக்ய மாக விளங்குகின்றது. ஆனாலும் 5, 6 மைலுக்கு அப்பாலுள்ள மிக விசாலமான லக்ஷ்மீ நாராயண மந்திரத்தில் தங்கலாம் இந்த ஸன்னிதி ஸமீபகாலத்தில் ஏற்பட்டது. ஸ்ரீவைஷ்ணவயாத்ரிகள் மிகவும் ஸௌகரியமாகத் தங்கியிருப்பதற்கு உரியது. ஸமீபத்தில் தீர்த்த வஸதியுமுண்டு.

**கயா க்ஷேத்ரம்:** கல்கத்தாவிலிருந்து கயைக்கு வந்து சேர்வது. வடதேச யாத்திரை செய்பவர்கள் இவ்விடத்தையும் காசியையும் பதரிகாச்ரமத்தையுமே முக்கிய லக்ஷ்யமாகக் கொள்ளுவர்களென்பதைப் பற்றி நாம் எழுதவேணுமோ? கயாச்ராத்தத்தை இங்கு நடத்தி வைக்கத் தென்னாட்டுப் புரோஹிதர்கள் விசேஷமாக இங்குக் குடிக்கொண்டிருக்கின்றனர் அவர்களே ஸ்தல வசதிகள் செய்து கொடுக்கிறார்கள் தர்மசாலைகளுமுண்டு. பல்குநீ நதிக்கரையில் ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் காதி, அனந்தாசார்ய ஸ்வாமியினுடைய ஸ்தானம் [ஸ்ரீ ராமாநுஜமடம்] மிகவும் ஸௌகரியமாக அமைந்திருக்கின்றது. பல்குநீ நதியில் நிர்லமான தீர்த்தம் சிறு ப்ரவாஹமாகப் பெருகிக்கொண்டிருக்கும். நதிக்கரையில் கயா தீசனுடைய ஸந்நிதி விசாலமாகவும் ரமணீயமாகவும் விளங்குகின்றது. இங்கே தான் விஷ்ணுபாதம்,

**காசீ க்ஷேத்ரம்:** கயையிலிருந்து காசிக்கு வந்து சேர்வது. இந்நகரின் பெருமையைப்பற்றியோ, இங்குள்ள பட்டு பீதாம்பரக் கடைகளில் சிறப்பைப் பற்றியோ அபூர்வமாகத் தெரிவிக்கவேண்டியதுண்டோ? எல்லாவகைச் சிறப்புகளிலும் நிகரற்று விளங்குமிந்நகரில் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்கள் அருமைப்பட்டிருக்கிறார்களென்பதொன்றே குறை. இதர மதஸ்தர்களில் பரிகணித வித்வான்களென்று மதிக்கக்கூடியவர்கள் எண்ணிறந்துள்ளார்கள். வித்யாலயங்களும் அபரிமிதங்கள். பதினான்கு வித்யைகளுக்கும் (அல்லது) அறுபத்து நான்கு கலைகளுக்கும் ப்ரபல ப்ரசாரம் காணவேணுமானால் அது இம் மஹாநகரமொன்றில்தான் காணலாகும். கங்கை ஸம்ப்ர

[illegible]த்தமாகப் பெருகிக்கொண்டிருக்கிறது. யாத்ரிகர்கள் தங்குவதற்கு கங்கைக் கரையிலேயே அனேக ஸ்தானங்களுண்டு. நாகபூர் போஸ்லா நாட்டில் போஸ்லா மந்திரம் ஸர்வ ப்ரகாரத்தாலும் ரமணீயமானது.

**ப்ரயாக க்ஷேத்ரம் :** காசியிலிருந்து ப்ரயாகக்ஷேத்ரம் (Allahabad) போவது. இங்கு த்ரிவேணீ ஸ்நானம் விசேஷமென்பது ஜகத் ப்ரஸித்தம். "கங்கா யமுநயோர் மத்யே யத்ர குப்தா ஸரஸ்வதீ" என்கிற ப்ரயாக மாஹாத்மிய வசனத்தின்படி கங்கையும் யமுனையும் ஸரஸ்வதியும் கூடுமிடமாதலால் த்ரிவேணீ ஸங்கமமெனப்படுகிறது. கங்கா யமுனை களின் சேர்க்கை ப்ரத்யக்ஷமாகத் தெரிகிறது. ஸரஸ்வதி மட்டும் அந்தர்வாஹினி. வடநாட்டில் இந்த ஸ்தலத்திற்கு விசேஷ மாஹாத்மியம் சொல்லப்படுகிறது. பரத்வாஜ மஹர்ஷியின் ஆச்ரமும் இங்குள்ளது. தாராகஞ்ஜ் என்னுமிடம் இவ்விடத்தில் கங்கைக்கு ஸந்நிஹிதமாதலால் இங்கே தங்குவது. இங்கு த்ரிதண்டி மடம் என்னுமிடம் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குப் புகலிடம். தர்மசாலை களும் பலவுண்டு பரமார்த்த பூஷண, கோவிந்தாச்சாரி யென்பவர் ஸ்ரீ வைஷ்ணவர்களின் வஸதிக்காக மிக விசாலமான மந்திரமொன்று [illegible] அமைத்திருக்கிறார். ஸுகமாகத் தங்கலாம். கீடகஞ்ஜில் [illegible]வர்களின் வேணீ மாதவ மந்திரமுள்ளது.

**ரீவா நகரம் :** இது யாத்ராஸ்தலத்தில் சேர்ந்ததன்றாகிலும் விருப்பமுள்ளவர்கள் சென்று வரலாம். இங்கு லக்ஷ்மணமாக என்னும் [illegible]ரமணீய மஹோத்யானத்தில் ஸ்ரீ வைஷ்ணவ பீடாதிபதியாய் [illegible] ஸம்பத்துடன் விளங்கிவரும் மஹாத்மாவுளர். தமஸா நதியும் இங்கே ப்ரவஹிக்கின்றது ஸம்ஸ்க்ருத கலாசாலையுமுண்டு.

**சித்திரகூடம்:** அடுத்தபடியாக சித்ரகூட க்ஷேத்ரம் சேர்வது. "[illegible]பகச் சித்ரகூடோசௌ கிரிராஜோபமோ கிரி:, யஸ்மிந் வஸதி காகுத்ஸ்த: குபேர இவ நந்தநே" என்று ஸ்ரீ ராமாயண ப்ரஸித்தமான அதிசயம் இன்னமும் ப்ரத்யக்ஷமாகக் காணலாம் படியே விராஜின்றது. இவ்விடத்து ஸந்நிவேசம் பரமபாவநம், பரமரமணீயம் என்னுமத்தனை. "ரமணீயம் ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்ய மநோ யதா" என்றதற்கு முக்யலக்ஷ்யமாக மந்தாகிநி ப்ரவஹிக்குமழகும், ப்ரதக்ஷிணார்ஹமாகப் பர்வதராஜம் ப்ரகாசிக்கு மழகும், கரையிலே ஸுகவாஸ யோக்யமாக தர்மசாலைகள் திகழு மழகும், மிகமிக ஆகர்ஷகமாயிருக்கும். இவ்விடத்தில் எத்தனை நாள் வஸித்தாலும் திருப்தியே பிறவாது. அடியேன் 17 தடவை ஸேவித்த ஸ்தலம் இது.

**திருவயோத்யை**: சித்ரகூடத்திலிருந்து திருவயோத்யை சேர்வ ஸப்த புண்ய புரிகளைப் பரிகணனை செய்யும்போது "அயோத்யா மது மாயா" என்று இத்தலமே யன்றோ முற்பட்டிருக்கின்ற ஸ்ரீவைகுண்டத்தின் ஒரு கண்டமே மண்ணுலகில் இந்நகராக வந் தோன்றியதாய்ச் சொல்லப்படுமதில் அதிவாத சங்கையே யில் இங்கு அநுபாவ்ய ஸ்தலங்களாக அனேக இடங்கள் காட்டப் கின்றன. 'த்ரேதாயுகமெங்கே! கலியுகமெங்கே!' என்று சிலர் சொ நேர்ந்தாலும், அந்தந்த ஸ்தல விசேஷங்களைக் காணும்போது ஆஸ்தி களுக்கு மஹத்தான ப்ரதிபத்தியே உண்டாகிறது. ஸந் ப்ரவாஹிநியான ஸரயூநதியின் கரையிலே ஸத்குரு ஸதன மென் மிடத்தில் வெகு ஸௌகரியமாகத் தங்கியிருக்கலாம். கீர் மூர்த்தியான ஸ்ரீமத் யோகி பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமி அவருடைய தேவியாரும் இத்தலத்தில் விலக்ஷணமாக அமைத்தி கின்ற சக்ரவர்த்தித்திருமகனார் ஸன்னிதி தென்னாட்டினர்க்குப் புக மாகவுள்ளது. இந்த ஸன்னிதிக்கு **அம்மாஜீ மந்திரம்** என்றே ப்ரஸித்

**கான்பூர்**: திருவயோத்யையிலிருந்து கர்ணபுரி யென்னுமிட சேர்வது. இது மிகப் பெரிய நகரம். சுத்த கங்கையில் குடைந்தாட இவ்விடம் வருவார்கள். இவ்விடத்தில் ஸ்ரீவைஷ்ணவ மந்திரங் பலவுள்ளன. அவற்றுள் **ப்ரயாக நாராயண** (திவாரீ) மந்திரம் மி பெரிது. கங்கைக்குச் சிறிது சமீபத்திலுள்ளது. இந்த மந்தி மஹாதநிகச்ரேஷ்டரான ஸ்ரீ வைஷ்ணவோத்தமர்களால் பரிபாலிக் பட்டு வருவதால் ஸ்ரீவைஷ்ணவ யாத்ரிகர்களுக்கு விசேஷித்து ஆதர அளிக்கப்படுகிறதிங்கு. ஸ்டேஷன் சமீபத்தில், பண்டித ஹரிநாராய ஸ்வாமியின் மந்திரமும் வாஸயோக்யமானதே.

**நைமிசாரண்யம்**: கான்பூரிலிருந்து (பாலாமு ஜங்ஷன் வழியா நைமிசாரண்யம் வந்து சேர்வது. இந்த க்ஷேத்திரத்தின் மாஹாத்மிய அபரிமிதமாகச் சொல்லப்படுகிறது. நான்முகக் கடவுள் பகவா ஸாக்ஷாத்கரிக்க நெடுங்காலம் தவம்புரிய, அரண்யரூபியாக எம்பெ மான் ஸேவைஸாதித்ததாகவும், இதில் த்ருப்தி பெருமல் மறுபடி தவம்புரிய, தீர்த்த ரூபியாக ஸேவை ஸாதித்ததாகவும் சொல்லப் கிறது. தீர்த்த ரூபியாக ஸேவை ஸாதித்தவிடம் புஷ்கரமென்று அரண்யரூபியாக ஸேவை ஸாதித்தவிடம் நைமிசாரண்யமென்று பிரஸித்தமானது.

நைமிசாரணியமென்று ப்ரஸித்தமான இவ்வாரண்யத்திலே பல மஹர்ஷிகள் நெடுங்காலம் வஸித்துப் பல புராணங்க இயற்றினதாகத் தெரியவருகிறது. இங்கே கோமதீ நதி ப்ரவஹி

கின்றது. இத்தலத்திற்குப் பதிகம் பாடியருளிய திருமங்கையாழ்வார் பாசுரந்தோறும் "நைமிசாரணியத்துளெந்தாய்!" என்று பாடி யிருக்கையாலே இங்கே ஒரு ஸன்னிதியிருப்பது போலவும் அந்த ஸன்னிதியிலுள்ள அர்ச்சா மூர்த்தியையே ஆழ்வார் மங்களாசாஸனம் செய்திருப்பது போலவும் பலர் நினைப்பதுண்டு. உண்மை அப்படி யன்று. அரண்ய ரூபியான பகவானையே 'நைமிசாரணியத்துளெந்தாய்' என்று விளித்துப் பாடினபடி. ஸமீபகாலத்தில் இவ்விடத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸ வானமாமலை ஸ்வாமி திருவடி ஸம்பந்திகளான உத்தராதி ஸ்ரீவைஷ்ணவர்களால் ஒரு சிறிய ஆலயம் நிர்மாணம் செய்யப்பட்டிருக் கிறது. அதில் நம்மவர்களுக்கு வசதி ஸௌகரியமுண்டு. வேறு தர்ம சாலைகளுமுண்டு. இத்தலம் மிகவும் விஸ்தாரமான அரண்யம். அங்கெல்லாம் ஸஞ்சரித்து வருவதுதான் நைமிசாரண்ய ஸேவை யெனப்படும். யதா சக்தி கோமதி நதியின் தீரம் வரையில் ஸஞ்சரித்து வரலாம்.

**ஹரித்வாரம்:** நைமிசாரணியத்திலிருந்து ஹரித்வாரம் சேர்வது. ஸப்த புண்யபுரிகளைக் கணக்கிடுகின்ற "அயோத்யா மதுரா மாயா" இத்யாதி ச்லோகத்தில் 'மாயா' என்றது ஹரித்வாரத்தையேயென்பர். ஹரித்வார ஸமீபத்தில் மாயா என்று தனியே யொரு க்ஷேத்ரமுள தென்பாருமுளர். இத்தலம் நாளடைவில் வெகு ரமணீயமான நகரமாய்விட்டது. உண்மையில் வடநாட்டில் இவ்வளவு ரமணீயமும் பாவனமுமான க்ஷேத்திரம் வேறில்லையென்று சொல்லலாம். ஒரு நாளும் வற்றாத ப்ரவாஹமுடைய கங்கை இங்கே நிர்மலமாகப் பெருகு கின்றது. அதன் கரையிலே தேவேந்திர பவனம் போன்ற பல மஹாபவனங்கள் வரிசையாக அமைக்கப்பட்டிருக்கின்றன. வேறு பல வீதிகளும் மாடமாளிகைகளும் மலிந்து விளங்குகின்றன. சென்னை உப்பட்டூர் ஆழ்வார் செட்டியாருடைய மிகப் பெரிய தர்மசாலை 'மதராஸி தர்மசாலை' என்று வழங்கப்படுகிறது. தென்னாட்டினர்க்குப் பெரும்பாலும் இங்கே வசதி சௌகரியமுள்ளது. இதனருகிலுள்ள பிர்லாஹவுஸ் என்னும் விசாலமான ஸுந்தரமந்திரத்திலும் தங்கலாம்.

**ஸ்ரீ பதரிகாச்ரம யாத்திரை:** மூலஸ்தானமாகிய ஹரித்வாரத்தில் நின்று 193-வது மைலில் உள்ளது பதரிகாச்ரமம். இடையில் பதினைன்காவது மைலிலுள்ளது ஹ்ருஷீகேசக்ஷேத்ரம். காலால் நடந்தே வதரிவணங்கச் செல்பவர்கள் இங்கிருந்தே நடந்து செல்ல ஆரம்பிக்கின்றார்கள். ஆனால் இங்கிருந்து வதரியளவும் மோடார் பஸ் போக்குவரத்து ஏற்பட்டுப் பல வருஷங்களாயின. பஸ்ஸில் போவதைக் காட்டிலும் நடந்து செல்வதே நன்று. வழி முழுதும் அனேகமாய் கங்கையைக் கண்டுகொண்டே போவோமாயினும் அதன்

தீர்த்தம் நமக்கு எளிதாகாது. சிலசில விடங்களில் மாத்திர கங்கையிலிறங்க வழி கிடைக்கும். மற்ற இடங்களிலெல்லாம் மலையருவி நீர்ப்பெருக்கு வாய்த்திருக்குமழகு வாய்கொண்டு வருணிக்கமுடியாதது ஸ்நாநபாநாதிகளுக்கு முற்றிலும் இந்தத் தாரையே உபயோகமாகும் கண்ட காட்சியிலேயே ஸகல தாபங்களுமறும்.

வழியில் எங்கு சிரமம் தோன்றினாலும் அங்குத் தங்கியிருக் வசதிகளுண்டு. சில இடங்களில் இரண்டு மூன்று மைல் தூரத்திலும் சில இடங்களில் நாலைந்து மைல் தூரத்திலும் தங்குமிடங்கள் அழகா ஏற்பட்டிருக்கின்றன. அவை சட்டிகளென வழங்கப்பெறும். பெரு பாலும் மேல்மாடமுள்ள மண் மாளிகைகளாகவே தென்படு ஆங்காங்கு பலசரக்கு மாளிகைகளுமுண்டு. தளிகைக்குப் பாத்தி வகைகளும் அன்புடனளிக்கின்றார்கள். சிலவிடங்களில் புளி தயி காய்கறி கிடைப்பதரிது.

ஹ்ருஷீகேசத்திலிருந்து நாற்பத்தைந்தாவது மைலில் தேவப்ரயா மென்றுள்ளது இது பாகீரதிக்கும் அலகநந்தாவுக்கும் ஸங்கமமா மிடம். பெரியாழ்வார் திருமொழியில் (4·7) *தங்கையை மூக்கு தமையனைத் தலையும்* என்கிற திருமொழியில் மங்களாசாஸன செய்துள்ள **கண்டமென்னுங் கடிநகர்** இத்தலமே சொல்லுகிறார்க இங்கிருந்து இருபதாவது மைலிலுள்ள **கீர்த்திநகர்**. அங்கிருந்து மூன் மைல் தூரத்திலுள்ளது ஸ்ரீநகர். இங்கிருந்து 110 மைலிலுள்ள ஸ்ரீபதரிகாச்ரமம். பிபல்கோடியிலிருந்து கருடகங்கா, பாதாளகங் வழியாய் ஜோஷிமட் சேர்வது ஜோஷிமட் என்கிறவிட திருமங்கையாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற [**பிரி** என்கிற திவ்யதேசம் என்கிறார்கள்.

ஜோஷிமட்டிலிருந்து 19 மைல் தூரத்திலுள்ளது ஸ்ரீப காச்ரமம். ஊருக்கு **பத்ரீநாத்** என்று பெயர். இது மிகச் சிறியவூ கங்கையின் கரையிலேயே ஸ்ரீபதரீநாதரின் திவ்ய ஸந்நிதியுள்ள ஸந்நிதி மிகப் பெரிதுமன்று; மிகச் சிறிதுமன்று. *நர நாரண யுலகத்து அறநூல் சிங்காமை விரித்தவனெம்பெருமான்* என் திருமங்கையாழ்வாரும், "தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமா நின்று திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான்" என்று பிள் லோகாசார்யரும், "திருமந்த்ரத்தை ஸ்ரீபதரி காச்ரமத்திலே...... ப்ரகாசிப்பித்தான்" என்று மணவாள மாமுனிகளும் அருளிச் செ படியே எம்பெருமான் நாராயண மூர்த்தியாய் விபவாவதாரஞ் செ தருளின விடமென்கிற ஒப்புயர்வற்ற ஏற்றம் பெற்றது இந்த திவ் தேசம். இப்பெருமை பற்றியே இத்தலம் உத்தேச்யம். ஸந்நிதி

ஸ்ரீமந் நாராயணன் எழுந்தருளியிருக்கிறார். ஸாளக்ராம சிலா மயமாய் பத்மாஸநபந்தமுள்ளதாய் யோக முத்திரையோடு கூடின இரண்டு திருக்கைகளை யுடையதான திருமூர்த்தி [ஸ்ரீமந் நாராயணன்] நமக்கு ஸேவை ஸாதிப்பது. இடப்புறத்தில் நரநாராயண சிலா மூர்த்திகள். வலபுறத்தில் கருத்மான், குபேரன்.

மலைநாட்டு நம்பூதிரிகள் திருவாராதனம் ஸமர்ப்பிக்கிறார்கள். அர்ச்சகர்களை 'ராவல்' என்று இங்கு வழங்குவர். தினப்படியாய் காலையில் திருமஞ்சனம் வெகு விபவமாக நடைபெறுகின்றது. நாற்பத்தொரு ரூபாய் கட்டணம் செலுத்துபவர்கள் திருமஞ்சனமுட்பட ஒருவேளை யுபயக்காரர்களாவர்கள். அவர்கள் அருகிலிருந்து திருமேனியைப் பரிபூர்த்தியாக ஸேவித்து மற்றெல்லாமும் ஸேவித்து மகிழ ப்ராப்தமாகிறது. செவிக்கினிய வேத கோஷத்துடனும் ஸ்தோத்ர ரத்னம் முதலிய பல ஸ்தோத்ரங்களின் பாராயணங்களுடனும் ஸகலோபசார ஸமேதமாக நடைபெறுகின்ற திருமஞ்சனம் அலங்கார வகை திருவாராதனம் முதலியவை மனோஹரங்களாயிருக்கின்றன. ஐந்து ரூபாய் செலுத்தினால் ஸஹஸ்ரநாமார்ச்சனை. ஒரு ரூபாய்க்கு அஷ்டோத்தர சதநாமார்ச்சனை. ஒரு ரூபாய்க்கு ஹாரத்தி என்றிப்படி நிபந்தனைகள் ஏற்பட்டிருக்கின்றன. பனியின் பாதை இங்கு அதிகமே ஆதலால் உடலுக்குப் போதுமான கவசங்கள் இருக்கவேண்டும். அர்ச்சகர் முதலான ஸன்னிதி கைங்கர்ய பாரர்களுங்கூட நாலைந்து சொக்காய்களணிந்தே கைங்கர்யங்களை நடத்தி வருகிறார்கள். உத்தரீயமும் போர்த்துக் கொள்ளாமல் உலாவுகின்ற மஹாத்மாக்களும் சிலருளர்.

இங்குத் தீர்த்தமாடுவதற்கு எம்பெருமான் தானே பரம க்ருபையுடன் பண்ணிவைத்திருக்கிற ஸௌகரியம் அற்புதமானது. ஸந்நிதி எதிரில் தப்தகுண்டமென்று ஒரு சிறு குளமுள்ளது. அதில் இரவும் பகலும் ஓய்வின்றி உஷ்ண தீர்த்த தாரை இயற்கையாகவே அமோகமாகப் பெருகிக்கொண்டே யிரா நின்றது. அதிலிருந்து வெளியிற் பெருகிச் செல்லுகின்றது. இந்த தீர்த்தம் பெருமானுடைய திருவடி யோரத்தில் நின்றுமே பெருகுவதாகத் தோன்றுகிறது. அடியார்களின் பாங்குக்காக அக்நி பகவானுக்கு ஸ்ரீமந் நாராயணன் தானே கட்டளையிட்டு இங்ஙனே நடத்தி வருகிறபடி.

இந்த தப்தகுண்டத்தில் அமிழ்ந்தே அனைவரும் நீராடுகிறார்கள். பின் மாலை நான்குமணி முதலாகவே நீராடுவதும் பெருமானை ஸேவிப்பதுமான காட்சி பரமபுனிதம். இந்த தப்தகுண்டம் அங்கு இல்லையென்றால் ஒருவரும் ஒருநாளும் அங்கு வாஸம் செய்ய இயலாது.

தேஹம் பொறுக்குமளவான சூடு பொருந்திய இந்த தீர்த்தத்தின் பக்கத்திலேயே தேஹம் பொறுக்கமுடியாத குளிர்ச்சி வாய்ந்த கங்கையும் ஆச்சரியமாகப் பெருகுகின்றது. அதில் குடைந்தாடுவார் மிகச் சிலரே.

ஸந்நிதியின் ஸமீபத்திலேயே ப்ரஹ்மகபாலமுள்ளது. அதில் பிண்டப்ரதான முறைகளும் நடைபெற்று வருகின்றன. மலையின் ஒரு சிறு பாறையே கபாலத்தின் ஆக்ருதியாகக் காண்கிறது. இத்தலத்தில் முக்கியமான தீர்த்தங்கள் ஐந்து- தப்த குண்டம், நாரதகுண்டம், கூர்மதாரா, ப்ரஹ்லாத தாரா, ரிஷிங்கா என்பவை. கூர்மதாரையின் தீர்த்தமே பெரும்பாலும் இவ்விடத்தில் அன்னபானங்களுக்குக் கொள்ளப்படுகிறது. தப்தகுண்ட தீர்த்தம் வாயினுட் செல்லாது. நியதமாக வதரியில் வாழ்பவர்கள் ப்ரஹ்லாத தாரையில் நீராடுகிறார்கள். இது ஆரோக்யமளிப்பதாம். இந்த தீர்த்தம் அநுஷ்ணசீதம்.

தேவப்ரயாகையிலுள்ள சாஸ்த்ரிகளே இங்கும் தீர்த்த புரோஹிதராய் ஸ்ரீவைஷ்ணவ அப்யாகதர்களுக்கு இடமளித்து ஸௌகரியங்கள் செய்து கொடுக்கிறார்கள். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. [ஜகத் ப்ரஸித்தவைபவரான] ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகளால் ப்ரதிஷ்டாபிதமான எம்பெருமானார் ஸன்னிதியே இங்கு ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் புகலிடம். இனி ஹரித்வாரம் திரும்புவது.

**குருக்ஷேத்ரம் :** ஹரித்வாரத்திலிருந்து குருக்ஷேத்ரம் சேர்வது. கீதையின் உபக்ரமம் "தர்ம க்ஷேத்ரே குரு க்ஷேத்ரே" என்பதாதலால் இந்த க்ஷேத்ரத்தின் பெருமையைப்பற்றி நாம் எழுதவேண்டியது முண்டோ? 7, 8 மைல் தூரம் சென்று, தரிசிக்கவேண்டிய பல விசேஷங்கள் இங்கு உண்டு. கீதை அவதரித்தவிடம், பீஷ்மாசார் சரதல்பகதரான விடம், ஸூர்யகுண்டம், பாணகங்கை முதலான பலவிடங்கள் இத்தலத்திற்குச் சிறப்பானவை. ரைல் ஸ்டேஷனுக்கு அருகாமையில் ஸௌகர்யமான தருமசாலையுள்ளது. பிரவாமந்திரம் புதிதாக ஏற்பட்டுள்ளது.

**புதுடில்லி :** குருக்ஷேத்திரத்திலிருந்து டில்லி மாநகர் சேர்வது. இது லௌகிகமான மஹாநகரமென்று தோன்ற நின்றாலும் பாண்டவர்கள் ஆண்ட ராஜதானியாகையாலும், கண்ணபிரான் பலகால் பாதாரவிந்த விந்யாஸம் பண்ணின இடமாகையாலும் தூய பெருநீர் யமுனை பெருகுமிடமாகையாலும் இதுவும் புண்யபுரியாகவே கருதத் தக்கது. இவ்விடத்தில் பிர்லாமந்திரமும் அதைச் சேர்ந்த

மகத்தான தருமசாலையும் யாத்ரிகர்களுக்கு மிகவும் ஸௌகரியமான வஸதியாகும். உத்யோகார்த்தமாகத் தென்னாட்டிலிருந்து பலவாயிர மஹான்கள் இம்மஹாநகரத்தில் ப்ரதிஷ்டிதர்களா யிருக்கிறார் களென்பது ப்ரஸித்தமன்றோ.

**மதுரை ப்ருந்தாவனாதிகள் :** டில்லியிலிருந்து வடமதுரை வந்து சேர்வது. ப்ருந்தாவன கோகுல கோவர்த்தனாதிகள் ஸேவிக்கவேணும். ப்ருந்தாவனத்தில் ஸ்ரீகோவர்த்தனம் ஸ்வாமி பூலோக வைகுண்டமாக அமைத்திருக்கிற மஹாஸந்நிதியில் ராஜபவனத்திற் போல் தங்கி யிருக்கலாம்.

**ஆக்ரா (Agra) :** மதுரா ப்ருந்தாவன கோகுல கோவர்த்தனங் களை ஸேவித்துக்கொண்டு ஆக்ரா நகரம் பார்க்கலாம். க்ஷேத்ர யாத்ரா ப்ரகரணத்தில் இந்நகர்க்கு வரவேண்டிய ப்ரஸக்தி இல்லை.

ஆக்ராவில் மிகச் சிறந்த கண்காட்சியுள்ளது. 'தாஜ் மஹால்' என்று சொல்லுவர்கள். சில நூற்றாண்டுட்கு முன்பிருந்த ஒரு மொகலாய் அரசன் (ஷாஜஹான்) தன்னுடைய மனைவியின் (மும்தாஜ்) ஸ்மாரக சின்னமாகக் கட்டுவித்த கட்டிடம் இது. ஆச்சரியமான ஸந்நிவேசம் என்று இவ்வளவுதான் எழுதலாம். துருஷ்க ப்ரபுவின் இடம் என்கிற ஒரு அவத்யமே இதற்குச் சொல்லத்தக்கதாகவுள்ளது. பகவத் விபூதியென்று நினைத்துப் பார்க்குமளவில் இதற்கீடானவொரு ஸந்நிவேசம் இல்லையென்று சொல்லலாம். இதன் ஸமீபத்தில் யமுனையாறு பெருகுகின்றது *தூய பெருநீர் யமுனைத் துறைவனுக்கு இப்படிப்பட்ட ரம்யமான ஹர்ம்யமொன்று அமையவேண்டுமென்று ஆசாஸிக்கலாம். இவ்வளவு அதிசயமாகச் சொல்லப்படுகிற இந்த இடத்தையும் பரமாணுவாக்கும்படியான மற்றொரு கட்டிடம் சிலவாண்டுகளாக இந்நகரின் ஸமீபத்தில் தயால்பாக் என்னும் ஸ்தலத்திலேயே அமைக்கப்பட்டு வருகிறது அது பல கோடி ரூபாய்ச் செலவில் அமைகின்றதென்றும் முடிவுபெறுவதற்கு இன்னும் பத்தெட்டு வருஷங்களாகுமென்றும் 15 வருடங்களுக்கு முன் கேள்விப் பட்டோம். இந்நகரில் ஸ்டேஷன் ஸமீபத்திலேயே தருமசாலை யுள்ளது.

**ஜயபூர் :** ஆக்ராவிலிருந்து ஜயபூர். இது புராதனமான ராஜஸ்தானம். இப்போது ராஜஸ்தானங்களின் நிலைமை உலக மறிந்ததே இவ்விடத்தில் க்ஷேத்ர தீர்த்த விசேஷம் ஒன்றுமில்லையா யினும் நகர்ச் சிறப்பு அவசியம் காணத்தக்கது. மிக விசாலமான வீதி களும் ஒரே ரீதியான உயர்ந்த மாடமாளிகைகளும் கண்ணைக் கவரீ

கின்றன. இவ்விடத்தில் ஸ்ரீ வைஷ்ணவ ப்ரபுக்கள் வியாபார நிமித்தமாக விசேஷமாய்க் குழுமியிருக்கிறார்கள். ஸ்ரீ வைஷ்ணவர்கள் தங்குவதற்கு ஸௌகரியமளிக்கும் மந்திரங்களும் இங்குப் பலவுண்டு. அவற்றுள், ராம்நகர்கஞ்ஜ் என்னுமிடத்தில் (ஊர்க் கோடியில்) மிக விசாலமான லக்ஷ்மீ நாராயண மந்திரமுள்ளது; அதிலே ஆனந்தமாகத் தங்கியிருக்கலாம்.

**அஜ்மீர் புஷ்கரம்:** ஜயபூரிலிருந்து அஜ்மீர் ஸ்டேஷன் சேர்ந்து, அங்கிருந்து ஒன்பதாவது மைலிலுள்ள புஷ்கர க்ஷேத்ரம் சேர்வது. ஸ்டேஷனிலிருந்து ஒருமணி காலத்திற்குள் க்ஷேத்ரம் சேரும்படியான ஸாதனங்களுண்டு. இவ்விடத்தில் பகவானே தீர்த்தரூபியாக ஸேவை ஸாதிப்பதனால் அந்த தீர்த்த விசேஷத்திற்கே புஷ்கரமென்று திருநாமம். அந்த பெயரையிட்டே ஊர் வழங்கப் பெறுகின்றது. தென்னாட்டில் எம்பெருமானுடைய திருநாமத்தையிட்டே *வானமாமலையென்று ஊர் வழங்கப் பெற்றது போலவே இதுவுமென்று கொள்ளலாம். இந்த தீர்த்த விசேஷமே இவ்விடத்திற்கு ஏற்றம். இங்கு இரண்டு ஸன்னிதிகளுண்டு. ஒன்று நூறு வருஷங்களுக்கு முன்பு காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் ஆத்ய. அனந்தாசார்ய ஸ்வாமியால் ப்ரதிஷ்டாபிதமானது. மற்றொன்று ஸமீபகாலத்தில் மார்வாடத்திலுள்ள மட்வாரு மகனீராம் ஸேட்ஜீ அவர்களால் வெகு ரமணீயமாக அமைக்கப்பட்டது. இதற்கு ரமாவைகுண்டமென்று பெயர். முந்தின ஸன்னிதிக்கு ரங்கஜீ மந்திரமென்று பெயர். இரண்டு ஸன்னிதிகளிலும் தேசாந்தரிகள் தங்குவதற்கு ஸ்தல ஸௌகரியம் நன்றாகவுண்டு.

**நாதத்வாரா:** புஷ்கரத்திலிருந்து நாதத்வாராவென்கிற க்ஷேத்ரம் சேர்வது. இத்தலம் நமது தென்னாட்டினர்க்கு விசேஷமாகத் தெரியாது. உதயபுர ராஜதானியில் வல்லபாசார்யர்களின் ஆதீனத்திலுள்ளது இத்தலம். வல்லபர்கள் ஸ்ரீ க்ருஷ்ணபக்தியில் மிகச் சிறந்தவர்கள். கண்ணனையல்லது வேறு தெய்வமறியாரிவர்கள். இவ்விடத்து விபவங்கள் வாசாமகோசரம். ஸன்னிதி மிகவும் விசாலமானது. தினப்படி ஆயிரக்கணக்கான ஸேவார்த்திகள் வந்து தொழுகிறார்கள். இங்கு தினந்தோறும் பலவாயிர ரூபாய்களுக்குமேல் போகங்களுக்காகச் செலவு செய்யப்படுகிறது சிப்பந்திகளின் சம்பளம் மட்டும் ஒரு நாளைக்கு ஐயாயிரம் ரூபாயாகிறதாம். எனவே மாதமொன்றுக்கு ஒன்றரை லக்ஷம் ரூபாய் செலவாகிறது. சம்பளவகையில் மாத்திரமே இது. நமது நாட்டில் திருவேங்கடமுடையானுடைய ஐச்வரியத்தை ஏகதேசமாக நினைக்கச் செய்து விடுகிறது இத் தலத்து ஸம்ருத்தி. ஊரில் தர்மசாலைகள் நிரம்பியிருக்கின்றன. தீர்த்த வஸதிகளுக்கும்

குறையில்லை. ஸ்ரீயுத கோஸ்வாமி திலகாயித கோவிந்தலால்ஜீ என்கிற வல்லபாசார்யர் இத்தலத்தில் ராஜகுரு பீடத்தில் அமர்ந்திருந்தார். தற்காலநிலைமை தடுமாறியிருக்கின்றதாம்.

**ஸித்தபூர்:** நாதத்வாராவிலிருந்து ஸித்தபூர் சேர்வது. இவ்விடத்தை **மாத்ருகயா** என்று வழங்கி வருகிறார்கள். ஸ்ரீ வைஷ்ணவர்கள் இவ்விடத்தில் மாத்ருச்ராத்தம் செய்கிறார்களென்று கேள்வி. ஸரஸ்வதிஸ்நானம் இங்கு விசேஷம். ஸ்ரீரங்கம் முதல் திருமாளிகை தாதாசார்யருக்கு அதீனமான மந்திரமொன்று இங்கு ஸ்டேஷன் ஸமீபத்திலுள்ளது. அதில் வாஸ ஸௌகரியமுண்டு. வேறு தர்மசாலைகளுமிருக்கின்றன.

**த்வாரகாயாத்திரை:** ஸித்தபூரிலிருந்து மெஹ்ஸாணு, வீரங்காம், ஜாம்நகர் வழியாக த்வாரகைக்குச் செல்லவேண்டும். இடையில் விச்ராந்தி கொள்ளாமல் செல்ல முடியாததலால் **வீரங்காம்** என்னுமிடத்தில் ஒருநாள் தங்கலாம். இவ்வூருக்கடுத்தபடி ஜாம்நகரில் தங்கலாம், தங்காமலும் நேராக த்வாரகை சென்று சேரலாம். **(மேலே காண்க)**

**கோமதி த்வாரகை:** கோமதி த்வாரகையென்றும் பேட்த்வாரகையென்றும் டாகோர்த்வாரகையென்றும் இப்படி பலவிடங்களை த்வாரகையாக வ்யவஹரித்து வருகிறார்கள். ஆனாலும் த்வாரகையென்று உலகமெல்லாம் வழங்குவது கோமதீ த்வாரகையேயாகும். நைமிசாரணியம், லக்னௌ முதலானவிடங்களில் ப்ரவஹிக்கிற கோமதீ நதியானது இவ்விடத்தில் ஸன்னிதியருகேயுள்ள ஸமுத்ரத்தில் ஸங்கமமடைகிறபடியால் இவ்விடத்தை கோமதீத்வாரகையென்று வ்யபதேசிக்கிறார்கள். இந்த நதியின் தீர்த்தம் மற்றவிடங்களில் மதுரமாயிருந்தாலும் இங்கு ஸமுத்ர ஸம்பந்தம் ஒரு யோஜனை தூரம் ஏற்பட்டதனால் அங்கிருந்தே க்ஷாரஸலிலமாய்விட்டது. த்வாரகா நாதனுடைய ஸன்னிதி வெகு புராதனமாயும் அற்புத சிற்பங்களமைந்ததாயும் ஸர்வேந்த்ரியாகர்ஷகமாயும் காண்கிறது. *சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்து தோன்றும் துவாரபதி* என்ற ஆண்டாளுடைய மங்களாசாஸனம் மிகப் பொருத்தமாகக் காண்கிறது. ஸ்டேஷனுக்கும் ஸன்னிதிக்குமிடையில் தோதாத்ரிமடம் யாத்ரிகள் தங்குவதற்கு மிகவும் ஸௌகரியமான இடம்; பெரிய தோட்டத்தில் ஸன்னிதியும் தர்மசாலையுமாகவுள்ளது.

**பேட்த்வாரகை:** கோமதி த்வாரகையிலிருந்து ஓகாபோர்ட் ஸ்டேஷன் சேர்ந்து அங்கிருந்து அரைமணிகாலம் படகில் பயணம் செய்து அடையக்கூடிய தலமிது. இங்கும் த்வாரகா நாதனுடைய

ஸந்நிதி மிக விலக்ஷணமாக அமைந்திருக்கின்றது. இதுவும் புராதனமான தென்றே தெரியவருகிறது ஸ்ரீக்ருஷ்ண பகவான் த்வாரகபுரியை ஏற்படுத்தினபோது பலவிடங்களில் தனக்கு ஆஸ்தானம் அமைத்துக் கொண்டதாகவும், அதனாலேயே த்வாரகா பேதங்கள் ஏற்பட்டதாகவும் சொல்லுகிறார்கள். இது ஸம்பாவித மாகவே தோன்றுகிறது. பேடீத்வாரகையிலிருந்து மறுபடியும் கோமதீ த்வாரகைக்கு வந்தே மேல்யாத்திரை நடைபெறவேண்டும்.

**போர் பந்தர் ஸுதாமபுரி:** கோமதீ த்வாரகையிலிருந்து ராஜகோட் வழியாய் **போர்பந்தர்** சேர்வது. இதற்கு ஸுதாமபுரியென்று மறுபெயர் வழங்கும். குசேலருக்கு ஸுதாமா என்று பெயர். அவர் பிறந்ததும் வளர்ந்ததும் இவ்விடத்திலென்பர். இவ்விடத்தில் சிறிய ஆலயமுள்ளது. இது புராதனமன்று என்கிறார்கள். நகரம் மிக ரமணீயமாய் மாடமாளிகை சூழ்ந்ததாய் வாஸத்திற்கு ஸ்ப்ருஹணீயமாய்க் காண்கிறது. மஹாத்மாகாந்தியின் ஜன்மபூமி இதுவேயென்கிறார்கள். ஐந்து லக்ஷம் ரூபாய் செலவில் காந்தி மாளிகையொன்று இவ்விடத்தில் இருபது வருஷங்களுக்குள்ளாக வெகு விசித்ரமாய் அமைக்கப்பட்டிருக்கின்றது. அவரது தாய் தகப்பன்மாருடைய மிகப் பெரிய ப்ரதிக்ருதியும் இதில் ஸ்தாபிக்கப் பட்டிருக்கிறது. உயர்ந்த பல நூல்கள் சேமிக்கப்பட்டிருக்கின்றன. பரமபக்தரான ஒரு ஸேட்டின் நன்கொடையைக் கொண்டு இந்த அரிய பெரிய மாளிகை ஏற்படுத்தப்பட்டதாம். மிகவும் மநோஹரமா யிருக்கின்றவிது பரம பவித்ரமாயும் காணப்படுகிறது. பொதுவாக ஸகல ஜனங்களுக்கும் ஆகர்ஷமாய் விளங்குகின்றது. ஸ்டேஷன் வாசலிலேயே மிகப் பெரிய தர்மசாலையுமுளது.

ப்ரபாஸ பட்டணம்: குசேலபட்டணத்திலிருந்து ப்ரபாஸ பட்டணம் வந்து சேர்வது. "மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல்வாய் மாண்டானை, ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தான்" என்கிற பெரியாழ்வார் திருமொழியின்படியே பன்னிரண்டாண்டுகளுக்கு முன்பு இங்கு ஸ்நானம் செய்கையில் மாண்டுபோயிருந்த ஸாந்திபநி புத்திரனை குருதக்ஷிணையாக மீட்டுக் கொடுத்தவிடம் இது என்பார்கள். ஏகாந்தமாகவும் புனிதமாகவு முள்ள இத்தலம் தபஸ்விகளுக்கு வாஸ யோக்யமானது. இங்கே தீர்த்தகட்ட ஸமீபத்தில் இரண்டு ஸ்ரீவைஷ்ணவ மந்திரங்களும் தர்ம சாலையும் வாஸ ஸௌகரியமளிப்பன. வீராவல் என்கிற ஸ்டேஷ னிலிறங்கி இரண்டு மூன்று மைல்தூரம் சென்று அடையவேண்டிய தலமிது. இவ்விடத்தில் கடற்கரையில் ஸோமநாத மந்திரமென்னும் சிவாலயம் பிரபலமாகத் திருப்பணி செய்யப்பட்டுள்ளது.

**அஹமதாபாத் நகரம்:** ப்ரபாஸபட்டணத்திலிருந்து ராஜகோட் வீரம்காம் வழியாய் அஹமதாபாத் நகரம் வந்து சேர்வது. இங்கு க்ஷேத்ர தீர்த்த விசேஷமில்லையாயினும் மார்க்க க்ராமத்தில் தங்க வேண்டுமிடமாகும். இங்கு, சபர்மதி நதிக்கரையில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ராமாநுஜகூடமும் தருமசாலையும் விசேஷ ஸௌகரியமாக உண்டு. இவ்வூரில் அவசியம் காணவேண்டிய காட்சியொன்றுண்டு; அதாவது **கீதாமந்திரம்,** விலக்ஷண பகவதநுக்ரஹம் பெற்றவொரு பக்தசிகாமணியின் பெரு முயற்சியினால் பல லக்ஷரூபாய்ச் செலவில் மிக விசாலமாயும் ஸர்வேந்த்ரியாகர்ஷமாயும் **லோகாத்ரமாயும்** அமைக்கப்பட்ட மந்திரமிது. இங்கு உட்புகும் போதே 'ஞான பக்தி விரக்திச் செல்வங்கள் நம்மைவந்து அணைத்துக்கொள்வன போலும். இதில் மூன்று மாடிகளுள்ளன. பல விரக்தர்கள் பேரின்பமாக காலஞ்செய்து கொண்டிருக்கிறார்கள். கீழே கீதை முழுவதையும் பதினெட்டுப் பகுதியாகப் பரமஸுந்தர தேவநாகர திவ்யலிபியில் சிலாசாஸனமாகப் பொறுத்திருக்குமழகு மிகச் சிறந்தது. இந்த மந்திரத்தை அமைத்த மஹாத்மா **வித்பானந்தஜீ** யென்பர். இப்போது வாழ்பவர் வேறொருவர்.

**டாகோர் த்வாரகை:** அஹமதாபாதிலிருந்து ஆனந்த் ஜங்ஷன் வழியாய் **டாகோர்** என்னுமிடமடைவது. த்வாரகைகளில் இதுவும் ஒன்றாகப் பரிகணிதமாயுள்ளது. மிகப்பெரிய கோவிலில் ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவின் அற்புதமான தரிசனம் மிகவும் பாராட்டத்தக்கதாக வுள்ளது. ஸ்டேஷனிலிருந்து ஒருமைல் தூரத்திலுள்ளது ஸன்னிதி. தீர்த்த ஸௌகரியமும் தர்மசாலை வஸதியும் வெகு ரமணீயமாகவுள்ளது. **பாரதமந்திரம்** என்கிற மிகப்பெரிய ஸ்ரீவைஷ்ணவ மடம் இவ்விடத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு நல்ல புகலிடம்.

**உஜ்ஜயிநீ:** டாகோரிலிருந்து உஜ்ஜயிநீ க்ஷேத்ரம் சேர்வது. 'அயோத்யா மதுரா மாயா* என்கிற ச்லோகத்தில் **அவந்திகா** என்னப்பட்ட க்ஷேத்ரம் இதுவே. கண்ணபிரான் பலராமனோடும் குசேலமுனிவரோடும் ஸாந்திபநி முனிவரிடத்தில் அறுபத்து நான்கு நாட்களில் அறுபத்துநான்கு கலைகளைப் பயின்றதாகச் சொல்லுமிடம் இதுவே. இங்கு ஸாந்திபநியாச்ரமம் முதலானவிடங்கள் காணத்தக்கவை. இங்கு க்ஷிப்ராநதி நிர்மல ப்ரவாஹமாகப் பெருகுகின்றது. அதன் கரையில் மிகப்பெரிய ராமாநுஜகூடம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் புகலிடமானது.

**நாஸிக் பஞ்சவடி:** உஜ்ஜயிநியிலிருந்து **நாஸிக்ரோட்** என்னும் ஸ்டேஷனிலிறங்கி 7 மைல் தூரத்தில் பஞ்சவடி வந்து சேர்வது.

இங்கு கோதாவரியின் அழகும் அதன் கரையில் பஞ்சவட தபோவனங்களின் ஸன்னிவேசங்களும் அநுபவிக்கத் தக்கவை. ஸ்ரீராம ஸீதா விஹாரஸ்தலங்கள், சூர்ப்பணகாபங்கஸ்தலம், மாரீசவதஸ்தலம் முதலானவை இங்குக் காணவேண்டியவை. நாளடைவில் இது பெரிய நகரமாக அபிவிருத்தியடைந்து வருகிறது. இங்கு வைதிகர்கள் புனிதமாகத் தங்குவதற்குரிய இடம் கோதவரிக்கரையில் ஸ்ரீ சங்கராசார்ய மடம். மற்றும் பல தர்மசாலைகளுமுண்டு.

**பாம்பே மஹாநகரம் :** கல்கட்டா, அஹமதாபாத் முதலிய நகரங்கள் போல இந்நகரும் வழியடைவில் ப்ராப்தம். நகரின் சிறப்பைப்பற்றி இங்கு நாம் எழுதவேண்டியது ஒன்றுமில்லையன்றோ. மஹாயசஸ்வியாயும் ஜகத்குரு ப்ரக்யா விக்யாதராயும் விளங்கின ஸ்ரீ காஞ்சி பிரதிவாதி பயங்கரம் 'காதி, அனந்தாசார்ய ஸ்வாமியால் இங்குப் பனஸவாடியில் ஏற்படுத்தப்பட்டுள்ள திருவேங்கடமுடையான் ஸன்னிதி தென்னாட்டுக்கோவில் முறையில் விலக்ஷணமாக நடைபெற்று வருவதால் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இங்குத் தங்கியிருக்க வசதியுண்டு. தர்மசாலைகளும் மிகவுண்டு. இவ்விடத்தில் நமது தென்னாட்டினர் உத்யோக முறையில் அபரிமிதமாக வந்து சேர்ந்திருக்கிறார்கள்.

**பூனா நகரம் :** பாம்பேயிலிருந்து பூனாநகரில் மார்க்க க்ரமத்தில் ஒருவேளை தங்கியிருக்கலாம். இங்கு ரவிவார பேட்டையில் ஸ்ரீ ராம மந்திரம், லக்ஷ்மீநாராயண மந்திரம் என்னுமிரண்டு ஆலயங்கள் ஸேட்டுகளால் ஏற்படுத்தப்பட்டவை மிக மனோஹரங்களாக விளங்குகின்றன. இக்கோவில்களில் வாஸ ஸௌகரியம் விசேஷமாகவுண்டு. ஸேட்டுகள் ஸ்ரீவைஷ்ணவர்களை மிகவுமாதரத்தோடு உபசரிப்பர்கள்.

**பண்டரிபூர் :** பூனாவிலிருந்து குர்ட்வாடி ஜங்ஷன் வழியாய் பண்டரிபூர் சேர்வது. பாண்டுரங்கக்ஷேத்ரமென்பதே பண்டரிபூர் என்றும் பண்டராபுரமென்றும் சிதைந்து வழங்குகின்றது. இங்கு விட்டலநாதனென்னும் எம்பெருமானுடைய ஸேவை மிகவுமினிது. ஸன்னிதியின் ஸன்னிவேசங்கள் மிகப்பெரியன. எம்பெருமானுடைய ஸௌசீல்யமோ அப்ரமேயமானது. பக்தர்கள் திருவடி வாரத்திலே தலையை மடுத்து ஸேவிக்கலாம்படியான ஸௌலப்யம். பக்தர்களின் பஜனைகளும் கீர்த்தனங்களும் இங்கு இடைவிடின்றி நடக்குமது பெரிய விசேஷம். இந்த க்ஷேத்ரத்தில் சந்திரபாகாநதி பெருகுகின்றது. அதன் கரையில் **ராமபாக்** என்னும் மிகப் பெரிய தோட்டத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு விசாலமான வஸதி ஸௌகரியமுள்ளது.

ஷோலாபூர் : பாண்டுரங்க க்ஷேத்திரத்திலிருந்து ஷோலாப்பூர் [illegible] சேரலாம். மிகச் சிறந்த ஸ்ரீவைஷ்ணவ பக்த மணிகள் வாழு [illegible] இது. பிரபல வியாபார ஸ்தலம் இங்கு லக்ஷ்மீநாராயணன் [illegible] நூறு வருஷங்களுக்கு மேலாக ஏற்பட்டு வெகு விலக்ஷணமான [illegible] நித்யநைமித்திக க்ரமங்கள் ஆச்சரியமாக நடைபெற்று வருகின்றன. இங்கு நாடோறும் காலை மாலையிரவுகளில் நடைபெறும் [illegible] .தென்னாட்டினர்க்கும் அநுசரிக்கத் தக்கவையென்று சொல்லலாம். உத்தராதி வைஷ்ணவர்களாயிருக்கச் செய்தேயும் திவ்ய ப்ரபந்தங்களில் இருநூறு பாசுரங்களுக்கு மேல் அதிகரித்துக் [illegible] பாடமாக்கித் தமிழ்நாட்டு அத்யபகர்களோடு வாசியற இயல் சேவிக்குமழகும், பஞ்ச ஸூக்தங்களும் உபநிஷத்தும் ஓதி வேத பாராயணம் செய்யுமழகும், பூர்வாசார்ய ஸ்தோத்ரங்களையெல்லாம் [illegible]மாக்கி ஸேவிக்கிற வைகரியும் நாஸ்திகர்களையும் ஆஸ்திகர் [illegible] வல்லவை.

இங்கிருந்து துங்கபத்ரா ஸ்டேஷனில் [தற்காலம் மந்த்ராலயம் ரோட் என்னுமிடத்தில்] இறங்கி துங்கபத்ரா ஸ்நானம் செய்துவிட்டு மந்த்ராலயமாப்தி செய்யலாம்.



# நால்வாசியும் கால்வாசியும்

ந்யாய வேதாந்த வித்வான், வாகம்ருதவர்ஷீ, ஸ்ரீ உ. வே.

**செல்வக்குடி K. வரதாசாரியர்**

வேதம் முதலான சாஸ்த்ரங்களை ஆராய்ந்து நம் பூர்வர்கள் அறுதியிட்ட தத்வ ஹித புருஷார்த்தங்கள் இவை;

ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள் என்றும் அவன் திருவடிகளே ஆறு (உபாயம்) "என்றும் அன்னவன் திருவடிகளில் கைங்கர்யமே பரம புருஷார்த்தம் (பேறு) என்றும் இவையே ஸகல வேதாந்த ஸித்தாந்த ஸாரம்.

அறிவினால் குறைவில்லா அகல் ஞாலத்தவர் அறிய நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறை ஞானத்தொரு மூர்த்தியான கீதாசார்யனுடைய கீதா நிஷ்கர்ஷமும் இதுவேயாகும். பகவச்சரணாரவிந்த சரணாகதியிலே அநுஷ்டித்தார்கள் ஆழ்வார்களும் பூர்வாசார்யர்களும். நாமும் ப்ரபந்நர்களே.

பகவச் சரணாகதிக்கு பலம் பகவத்கைங்கர்யம். இதுவே அர்த்திக்கப்பட வேண்டியது—சீரியதும் இதுவே. உரியதும் இதுவே.

"உறுவதாவது ...... நீள் குடக் கூத்தனுக்காட் செய்வதே" ([illegible] 10.10) என்று நம்மாழ்வார் அருளிச் செய்துள்ளார். நீள் குடக் கூத்தனுக்கு ஆட்செய்வதே உறுவதாவது. உறுவதும் இது. ஆவதும் இது. சீரியதும் இது. ஸூசகமும் இது என்று நம்பிள்ளை வ்யாக்யாதித்துள்ளார். "அருள் கொண்டாடும் அடியவர்" என்றவிடத்து அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் வ்யாக்யாநமும் அநுஸந்தேயம். "கைங்கர்யம் புருஷார்த்தம், சரணை ஸாதநம் என்றிருக்குமவர்கள்" என்றிறே அவ்விடத்து திவ்ய ஸூக்தி.

ஆக பகவச் சரணாகதிக்கு அபேக்ஷிக்கப்பட வேண்டியது பகவத் கைங்கர்யமே சீரிய பலன் என்றுதேறியது.

ஆயினும் சரணாகதி ஸகல பலப்ரதம் ஆகையால் அவரவர் தம்தாம் ருசிக்கநுகுணமாக ஓரொன்றை பலமாக உத்தேசிக்கிறார்கள். சரணாகதிக்கு ப்பலநியமமில்லை என்ற வார்த்தத்தை நிரூபிக்கும் பிள்ளை உலகாரியர் ஸ்ரீவசபூஷணத்தில் "பலநியமமின்றிக்கே யொழிந்தபடி யென்னென்னில்: தர்மபுத்ராதிகளுக்கு பலம் ராஜ்யம். த்ரௌபதிக்கு பலம் வஸ்த்ரம்......" என்று அருளிச் செய்துள்ளார். "தர்மபுத்ராதிகள் தொடக்கமான ப்ரபத்தாக்களானவர்கள் ராஜ்யார்த்தமாகவும் வஸ்த்ரார்த்தமாகவும் ....ப்ரபத்திபண்ணுகையாலே" என்று பெரிய ஜீயர் வ்யாக்யாநம் இட்டருளினர். "மூலத்திலே (தர்மபுத்ராதிகளுக்கு பலம்) இத்யாதி வாக்யங்களிலே—தர்மபுத்ராதிகளுக்கு ஸித்தித்தபலம் என்று அர்த்தம் சொல்லில், (பெருமாளுக்கு பலம் ஸமுத்ரதரணம்) என்கிறவிடத்திலே வைகட்யம் வரும். "கோவிந்தேதி யதாக்ரந்தத்" இத்யாத் யநுரோதேந, "புடவை சுரந்தது திருநாமமிறே" என்கிற க்ரந்தாந்தரஸ்த்த ஸ்வொக்யத்தோடு விரோதிக்கும் ஆகையாலே (த்ரௌபதிக்கு பலம் வஸ்த்ரம்) என்கிறவிடத்திலும் வைகட்யம் வரும். ஆகையால் "தர்மபுத்ராதிகளுக்கு" இத்யாதி ஷஷ்டிகளுக்கு "ப்ரபத்தாக்களான தத்தத் உத்தேச்யத்வம்" அர்த்தமாகக் கடவது என்னும் அபிப்ராயத்தாலே அருளிச் செய்கிறார்". ராஜ்யார்த்தமாகவும் வஸ்த்ரார்த்தமாகவும் ,'இத்யாதி" என்று திருமழிசை அண்ணாவப்பங்கார் ஸ்வாமி அரும்பத விளக்கம் அருளிச் செய்தார்.

தர்மபுத்ராதிகளுக்கு பலம் இத்யாதி வாக்யங்களில் "தர்மபுத்ராதி ப்ரபத்திகளுக்கு ஸித்தித்த பலம்" இத்யாதிப்படியே அர்த்தம் சொல்லுமளவில் பெருமாளுக்கும் த்ரௌபதிக்கும் ப்ரபத்தியால் பலஸித்தியில்லாமையாலே விரோதிக்கும் என்று திருவுள்ளம் பற்றி "தர்மபுத்ராதிகளுக்கு பலம்" இத்யாதி வாக்யங்களுக்கு தர்மபுத்ராதிகளுக்கு உத்திஷ்டமான பலமென்று அர்த்தம் சொல்லவேணுமென்று திருவுள்ளம் பற்றியருளிச் செய்கிறார். "ராஜ்யார்த்தமாகவும் வஸ்த்ரார்த்தமாகவும்" இத்யாதி என்று எம்பார் ஜீயர் ஸ்வாமியும் அரும்பத விளக்கவுரை அருளிச் செய்துள்ளார். ஆக ப்ரபத்தி ஸகல பல ப்ரதையென்றும் த்ரௌபதி வஸ்த்ரத்தை உத்தேசித்து சரணாகதி செய்தாள் என்றும் தேறியது இவ்வார்த்தத்தை கலியன் அருளிச் செய்த திருவல்லிக்கேணி பாசுரத்தைக்கொண்டு நாம் அநுபவிப்போம். "அந்தகன் சிறுவன் அரசர்தம் அரசற்கிளையவன் அணியிழையைச் சென்று 'எந்தமக்குரிமை செய்' எனத்தரியாது 'எம்பெருமான் அருள்' என்ன, சந்தமல்குழலாள் அலக்கண் நூற்றுவர்தம் பெண்டிரும் எய்தி நூல்இழப்ப இந்திரன் சிறுவன் தேர்முன் நின்றானைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே", (2.3.6) என்பது பாசுரம்.

எம்பெருமான் உகந்தருளின திவ்ய தேசங்களுள் திருவல்லிக்கேணிக்குத் தனிச்சிறப்புண்டு. இலதமூலகுக்காய் நின்ற திருவேங்கடத்தெம்பெருமான் ஸுமதி என்ற அரசனுக்காக ஸ்ரீக்ருஷ்ணனாய் ஸேவை ஸாதித்து ஸ்ரீ வேங்கடக்ருஷ்ணன் என்ற திவ்யநாமத்தோடு விளங்குவது திருவல்லிக்கேணியிலே. இராமனாகவும், கண்ணனாகவும், நரம் கலந்த சிங்கமாகவும், ஆர்த்திதார்த்த பரிதாந நிஷிதனான வரதனாகவும், தென்னாடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்கராசனுக்கு ப்ரதிநிதியாக மந்நாதன் என்னையாளுடையப்பனாகவும் பல திவ்ய மங்கள விக்ரஹபரிக்ரஹம் செய்து ஸேவை ஸாதிப்பது இத்தலத்திலே. நின்றவாறு இருந்தவாறு கிடந்தவாறு எல்லாப்படிகளையும் பகவான் அடியார்களுக்கு முற்றூட்டாகக் காட்டியருள்வதும் இத்தலத்தே. மற்ற திவ்யதேசத் தெம்பெருமான்கள் விபவ ப்ரதிநிதியாய் ஸேவை ஸாதிக்கிறார்கள். இங்கே அந்த வைபவத்துடன் அர்ச்சா ப்ரதிநிதியாகவும் ஸேவை ஸாதிப்பது தனியேற்றமாகும் அர்ச்சா ப்ராவண்யமே வடிவெடுத்த திருமங்கை மன்னன் இந்த திவ்யதேசத்தையும் இந்த திவ்யதேச ஏகதேசமான பகவானையும் அநுபவித்து மங்களாசாஸநம் செய்திருப்பது தனிப் பெருமை வாய்ந்ததாகும். முதல் ஆறு பாசுரங்களிலே ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தை அநுபவிக்கிறார் கலியன். கீழ்த் திருமொழியில் இவரை வசீகரித்த ராமக்ருஷ்ணாவதாரங்களும், திருவெவ்வுள் கிடையழகுதானும் சிங்கவேழ்குன்றத்தில் பரிபூர்ணமாக அநுபவித்த அழகிய சிங்கரும் திருவேங்கடத்தில் திண்கைமா துயர் தீர்ந்தபடியுமாக இவையைந்தையும் தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதுமாக ஒருகலத்திலே சேர்த்துப் பருகுமா போலே இவர்க்குக் கண்ணாலே பருகலாம்படி ஐவகைப் பட்டிருக்கிற இருப்பை பகவான் ஸர்வஸ்வதானம் பண்ணக் கண்டநுபவிக்கிறார் ஆயினும் ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்தை ஆறு பாசுரங்களில் அநுபவிக்கிறார். ஆகையால் அந்த அநுபவமே ப்ரதாநமாகும். இவ்வாறும் பாசுரத்தில் த்ரௌபதிக்கு அருள் செய்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய வைபவம் கூறப்படுகிறது. யுதிட்டிரன் சகுநியோடு சூதாடினான். பொய்ச் சூதில் ஸகலத்தையும் தோற்றான். மனைவியான த்ரௌபதியையும் தோற்றான். அவ்வமயம் துர்யோதனன் தன் தம்பி துச்சாஸனனை நோக்கி "நமக்கு வேலைக்காரியான த்ரௌபதியை ஸபை நடுவே நிறுத்து" என்று ஏவ அவனும் வீட்டுக்கு விலக்காயிருந்துள்ள த்ரௌபதியை மிக்க பெரும் சபை நடுவேயிழுத்து வந்து அவமானப் படுத்த, அவளும் கண்ணனைச் சரணம்புக, பாண்டவர் தம்முடைய பாஞ்சாலிமறுக்கமெல்லாம் ஆண்டங்கு நூற்றுவர் தம் பெண்டிர்மேல் வைத்தவப்பன்!" (பெரியாழ்வார். 4.3.6) என்றபடி அவள்பட்ட வருத்தமெல்லாம் நூற்றுவர் பெண்டிரும் எய்தி மங்கலநாண் இழந்து

விதவைகளாய்ப் புலம்பும்படி ஸ்ரீபார்த்தஸாரதியாய் அரிய பெரி காரியங்களைச் செய்தபடி யநுபவிக்கிறார் இப்பாசுரத்தில்.

அந்தகன் சிறுவன் என்று குருடன் பெற்றபிள்ளை என்று சொல் வதின் நோக்கம் "இவர்கள் அறிவுகேடு வழிவழியாக வந்ததொன்று" என்று காட்டுவது.

"அரசர்தம் அரசன்" என்கையாலே இவனுடைய அஹங்காரம் தலை மண்டினபடி சொல்லிற்று. இப்படிப்பட்ட துர்யோதனனுடைய தம்பி என்கையாலே அவன் கொண்டாடி வளர்க்கச் செருக்காலே வளர்ந்தவன் என்றதாயிற்று. அவனாகிறான் துச்சாஸநன். அவன் சென்று, மஹோத்ஸவமாகையாலே ஸர்வாலங்கார ஸம்பந்நையான த்ரௌபதியை நோக்கி "சூதிலே உன்னையும் தோற்றார்கள். எந்தமக்கு உரிமை செய். எங்களுக்கு இழிதொழில் செய்" என்றான். அதுகேட்டு அவள் பொறுத்திலள், அந்யசேஷத்வத்தை ஸஹியாமையாலே அவ்வளவிலே ஸர்வஸ்வாமியான கண்ணனைச் சரணம் புக்காள்:

"ஆண்பிள்ளைகளான பர்த்தாக்கள் ஸந்நிஹிதராய் இருக்க, தூரஸ்த்தனான க்ருஷ்ணன் பேரைச் சொல்லுவான் என்" என்று எம்பாரைக் கேட்க, முன்பே வசிட்டன் "மஹத் யாபதி ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோ பகவாந் ஹரி:" என்று த்ரௌபதிக்கு 'பரமாபத்து ஏற்படுங்கால் ஆச்ரித விரோதி நிரஸநஸ்வபாவனான பகவானைப் பற்று" என்று சொல்லிவைத்தபடியாலே அவனைப் பற்றினாள் என்றருளிச் செய்தார்!

இது தன்னை பட்டரைக் கேட்க, நாயகன் கைபிடித்து நாயகி செல்லுங்கால், இடறினால் 'அம்மே' என்னக் கடவதுகாண் என்றருளிச் செய்தார்! அதாவது பர்த்தாவின் கையைப் பிடித்து நடந்தாலும், பத்நீ கால் இடறினால், அவள் வாயில் 'அம்மா' என்று வருமதொழிய "நாத" என்று வாராதே. அவ்வண்ணமே எவ்வுயிர்க்கும் தாயிருக்கும் வண்ணமான பகவானைப் பற்றினாள் என்றருளிச் செய்தார்.

இப்படி பூர்வார்த்தத்தாலே த்ரௌபதி பரிபவமும் அவள் ப்ரபத்தியும் கூறப்பட்டது. இது அதிகாரி க்ருத்யம் கூறினவிடம். இனி உத்தரார்த்தத்தாலே உபாய க்ருத்யம் கூறப்படுகிறது. அதாவது உபாயபூதனான கண்ணன் அருள் செய்த ப்ரகாரம் கூறப்படுகிறது என்றபடி. த்ரௌபதி பட்ட வருத்தமெல்லாம் துர்யோதனாதிகளு டைய பெண்டிர் அடைந்து மங்கலஸூத்ரத்தையும் இழந்து கதறும்படி பண்ணினான் கண்ணன் என்கிறார் உத்தரார்த்தத்தாலே.

இத்தால் சொல்லிற்றாய்த்து "த்ரௌபதி நூல் தங்கினபடியும் மற்றையார் நூல் இழந்தபடியும்"—இவள் நாலுக்கு (மங்கல

ஸூத்ராத்துக்கு) வாசியென்னென்னில் ;— கோவிந்தா என்றநாக்கு வெளுன்றின கழுத்துக்கு ஓர் குணை (நூல்-ஸூத்ரம்) ஹாதியின்றிக்கே, ப்ரதிஜ்ஞையாலே குழல் விரித்திருந்த இவளை குழல் முடிப்பித்தவாறே, அவர்கள் குழல் விரித்தார்கள். நூல்வாசி இவளுக்கு உண்டாய்த்து கால்வாசியிருந்தபடியாலே யென்றபடி—அவன் காலைப் பற்றியவாறே இவள் நூல் கழுத்திலே தங்கியது என்றபடி. இந்திரன் சிறுவன் தேர் முன்பு ரக்ஷித்தான் கண்ணன்.

த்ரௌபதிக்கு பர்த்தாக்கள் ரக்ஷகராகவில்லை என்று பூர்வபாதங்களால் கூறினாப்போலே, இப்பாதத்தால் அர்ஜுநனுக்கு இந்த்ரன் ரக்ஷகனாகவில்லை என்று கூறப்பட்டது. ஸர்வரக்ஷகனே அவாரவாச்யனை ஸ்ரீ க்ருஷ்ணனே என்றபடி, அவ்விபவாவதாரத்தை இங்கே திருவல்லிக்கேணியில் கண்டேன் என்கிறார் ஆழ்வார். ஆக இவன் நூலுக்குவாசி கால்வாசியே. அவன் காலைப் பற்றியதே என்றதாயிற்று. அன்றிக்கே நூல் என்று பாஸ்த்ரம் சொல்லப்பட்டதாய் அதற்கு வாசி அவன் கால் வாசியே; அதாவது சரணாகதியே. சரணாகதியே பரம தர்மம் என்று கலசாஸ்த்ர ஸம்மதம் என்றபடி.

ஆக திருவல்லிக்கேணியான் ப்ரமேய பூதன். ஆழ்வார் ப்ரமாதா. அருளிச் செயல் ப்ரமாணம். இம்மூன்றுக்கும் பல்லாண்டு பாடுவதே ஸ்ரீவைஷ்ணவ க்ருதயம் எனக் கூறியமைகிறேன்.

# அந்தநாளும் வந்திடாதோ!

ஸ்ரீ. உ. வே வித்வான். ந்யாய சிரோமணி, சொல்வேந்தர்.
பிள்ளைலோகம்

## ஸ்ரீதலசயனத்துறைவார்

**வாழ வைக்கும் வைணவம் :** ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தை 'ஸத்ஸம்பிரதாயம்' என்று கற்றுணர்ந்த பெரியோர்கள் கூறுவார்கள் அரிது அரிது மானிடராய்ப் பிறப்பதரிது! அந்தணராகப் பிறப்பது அதைவிட அரிது! ஸ்ரீவைஷ்ணவராகப் பிறப்பது அதைவிட அரிது! பல பிறப்புகளில் ஸ்ரீமந் நாராயணனிடம் பக்தி கொண்டிருந்தால்தான் ஸ்ரீ வைஷ்ணவராகப் பிறக்கமுடியும்! ஸ்ரீ வைஷ்ணவராகப் பிறந்துவிட்டால், அவரிடம் பகவானின் பேரருள் இருக்கிறது என்பதை நன்கு அறிந்து கொள்ளலாம். இயற்கையாகவே தெளிந்திருக்கும் அறிவைக் கலக்கி, மனத்தை மாற்றி மனிதனை வழியல்லாத வழியில் இழுத்துச் சென்று திக்குத் தெரியாத காட்டில் விட்டிட்டு, ஓடி மறையும் சமயங்களும் இருக்கின்றன.

ஸ்ரீ வைஷ்ணவம் அப்படிப்பட்டதன்று; மனிதனுக்கு நல்லுரை புகட்டி, அன்பு கலந்த அறநெறியில் இட்டுச்சென்று எந்நாளும் பகவானிடம் பக்தி கொண்டு இன்பமாக வாழவைக்கக்கூடியது. எனவே அனைவரையும் வாழவைப்பது ஸ்ரீ வைஷ்ணவமே!

**வரம்பு மீறாத வைணவம் :** ஸ்ரீ வைஷ்ணவம் பகவானைப் போன்றது; அழிவில்லாதது. பகவானோடு நெருங்கிய தொடர்பு கொண்டது. திவ்ய தேசங்கள், அருளிச் செயல்கள், ஸ்தோத்திரங்கள், அப்பொழுதுக்கப்பொழுது ஆராவமுதமாக விளங்கும் ஆசாரியர்களின் வியாக்யானங்கள் ஆகிற செல்வங்களைப் பெற்றுச் சீரும் சிறப்புமாக விளங்குவது; நம்மாழ்வார், நாதமுனிகள், எம்பெருமானார் (ஸ்ரீராமானுஜர்) மணவாள மாமுனிகள் போன்ற மஹாசாரியர்களால் கண்ணிமைபோல் காப்பாற்றி வளர்க்கப்பட்டு, இப்போதிருக்கும் மஹான்களால் (ஸ்ரீவைஷ்ணவப் பெரியோர்களால் வரம்புக்கு உட்பட்டு வளர்ந்து காப்பாற்றப்பட்டு விளங்குவது ஸ்ரீ வைஷ்ணவமே.

**சொல்வன திருந்தச் சொல் :** ஒவ்வொருவரும் ஸ்ரீ வைஷ்ணவ ராகப் பிறந்துவிட்டால் மட்டும் போதாது; அதற்குரிய பழக்க வழக்கங் களையும், தொன்றுதொட்டு வரும் முறைகளையும் கடைபிடிக்க வேண்டும். நாட்டில் சொல்லுவதெல்லாம் சொல்; பேசுவதெல்லாம் பேச்சு என்றிருந்தாலும் ஸ்ரீ வைஷ்ணவத்தில் ஊறியவர்கள் பேசும் பேச்சே இனிமையானது; சுவை நிரம்பியது இக்காலச் சிறுவர்களிட மும், (ஏன்? ஒன்றுமறியாத சில பெரியோர்களிடமும்) ஸ்ரீ வைஷ்ண வர்களுக்கே உரிய இனிய சொற்களை எதிர்பார்க்க முடியவில்லையே! நாம் அடிக்கடி பயன் படுத்தும் சொற்களையேனும் ஸ்ரீ வைஷ்ணவ முறைக்குச் சேர திருந்தச் சொல்லவேண்டாமா? இதோ! நீங்கள் பல முறை செவியுற்ற சொற்கள்! காணீர்! கண்டு மனம் கொள்வீர்!

**தண்டம் ஸமர்ப்பித்தல் :** தன் மகனோடு வரும் ஒரு ஸ்வாமி, அறிவு, வயது, அநுபவங்களால் முதிர்ந்து எதிரில் வரும் ஸ்ரீ வைஷ்ண வப் பெரியோரைக் கண்டார். 'மகனே! இவரை வணங்கு' என்றார்; மகன் மிகவும் அதிகமாகப் படித்துவிட்டபடியால், உடம்பை வளைப்பது அவமானச் செயல் என்று எண்ணி தன் மோவாயில் கையை வைப்பது போல் காட்டி வணக்கத்தைத் தெரிவித்தான். தந்தைக்குக் கோபம்! 'கீழே விழுந்து ஸேவி' என்றார். மகனும் தந்தைக்காக ஓரளவு அவ்வாறே செய்தான்.

ஸேவித்தல், வணங்குதல், நமஸ்கரித்தல் ஆகிய சொற்கள் வழங்கப் பட்டாலும், ஸ்ரீவைஷ்ணவர்களுள் ஒருவரை ஒருவர் ஸேவிப்பதற்குத் 'தண்டம் ஸமர்ப்பித்தல்' என்றே பெயர். ஒரு (பெரிய) கொம்பினைத் தரையில் போட்டால், அது அடிமுதல் நுனிவரை பூமியில் பட்டுக் கிடக்கும். அதுபோல் உடல் முழுதும் தரையில் படுமாறு, கால்களை யும் கைகளையும் நீட்டிப் படுத்து வணங்கவேண்டும். இதுவே 'தண்டம் ஸமர்ப்பித்தல்' எனப்படும். தண்டம் என்ற ஸம்ஸ்க்ருதச் சொல்லுக்கு கொம்பு அல்லது தடி என்று பொருள்.

**அமுது செய்க :** நம்முடைய திருஹத்திற்கு (இல்லத்திற்கு) ஒரு ஸ்வாமியை அழைத்து, உணவு உட்கொள்ளச் செய்யவேண்டும் என்று நினைத்தால், அவரைத் தண்டம் ஸமர்ப்பித்து, 'ஸ்வாமி எழுந்தருளி அமுது செய்திட வேண்டும்' என்று பிரார்த்திப்பது சிறந்தது. எல்லோ ரையும் அழைப்பதுபோல் அவரை 'சாப்பிடவா!' என்றோ 'சாப்பிட வாரும்' என்றோ அழைப்பது சரியான முறையன்று; 'அமுது செய்தார்' என்பதை 'அமி செய்தார்' என்று கூறுவதையும் தவிர்த்திட வேண்டும் இத்தகைய அரிய சொல்லை ஸ்ரீவைஷ்ணவர்களிடமே கேட்க முடியும். 'தின்றார்', 'உண்டார்' என்பதெல்லாம் ஸ்ரீ வைஷ்ணவப் பெரியோர் கள் வழங்கும் சொல்லாகா.

**கோயிலும் ஸன்னிதியும் :** ஒரு நண்பர் 'கோயில்லே இன்று பெரிய உஸ்தவம்; வரீங்களா?' என்று என்னை அழைத்தார். பகவான் எழுந்தருளியுள்ள ஸன்னிதியைக் கோவில் என்றும், கோயில் என்றும் அழைப்பது சரியே! இவை அழகிய தமிழ்ச் சொற்களே! ஆயினும் கோயில் என்ற சொல் திருவரங்கத்திற்கே உரியது; திருவரங்கத்திற்குச் செல்வதைக் 'கோயிலுக்குச் செல்கிறேன்' என்றே கூறுவது வழக்கம்; திருவரங்கம் பெரிய கோயில் என்றும் சொல்லுவார்கள்.

நமக்கு நிதியாக இருப்பவர் அர்ச்சாவதார எம்பெருமான். ஒரு பெருமாளுக்கு 'வைத்த மாநிதி' என்றே பெயர். நிதியைப் பெற்றிருக்கும் இடம் 'ஸன்னிதி' பகவத் ஸாந்நித்யம் உள்ள இடம் ஸன்னிதி. மற்ற கோவில்களைக் 'கோயில்' என்று சொன்னால், திருவரங்கத்தைப் 'பெரியகோயில்' என்றும், கோவில்களை ஸன்னிதி என்று சொன்னால் அரங்கன் கோயிலை நம்பெருமாள் ஸன்னிதி என்றும் கூறுவதைப் பார்க்கிறோம். எனினும் கோவிலை 'ஸன்னிதி' என்று கூறுவதுதான் ஸ்ரீவைஷ்ணவப் பெரியோர்கள் காட்டிய வழியாகும்; நாமும் கோவிலை 'ஸன்னிதி' என்றே சொல்லிப் பழகுவோமே! உத்ஸவம் என்பதே சரி; உஸ்தவம் என்பது தவறு.

**திருமஞ்சனம் :** 'கோயிலில் பெருமாளுக்கு அபிஷேகம் ஆகிவிட்டதா?' என்று கேட்டுக்கொண்டே ஒரு பக்தர் பரபரப்புடன் ஓடிவந்தார். அபிஷேகம் என்ற சொல் 'ஸ்நானம்' என்ற பொருளைத் தருகிறது. பகவானின் திருமுடியைத் திருவபிஷேகம் என்றும் கூறுவர். அருளிச் செயலில் ஊறித் திளைப்பவர்கள் அபிஷேகம் என்று கூறுவதில்லை ஆழ்வார் கண்ணனை 'மஞ்சனமாட நீ வாராய்' என்று அழைக்கிறார். ஆதலால் திருமஞ்சனம் என்ற சொல்லே ஸ்ரீ வைஷ்ணவர்களால் கூறப்படுகிறது. பிறருக்குப் பொருள் விளங்கினாலும் விளங்காவிட்டாலும் பகவத் ஸன்னிதிகளில் (விஷ்ணு கோயில்களில்) திருமஞ்சனம் என்று கூறுவதே சாலச் சிறந்தது

**திருமண் காப்பு :** தாங்கள் நெற்றியில் அணிந்து கொண்டிருக்கிறீர்களே! அது என்ன? என்று ஸ்ரீ வைஷ்ணவரைப் பார்த்து ஒருவர் கேட்டார். இதற்குத் திருமண் காப்பு என்று பெயர் எனக் கூறினார் அந்த ஸ்வாமி இதை எதற்காக அணிகிறீர்கள்?' என்று மீண்டும் வினவினார் அம்மனிதர். ஸ்ரீ வைஷ்ணவர்களின் புற இலக்கணங்களில் திருமண் காப்பு முதன்மையானது. இச்சொல்லின் பொருள் சொல்லாமலேயே விளங்கவில்லையா? திருமண் தன்னை அணிந்து கொள்ளுகிறவர்களைக் காப்பாற்றுகிறது. திருமண் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குக் காப்பு (ரக்ஷகம்).

ஸ்ரீ வைஷ்ணவர்களின் அநுஷ்டானங்களில் 'திருமண் காப்பு அணிந்து கொள்ளுதல்' முக்கியமான செயல். முகத்தில் திருமண் காப்பு இல்லாமல் இருக்கலாகாது. அணிந்த திருமண் காப்பை அழிப்பதும் அடாத செயல். கிழக்கு முகமாக அமர்ந்து, பிறருடன் பேசாமல், பகவானையும் ஆசாரியர்களையும் நினைத்துக் கொண்டு, (சில சுலோகங்களை அநுஸந்திக் கொண்டு) திருமண் காப்பு அணிந்து கொள்ளவேண்டும். நின்றுகொண்டோ, அருகில் இருப்பவரோடு உரையாடிக் கொண்டோ அணிந்து கொள்வது பெரியோர்களின் வழக்கமன்று.

திருமண்காப்பைத் திருமணிக்காப்பு என்றோ ஸ்ரீசூர்ணத்தை 'திருசனம்' என்றோ பிறர் கூறினாலும் நாம் கூறுவது தவறு. ஸ்ரீவைஷ்ணவ குலத்தில் பிறந்த சிறுவர்களும் திருமண்காப்பை 'நாமம்' என்கிறார்களே! இப்படிக் கூறுவதைத் தவிர்த்து, திருமண்காப்பு என்று கூறுவதே நன்மையளிப்பதாகும்.

**ததியாராதனம்** : பகவானிடம் அன்பு கொள்வது போல், அவனடியார்களிடமும் (ஸ்ரீவைஷ்ணவர்களிடமும்) அன்பு கொள்ள வேண்டும். 'அடியார்களிடம் அன்பு கொண்டு பழக வேண்டும்' என்பதைப் பகவானும் விரும்புகிறான். ஸ்ரீவைஷ்ணவரைக் காண்பதும், அவரது சொல்லைக் கேட்பதும், அவரை அன்போடு வரவேற்று உணவிட்டு உபசரித்து மகிழ்வளிப்பதும் நற்செயல்களாகும். இதையே 'நல்லாரைக் காண்பதுவும் நன்றே, நலமிக்க நல்லார் சொல் கேட்பதுவும் நன்றே, என்றார் ஒருவர்.

ததியர்கள் (அவனைச் சேர்ந்தவர்கள்) பகவானைச் சேர்ந்தவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்கள். அவர்களுக்கு அன்போடு உணவளித்து, அவர்களின் திருவுள்ளம் உகக்குமாறு ஆராதிப்பதே ததியாராதனமாகும். ஸமாராதனம், மஹாபோஜனம், என்ற சொற்கள் ததியாராதனத்தைக் குறிக்கா. பலதரப்பட்ட மக்களை ஒன்றாக அமர்த்தி உணவளிப்பதும் ததியாராதனமாகாது. 'ததியாராதனை' என்று கூறுவதும் முறையன்று.

**எழுந்தருளுகிறார்** : பெருமாளுக்குத் திருவீதிப் புறப்பாடு நடைபெறுகிறது. இந்தத் தெருவில் பெருமாள் வந்துட்டாரா? என்று ஒருவர் கேட்க, மற்றொருவர் **ஸாமி** இன்னும் வரவில்லை என்று பதிலுரைத்தார். கேள்வியும் சரியில்லை; பதிலும் சரி இல்லை! பெருமாள் எழுந்தருளுகிறார்; ஸ்வாமி எழுந்தருளுகிறார் என்றே கூற வேண்டும் எனப் பெரியோர்கள் பணித்துள்ளார்கள். பாமரமக்கள் சொல்லும் வார்த்தைகளை அப்படியே சொல்லிப் பழகுவதைத் தவிர்த்து, ஸ்ரீவைஷ்

[illegible]கிறார்கள் தங்கள் பெருமைக்கு ஏற்றவாறு கண்ணியமான உயர்ந்த சொற்களையே சொல்லிப் பழகுவது நலம்.

**கைங்கர்யம்:** ஒருவர் அலுவலகத்தில் பணி செய்கிறார்; அதை 'வேலை' என்கிறார். மரவேலை செய்வதும், வண்டி இழுப்பதும் எல்லாம் வேலைதான்! வீட்டைக் காவல் செய்வதும், தலையில் சுமையை வைத்துக் கொண்டு அலைந்துப் பொருளை விற்பனை செய்வதும் வேலை தான் அடிமையாகத் தொண்டு செய்தாலும் சுதந்திரமாகத் தொண்டு செய்தாலும் வேலை என்றே கூறுகிறார்கள். பகவானுக்குத் தொண்டு செய்தாலும் வேலை! எல்லா வேலைகளும் ஒன்றாகி விடுமா? ஒருவன் நல்ல வேலையில் அமர்ந்து அதிக அளவில் பணம் ஸம்பாதிக்கவும் பகவானுடைய திவ்விய அநுக்ரஹம் வேண்டும்; பகவானை விட்டுப் பிரியாமல் உடலை வருத்தித் தொண்டு செய்யவும் அவனுடைய அருள் வேண்டும். நிறை செல்வம் சேர்ப்பவனுக்குப் பூரண மகிழ்ச்சி ஏற்படுவதில்லை; பகவானிடம் தொண்டு செய்கிறவர் மனநிறைவு பெறுகிறார். 'இவன் நமக்குத் தொண்டு செய்ய வேண்டும்' என்று எம்பெருமான் திருவுள்ளம் கொண்டு ஒருவனை நியமித்துக் கொண்டால்தான், பகவானுக்குத் தொண்டு செய்ய முடியும்; அதுவும் அவனது இன்னருளே! பகவானுக்குச் செய்யும் தொண்டினைக் கைங்கரியம் என்று பெரியோர் பகருவர். இதனை 'வழுவிலா அடிமை' என்றார் ஆழ்வார். பகவானுக்கு சேஷப் பொருள் என்று ஒவ்வொருவரும் தன்னை நினைப்பதே சிறந்தது. 'நான் கோவிலில் வேலை செய்கிறேன்' என்று கூறுவதைக் காட்டிலும் 'அடியேன் ஸன்னிதியில் கைங்கர்யம் செய்கிறேன்' என்று கூறுவது எவ்வளவு அழகாக இருக்கிறது பாருங்கள்! ஆதலால் பகவானுக்குச் செய்யும் தொண்டினைக் 'கைங்கர்யம்' என்று சொல்லுவதே ஸ்ரீவைஷ்ணவ மரபாகும்.

**திருத்துழாய்:** 'பூசைக்கு நேரமாச்சு; தொளசி பறிச்சுண்டு வா' என்று வயது முதிர்ந்த ஒருவர் இளைஞனுக்குக் கட்டளை இட்டது ஒரு நாள் அடியேனுடைய செவிகளில் விழுந்தது. துளஸிக்குத் திருத்துழாய் அல்லது 'துழாய்' என்று பொருள். துளசி என்பது ஸம்ஸ்கிருதப் பெயர். 'பறித்துவா!' என்றால் சிறுவன் கிளை கிளையாகவே ஒடித்து வருவான். இது ஸ்ரீமந்நாராயணனுக்கு மிகவும் விருப்பமுள்ள பொருள். திருத்துழாய் இலையாகவும், மலராகவும் பயன்படுகிறது! பார்க்கும் போது இலையாகத் தோன்றுகிறது, பகவானுக்கு மாலையாக இருக்கும் போது மலராகக் காட்சியளிக்கிறது 'மலர் பறித்தல்' என்பதற்கும் 'மலர் கொய்தல்' என்பதற்கும் பொருளில் வேறுபாடு உண்டு. மாட்டேன் என்று சொன்னாலும், ஒரு பொருளை பலாத்காரமாகக் கவர்ந்து வருதலுக்குப் 'பறித்தல்' என்று பெயர். செடியைத் துன்புறுத்தி மலர் எடுக்கக் கூடாது! மலரை விரும்புகிறவன் தன் கைக்கும்

செடிக்கும் வலி ஏற்படாதவாறு செடியிலிருந்து மலரை எடுக்க வேண்டும்; இதுவே கொய்தல்' எனப்படும். துளசிச் செடி தெய்வீகச் செடி. பகவானுக்குத் திருவாராதனம் செய்வதற்கே திருத்துழாய் கொண்டு வர வேண்டும். ஆழ்வார்கள் துளஸியைத் திருத்துழாய் என்றே கூறியுள்ளபடியால் ஸ்ரீவைஷ்ணவர்களாகிய நாமும் திருத்துழாய் என்றே சொல்ல வேண்டும்; 'துளசி பறித்து வா' என்பதை 'திருத்துழாய் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வா' என்றும் சொல்ல வேண்டும். நம் முன்னோர் மொழிந்த மொழி தப்பாமல் சொல்லு வோமாக.

**அக்காரவடிசில் :** அடிசில் என்பது அழகிய தமிழ்ச்சொல். இச் சொல் சோறு, உணவு என்ற பொருள்களைத் தருகிறது. நம்மாழ்வார் பகவானை 'அறுசுவை அடிசில் என்கோ'! என்றார். ஆண்டாளும் 'இன்னடிசிலொடு பாலமுதூட்டி எடுத்த என் கோலக்கிளி' என்று கூறுகிறாள். திருமாலிருஞ்சோலை அழகருக்குச் நூறு தடா அக்கார வடிசில் ஸமர்ப்பித்தாள். ஸ்ரீவைஷ்ணவர்கள் 'திருக்கண்ணமுது' என்ற உணவையே அக்காரவடிசில் என்று கூறுகிறார்கள். இதற்கு ஸம்ஸ்க்ருத மொழியில் 'பாயஸம்' என்று பெயராயினும், அக்காரவடி சில் என்றே நாம் கூறிப்பழகவேண்டும். அக்காரம்—இனிப்பு. சோளங்கிபுரம் மலைமேல் இருக்கும் நரஸிம்மரை 'அக்காரக் கனி' என்கிறார் திருமங்கையாழ்வார்.

**ஸ்வாமி அடியேன் :** ஸ்ரீவைஷ்ணவத்திலன்றி வேறு சமயத்தவர் தளுக்கு இந்த வார்த்தைகளே தெரியாது. தெரிந்தாலும் சொல்லுவ தில்லை. இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் சந்தித்தால் ஒருவரை ஒருவர் தண்டம் ஸமர்ப்பிப்பார். தன்னை 'அடியேன்' என்றும், மற்றவரை 'ஸ்வாமி' என்றும் குறிப்பிட்டுப் பேசுவார்கள். நான் என்ற சொல் அஹங்காரத்தைக் குறிக்கும் அதனால், தேவர்குக்கு அடியேன் தாஸன் என்பதைத் தெரிவிக்கும் முறையில் 'அடியேன்' என்று கூறு வது ஸ்ரீவைஷ்ணவர்களின் தனிச்சிறப்பு! அடியேன் என்ற சொல்லும் அதன் பொருளும் மனத்தில் ஆழ்ந்துவிட்டால் உண்மையான ஸ்ரீவைஷ்ணவம் விளங்கும். ஒரு ஸ்வாமி! நூற்றாண்டு விழாவையும் (சதாப்தி) நடத்திக் கொண்டார். இவ்வுலக வாழ்வை விட்டுச் செல் லும் நாள் நெருங்கிவிட்டது; ஆஹாரமில்லை; பார்வை இல்லை; படுத்த படுக்கை! ஒரு நண்பர் வந்து அவரைப் பெயரிட்டு அழைத்தார்! படுத் திருப்பவர் நினைவு தவறிய நிலையிலும் 'அடியேன்' என்று பதில்

கொடுத்தார். வந்தவர் திகைத்தார்! என்ன! இப்போதும் அடியேன் என்கிறீரே என்றார்.

ஆம்! உண்மையான ஸ்ரீவைஷ்ணவம் மனத்தில் நிலைத்திருப்பதற்கு இதுவே அடையாளம். பெரியோரை அழைக்கும்போது ஸ்வாமி என்று அழைக்கவேண்டும்; பெரியோர் அழைத்தால் 'அடியேன்' என்று பதில் அளிக்க வேண்டும்.

நண்பர்களே! பழக்கமில்லாமையால் ஸ்ரீவைஷ்ணவர்களிடையே சொல்லப்பட்டு வந்த வார்த்தைகளெல்லாம் உருவம் மாறிவிட்டன; சில வார்த்தைகள் மறைந்தே போயின! மீண்டும் இப்படிப்பட்ட அழகிய வார்த்தைகளை எல்லாம் சிறுவர் முதல் பெரியோர்கள் வரை நன்கு சொல்லும் காலமே நமக்குப் பொற்காலமாகும்! அந்த நாளும் வந்திடாதோ!



# கோவிந்தா! கோவிந்தா!

Dr. V.V. ராமானுஜம்

புரட்டாசி சனிக்கிழமைகளில் காண்பதும் கேட்பதுமான காட்சி ஒன்று: சிறுவர் சிறுமியர்கள் திருமணிட்ட (நாமம் போட்ட) ஒரு பாத்திரத்தைக் கையிலேந்தி வீடுவீடாகச் சென்று எழுப்பும் கூப்பாடு।

வெங்கடேசப் பெருமாளுக்கு ஒரு கோவிந்தம் போடுடா... **கோவிந்தா! கோவிந்தா!**... அலமேலுமங்கத்தாயாருக்கு ஒரு கோவிந்தம் போடுடா— **கோவிந்தா! கோவிந்தா!**...கோவிந்த நாம ஸங்கீர்த்தனம் அவர்கள் கையிலுள்ள பாத்திரங்களை அரிசியால் நிரப்பிவிடுகிறது.

கதை நிகழ்த்தும் பாகவதர் தம்முன் குழுமியுள்ள பக்தர்களை அழைக்கிறார்। கோவிந்த நாம ஸங்கீர்த்தனம்—உடனே எதிர்குரல் எழுகிறது **கோவிந்தா ! கோவிந்தா !**—இது ஆத்மார்த்தம்.

பாமரர்கள் நடுவே கோவிந்த நாமம் இகழ்ச்சி தோற்றவும் சொல்லப்படுகிறது. கைப்பொருளை இழந்தவன் ஒருவன் தேடியும் காணாமல் நசையற்று, "அது கோவிந்தா ஆய்விட்டது; என்னும் தண்ணியும் விட வேண்டியதுதான்" என்பது காதில் விழுகிறது. இன்னொன்றும் உலகவழக்கில் உள்ளது கேட்கலாம்—ஏமாற்றமடைந்த ஒருவன், "அட! அவன் நாமத்தைப் பெரிசா கொழச்சுப் போட்டுட்டாண்டா" என்பதை. இங்கு நாமம் என்பது நாமணியும் திருமண்காப்பை. *நெற்றியுள் நின்று என்னையாளும் நிறைமலர்ப் பாதங்கள் சூடி என்கிறபடியே ஸ்ரீவைஷ்ணவாக்ரேஸரர்கள் அணியும் திருமண்காப்புக்கு இப்படி ஒரு இகழ்ச்சியா? என்ன பாபமிது?

அருளிச்செயலில் எடுக்கப்பட்ட ஒரு கதை கொண்டு "கோவிந்தா" இவைதை விளக்குவோம்.

**மொய்த்தவல் வினையுள்நின்று மூன்றெழுத்துடையபேரால்**
**கத்திரபந்து மன்றே பராங்கதிகண்டு கொண்டான்**

என்பது **திருமாலையின்** 4-ம் பாசுரத்தின் முற்கூறு. மாபெரும்பாபியான கத்திரபந்து (க்ஷத்ரபந்து) மூன்றெழுத்துப் பெயரைச் சொல்லி—**கோ-வின்-தா** என்று சொல்லி— பரமபதம் பெற்றான்.

கத்திரபந்து என்பான் மிகவும் கொடியவன். பிறரைத் துன்புறுத்துவதே அவன் பொதுபோக்கு. அவன் வாழ்ந்த கானகத்துக்கு ஒருநாள் ஒரு முனிவர் வழிதவறி வந்துவிட்டார். நல்ல வெயிலில் பெருந்தாகத்தால் உந்தப்பட்டு அங்கிருந்த குளம் ஒன்றில் நீரருந்த இழிந்தவர் அதில் விழுந்துவிட்டார். இதைக் கண்டிருந்த கத்திரபந்து ஏதோவொரு நல்வினைப்பயனால் தூண்டப்பட்டவனாய் அந்தப் பெரியவரைக் கரைசேர்த்து உண்ண உணவுதந்து ஆச்வாஸப் படுத்தினான். இதனால் மகிழ்வுற்ற அந்த முனிவர் "எனக்குப் பேருபகாரம் பண்ணிய புண்ணியன் நீ யார்?" என்று அன்புடன் வினவ, பந்துவும் தன்னைப்பற்றி ஒளிக்காமல் எல்லாம் சொல்ல, முனிவரும், இவனைத் திருத்தவேணும் என்று பல நன்மொழிகளைச் சொல்லியும் அவனைத் திருத்த முடியாது என்று கண்டு "நீ யாது செய்தாலும் எப்போதும் கோவிந்தா! கோவிந்தா! என்று என்று சொல்லிக் கொண்டே செய்வாயாக" என்று சொல்லிப் போயினர். இவனும் ஸதா கோவிந்தன் பேரைச் சொல்லிக்கொண்டிருந்ததினால் பாவச் செயல்களைச் செய்தானாயினும் நாளடைவில் திருந்தி நற்கதி பெற்றான். அவன் பெற்றது *மீட்சியின்றி வைகுந்த மாநகர் என்கிறபடி மறுபடி இந்த லோகம் வராதபடியான பேறு. வைகுந்தத்தில் "நிரஞ்ஜந: பரமம் ஸாம்ய முபைதி" என்கிறபடி எம்பெருமானுடன் ஸாம்யம் பெற்று "கோவிந்தா"வாகவே ஆயினன். இந்தக் கதையில் காட்டப்பட்ட உயரிய வேதாந்தார்த்தம் பாமர வழக்கில் அநர்த்தமானதாகத் திரிந்துவிட்டது. அந்தோ! பரிதாபம்!

இப்படியே "நாமம் போடும்" விஷயமும். திருமண்காப்பை 'நாமம்" என்று உலகவழக்கில் சொல்லுவது ஏன்? எம்பெருமானுடைய த்வாதச (12) திருநாமங்களைச் சொல்லி உடம்பில் உசிதமான இடங்களில் திருமண்காப்புகளை (ஊர்த்வபுண்ட்ரம்) இட்டுக் கொள்வதால் ஒவ்வொரு திருமண்காப்பும் பகவானின் ஒரு திருநாமத்தையுடையதாகும். "கேசவன்தமர்" என்ற திருவாய்மொழியின் ஈட்டு ப்ரவேசத்தில் எம்பார் ஸாதிப்பாராகக் காணும் வாசகம்: "ஆழ்வார் ஸ்ரீவைஷ்ணவன் ஆனேன் என்கிறார். வைஷ்ணவத்வ சிந்நமிறே திருத்வாதசநாமம்" என்பவை. ஸமாச்ரயணத்தின் போது ஆசார்யன் பண்ணும் பஞ்சஸம்ஸ்காரங்களில் புண்ட்ர ஸம்ஸ்காரமும் ஒன்று. பெருமாளுடையவும் பிராட்டியுடையவும் பன்னிரு திருநாமங்களைச் சொல்லி சிஷ்யனுடைய உடம்பில் பன்னிரண்டு இடங்களில் திருமண் ஸ்ரீசூர்ணம் அணிவிக்கிறான். இந்த திருத்வாதச நாமம் ஸ்ரீவைஷ்ணவ வெளி அடையாளங்களில் சிறந்தது, முக்கியமானது. *தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே என்கிறபடி எம்பெருமானுக்கே (பிராட்டியும் ததீயர்களும் எம்பெருமானில் சேர்ந்தவர்கள்) ஆளானமைக்கு

அடையாளம். இதனுல் இவன் அவைஷ்ணவர்களான சௌவிகர்களுக்கும் தேவதாந்தரங்களுக்கும் நஷ்டமாய் விடுவதால் "நாமம் போடுவது" அவர்கள் வழக்கில் பரிஹாஸோக்தியாய் விட்டது. மனிதன் விஷயமாக ஏற்பட்ட வழக்குகள் பொருள்கள் விஷயத்தில் ஆய்விட்டது.

**கோவிந்தா** என்ற திருநாமத்தின் பொருளையும் அப்பெயரை நமது ஆழ்வார்கள் ஆசாரியர்கள் அநுபவித்துள்ள பாங்கையும் எடுத்துரைக்க எண்ணி இக்கட்டுரையைத் துவங்கினேன். கூடியவரை அருளிச் செயல்களில் வரும் சொற்றெடர்களையே கட்டுரைத் தலைப்பாகத் தருவது அடியேன் வழக்கம். பெரியாழ்வார் தமது திருமொழியில் நமக்கு நல்கும் சிறந்த புத்திமதி இக்காலத்தில் அவசியமாகப் பின்பற்றத் தக்கது

**நம்பிபிம்பியென்று நாட்டுமானிடப்பேரிட்டால்**
**நம்புபிம்புமெல்லாம் நாலு, நாளிலழுங்கிப்போம்**
* * * * * * *
**குலமுடைக்கோவிந்தா! கோவிந்தா! என்றழைத்தக்கால்**
**நலமுடை நாரணன் தம்மன்னை நரகம்புகாள்.**

உங்கள் குழந்தைகளுக்கு **பிம்பி** என்றும் அதற்கு ப்ராசமாக **நம்பி** என்றும் கிராம முதல்வர்களையிட்டுப் பெயர் வைப்பதில் ஒரு பயனுமில்லை. *பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்த என்கிறபடியே கோபகுலத்தில், *ஆயர்குலத்தை விடுய்யத் தோன்றிய கருமாணிக்கச் சுடராக வந்து தோன்றிய **கோவிந்தன்** பெயரையிட்டழைக்கும் திருவுடையாளாகிய (சீமாட்டியாகிய) அன்னை, எமனுக்கு அஞ்ச வேண்டாம். அவளுடைய உஜ்ஜீவனம் நிச்சயம். தகப்பனும் கூடத்தான்—ஐயம் ஒன்றும் வேண்டாம். கோவிந்தன் பெயர் தாங்கிய பிள்ளையின் அன்னையை நாரணன் தம்மன்னை என்கிருர் ஆழ்வார். திருப்பாவையில் * **கறவைகள்** பாசுரம் கேட்டோர், **நாராயணன்** அவனுக்குச் சிறுபேர் என்றும், கோவிந்தன் பெரும்பேர் என்றும் அறிவர்கள். இதனைப் பின்னர் விளக்குவோம்.

அருளிச்செயலில் இச்சொற்றெடரை இன்னுமொரு இடத்திலும் காணலாம்.

**கூட்டிலிருந்துகிளி எப்போதும் கோவிந்தா! கோவிந்தா!**
**என்றழைக்கும்**
**ஊட்டக்கொடாது செறுப்பனுகில் உலகளந்தானென்று**
**உயரக்கூவும்**

என்பது நாச்சியார் திருமொழியில் ஆண்டாள் திருவாக்கு: நாச்சியார் எம்பெருமானுடன் கூடிக்களித்து மனநிறைவுடன் கோவிந்தன் பெயரைச் சொல்லக்கேட்ட கிளி, அப்பெயரை அடிக்கடி திருப்பிச் செல்லக்கேட்டு மகிழ்ந்து அக்கிளியைக் கைகூப்பி வணங்குவதுமுண்டு. ஆனால் இவள் அவனிடமிருந்து பிரிந்த நிலையிலும் கிளி இப்பேரைச் சொல்லுவது இவளுக்கு நலிவையுண்டாக்க, அதைப் பட்டினியிட்ட வாறே, அப்பெயரை இன்னும் உரக்கக் கூவுமாம். "விண்ணப்பம் செய்பவர்கள் (அரையர்) மிடற்றுக்கு எண்ணெயிட்டுப் பட்டினிவிட்டு மிடற்றில் கனமாற்றிப் பாடுமாப்போலே உயரப்பாடுகைக்கு உடலாய் விட்டது" என்று இங்கு பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்யானம் அநுபவிக்கத் தக்கது.

கிளிகள் மட்டுமல்ல; குயில்களும் கோவிந்தனைப் பாடுமிடம் உண்டு.

***கொம்பினார்பொழில்வாய்க் குயிலினம் கோவிந்தன் குணம்பாடும் சீர்** என்பது பெரியாழ்வார் பாசுரம். திருக்கோட்டியூரில் சோலைவாழ் குயில்கள், பசுமேய்க்கும் இடைக்குலமான தாழ்ந்த குலத்தில் வந்து பிறந்து, விவேகமில்லாததால் தாழ்ந்த அவைகளை ரக்ஷிக்கையை விரதமாகக் கொண்ட அவனுடைய ஸௌலப்ய குணத்தைப் புகழ்ந்து பாடுமாம். நாச்சியாருடைய கிளி அவன் பாடியதைப் பின்சென்று பாடிற்று. இக்குயில்கள் தாமே அவன் பெருமையைப் பாடாநிற்கும். *இட்டமான பசுக்களை இனிது மறித்து நீரூட்டி என்கிறபடி தம்மை ரக்ஷித்துக் கொள்ளப் பயிலாத ஜந்துக்களை ரக்ஷிப்பதில் தீக்ஷிதனுமிவன் நம்முடைய ரக்ஷணத்தையும் அவன் பரம் என்று இட்டுவிட்டால் இனிதே செய்பவன் என்பது அறியத்தக்கது. *இவத்திலும் பசுநிரை மேய்ப்புவத்தி — பரமபதத்திலிருப்பைக் காட்டிலும் பசுமேய்க்கும் இடையனான இருப்பே இவனுக்கு இனிதாம். அங்கும் கோவிந்த வேஷம் பூண்டு "ட்ரியோ! ட்ரியோ!" என்று கூவிமகிழ்வானோ என்னவோ?

***கோவிந்தன் குழல் கொடுதினபோது** (பெரியா. திரு) என் இடத்தின் ஜீயர் வ்யாக்யானம் — "கோரக்ஷணத்திலே தீக்ஷிதனு அவைகளை மேய்த்து திரியுமவன்; அவை மேய்ந்து வயிறு நிறைந் ஹர்ஷத்தாலே ஸர்வ ஜந்து மநோஹரமாக திருக்குழல் கொண் ஊதினபோது." ஆக இவன் பசுக்கள் வயிறு நிறைந்தால் தன் வயி நிரம்பியதாக எண்ணி மகிழ்பவன். ஆச்ரிதர் குறைதீர்த்து அதனு மகிழ்பவன் என்றதாயிற்று.

கோவிந்தா என்ற பெயரினால், ஸர்வஸுலபன், நீர்மையுடையவன், வாத்ஸல்யம் என்ற நிகரில்புகழ் பிரகாசிப்பவன், ஸர்வரக்ஷகன் என்பவை தேறும். இத்திருநாமத்தைப் பெரியாழ்வாரும் அவர் திருமகளுமே தமது பாசுரங்களில் மிக அதிகமாகவைத்துப் பாடுகின்றனர். சிலவற்றை மேலே பேசி மகிழ்ந்தோம்.

கோவிந்த நாமத்தினால் தேறும் ரக்ஷகத்வத்தை மஹாபாரத வரலாறு மூலம் அனுபவிப்போம். "த்ரௌபதிக்கு ஆபத்தில் புடவை சுரந்தது திருநாமமிறே! — அவன் தூரஸ்தனானாலும் இதுகிட்ட நின்று உதவும்" என்பது முமுக்ஷுப்படி ரஹஸ்யத்தில் லோகாசார்யர் திருவாக்கு. பேரோலக்கத்தில், மஹத்தான ஆபத்து வந்தபோது திரௌபதி, "ஹா கிருஷ்ணா! துவாரகாவாஸா! யாதவநந்தந! நீ எங்குள்ளாய்? இவ்வாபத்தில் அநாதையாய் நிற்கும் என்னை உபேக்ஷிப்பது உனக்குத் தகுமா? சங்கசக்ரகதாபாணே! த்வாரகாநிலய! உன்னைப் பற்றினவரை நழுவ விடாத அச்சுதனே! கோவிந்தா! தாமரைக்கண்ணா! உன்னையே புகலாகப்பற்றினேன். என் ரக்ஷணம் உன் பொறுப்பு" என்று கதறி வெட்கத்தை விட்டு இருகைகளையும் உயரத்தூக்கி அவனைத் தொழுது இறைஞ்சியபோது அவள் மானம் மேலும் புடவை சுரந்ததால் காப்பாற்றப் பட்டது. இது திருநாமபலத்தாலே. ஆனால் அவள் பல பெயர்களைச் சொன்னாளே! கோவிந்தநாமம் ரக்ஷித்ததென்பது எப்படி?

இது கண்ணனுடைய திருவாக்கு :

**கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம் |**
**ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந் நாபஸர்ப்பதி ||**

எங்கோ வெகுதூரத்திலிருந்த என்னை க்ருஷ்ணையானவள் (திரௌபதி) **கோவிந்தா!** ரக்ஷகனே! என்று அழைத்தாளே! அப்போது கிட்ட இருந்து உதவிப் பெற்றிலேனே! இந்தக்குறை விருத்தியடைந்த (வட்டியுடன் கூடிய) கடன் போல் என் நெஞ்சிலிருந்து அகல்கின்றதில்லை. பாண்டவதூதனாய்க் கழுத்தில் ஓலைகட்டிச் சென்று பாரதப்பூசலை விளைத்து, பார்த்தனுக்குத் தேரோட்டியாக இருந்து இழிதொழில் செய்து 'கொல்லாமாக்கோல் கொலைசெய்து' என்கிறபடியே தன் அஸாதாரணமான ஆயுதமெதையும் எடாமல் குதிரை செலுத்தும் குச்சிகொண்டே பாரதசேனை அவ்வளவையும் நாசம் செய்து, பகலை இரவாக்கி, பொய் சொல்லி, சூது செய்து, இப்படி ஆனைத்தொழில்களெல்லாம் செய்து, த்ரௌபதியின் மங்களஸூத்ரம் தங்கும்படி பாண்டவர்களை ரக்ஷித்து அவள்குழலையும் முடிப்பித்தானல்லவா? இவ்வளவு செய்தும் "**விலை**

லாப ஸ்லாமத்யே'' என்று அவள் கதறியபோது கிட்ட. நின்று விரோதி களைக் களைந்து உதவாதது அவன் மனதில் இன்னும்ன் குறையாகவே யுள்ளதாம். இதுவன்றோ ரக்ஷகனுக்கு இலக்கணம்? அவன் தெய்வத் தேரினின்றும் செப்பிய கீதையில், *கௌந்தேய! ப்ரதிஜாநீஹி-நமே பக்த: ப்ரணச்யதி (9-31) குந்திபுத்ரனான அர்ஜுன! நீ சபதம் செய் வாயாக! என் பக்தன் நாசத்தையடைவதில்லை என்று திருவாய் மலர்ந் தருளுகிறான். ''ஆயுதமெடேன் என்ற என் வார்த்தையை பக்தரான பீஷ்மர் வாக்கை மெய்ப்பிப்பதற்காகப் பொய்யாக்கினேன். உன் ப்ரதிஜ்ஞை ஸத்யமாக இருக்கும்படி ஆச்ரித ரக்ஷகனான நான் காப்பேன். நீ சபதமிடுவாயாக—கண்ணனை அண்டினவன் ரக்ஷிக்கப் பட்டே தீருவான் என்று'' இப்படிப்பட்ட ரக்ஷகன் நமக்காகக் காத் திருக்கும்போது லோகத்தில் பலர் திருவில்லாத்தேவர் பலரையும் நம்பி நிற்பதுதான் கலிகால அதிசயம்.

**சேட்டைதன் மடியகத்துச் செல்வம் பார்த்திருக்கின்றீரே!**
**வெள்கிப்போய் என்னுள்ளே நான் விலவறச் சிரித்திட்டேனே!**

என்றுதான் சொல்லவேணும்.

கோவிந்தன் என்னும் பதம் பசுக்களை ரக்ஷிப்பவன் என்ற பொரு ளைக் கொண்டது. கோவர்த்தன மலையை எடுத்து இடையரையும் பசுக் கூட்டங்களையும் ரக்ஷித்தபிறகு மழைபெய்து ஓய்ந்த இந்திரன் கண்ணனைத் தொழுது, தன் தவறுகளுக்காக க்ஷமை வேண்டி, கோவிந்த பட்டாபிஷேகம் பண்ணிச் சென்றது யாவருமறிந்த சரித்திரம். கோவிந்த நாமம் க்ருஷ்ணாவதாரத்துக்கு அஸாதரணமானதாயினும் எம்பெருமானுக்கு இது பொதுவான பெயராகும். பூமிக்கு ரக்ஷகன் என்பது இந்தப் பெயருக்குப் பொதுவான பொருளாகும். ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் ஸுராநந்த:—கோவிந்த; என்றும் மஹாவராஹ:— கோவிந்த: (189, 543) என்று இரண்டு இடங்களில் கோவிந்த நாமம் படிக்கப்பட்டுள்ளது. முதல் கோவிந்த:-வுக்கு தேவர்கள் துதிகளான வாக்குகளைப் பெறுபவன்—அதாவது* நாத்தழும்ப நான்முகனும் ஈசனும் ஏத்த என்கிற க்ரமத்தில் ஸகல தேவதைகளாலும் ஸதா துதிக்கப்படு மவன் என்றும், பின்வரும் கோவிந்த:-வுக்கு மஹாவராஹமாய் அண்ட பித்தியினின்றும் நஷ்டமான பூமியை எடுத்து தன்னதாக்கிக் கொண் டவன் என்றும் பராசரபட்டர் பொருள் அருளியுள்ளார்.

இனி திருப்பாவையில் நம்மாசிரியர்கள் இத்திருநாமத்தை அநு பவிக்குமழகைச் சிறிது பேசி மகிழ்வோம். மூன்று இடங்களில்— அதாவது *கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா!, *குறைவொன்று

இல்லாத கோவிந்தா!' *இற்றைப்பறை கொள்வானன்றுகாண் கோவிந்தா! என்று முறையே 27-கூடாரை, 28-கறவைகள், 29-சிற்றம் சிறுகாலே பாசுரங்களில் இந்தத் திருநாமம் கொண்டு கண்ணனை கோபியர் அழைக்கின்றனர்.

**கூடாரை வெல்லும் சீர்க்கோவிந்தா!**—கூடார் என்பது நாமேயம் என்றிருந்த ராவணன் போல்வாரை. ப்ரதிகூலர்களைத் தன் பராக்ரமத்தாலே வெல்லும். அநுகூலரை வெல்லப்போமா? அவர்களுக்கு இவன் தோற்பவனே. அப்படி தோற்கும் ஸௌசீலனும் நீர்மையுடையவனுமாவான் இவன். இவனுக்குப் பரம அநுகூலாதிகாரிகளான பாண்டவர்களுக்கு இவன் செய்யாத பணி யாது உண்டு? *மல்லிகை மாமாலை கொண்டு அங்கார்த்ததுமோர் அடையாளம் என்று இவன் பிராட்டியிடம் போட்டியில் தோற்று அவனால் கட்டுபபட்டுக் கிடந்தவனன்றோ! அநுகூலராக இருக்கவும் வேண்டா; "கூடமாட்டோம்" என்று சொல்லாமல் இருந்தால்போரும் இவன் பொருந்துகைக்கு. கன்றுகளும் பசுக்களும் இவனிடம் கூடுவோம் என்றோ கூடமாட்டோம் என்றோ சொல்லவில்லை. *கன்று மேய்த்தினிதுகந்தகாளாய்! என்றும், * பசுநிரை மேய்ப்புவத்தி என்றும் எல்லா ஜீவராசிகளுடன் பொருந்தும் நீர்மையுடையவன் இவன். **ஸௌந்தர்ய ஆவிஷ்காரேண அக்ரூர மாலாகாராதீன் பரமபாகவதான் க்ருத்வா** என்பது எம்பெருமானார் திருவாக்கு. அக்ரூரர், மாலாகாரர் போன்ற அநுகூலர்களுக்குத் தன்னழகை முழுதும் காட்டித் தனக்காக்கி கொண்டவன் என்பதும் அறிக. இவன் ஸாது பரித்ராணம் பண்ணும் முறை இது.

**குறைவொன்றுமில்லாத கோவிந்தா!** "கறவைகள் பின்சென்று" என்று தொடங்கி, "இறைவா! நீ தாராய் பறை" என்று முடிகிறது இப்பாசுரம். பறை என்பதற்கு கண்ணன் திருவடிகளில் குற்றவேல் புரிவதாகிற வாழ்ச்சி (பேறு) என்று மேலே ஆய்ச்சியரே தெரிவிக்கின்றனர். அப்பேறு பெற கண்ணனை உபாயமாகப் பற்றுகின்றனர் இப்பாசுரத்தில் தமது வெறுமையைச் சொல்லி. *அறியாதபிள்ளைகளோம் என்றும், *அறிவொன்றுமில்லாத ஆய்க்குலம் என்றும் சொல்லுகிறார்களாயினும், "எங்களில் ஒருவனாக உந்தன்னைப் பெறும் புண்ணியம் எங்களுக்கு வாய்த்துள்ளது" என்கின்றனர். கோவர்த்தன மலையைத் தாங்கி ரக்ஷித்தபோது, "உன் அதிமாநுஷமான செயல் கண்டு நீ தேவனோ? தானவனோ!" என்று நாங்கள் கேட்க, "நான் உங்களில் ஒருவனாயிற்றே! உறவறுத்துப் பேசலாமா?" என்று சீறினதை மறந்தாயோ? நிறைவாளனான உன்னையே உடையோமாய் இருக்க கர்ம ஞான பக்திகளாகிற ஸாதனங்கள் எங்களிடையே இல்லாமை குறையாகாது. எங்களிடம் எந்தக் குறை இருந்தாலும் உன் நிறைவை இட்டு அவைகளை நிரப்பலாம். குறைவு ஒன்றுமே இல்லாதவனன்றோ

நீ! குணபூர்ணனான நீயே எங்களுக்கு புண்ணியமாய் அமைந்துள்ளாயே! ''என்னைப்புகலாகப் பற்று—உன் பாபங்களை நான் போக்குகிறேன்'' என்றது வெறுமனேயா?'' என்று இவர்கள் நெஞ்சில் ஓடுகிற எண்ணங்கள் *குறைவொன்றுமில்லாத கோவிந்தா! என்ற விளிக்கு அர்த்தமாகக் கொள்ள வேண்டும்.

இங்கு **கோவிந்தா!** என்ற பெயருக்கு கீதையில் சரமச்லோகத்தில் என்னையே பற்று என்று தன்னைக்காட்டிய **மாம்** என்ற சொல்லின் பொருளே பொருளாகும். ''எளியனாய் உனக்கு ஸுலபனாய் உனக்குக் கையாளாய் இருக்கும் என்னையே புகலாகப்பற்று'' என்றான் கண்ணன்.

**மாம்** *ஸர்வரக்ஷகனாய், உனக்குக் கையாளாய், உன்னிசைவு பார்த்து, உன் தோஷத்தைப் போக்யமாகக் கொண்டு, உனக்குப் புகலாய், நீர் சுடுமாபோலே சேர்ப்பாரே பிரிக்கும்போதும் விட மாட்டாதே ரக்ஷிக்கிற என்னை. கையும் உழவுகோலும், பிடித்த சிறு வாய்க்கயிறும், ஸேனாதூளி தூஸரிதமான திருக்குழலும், தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற ஸாரத்ய வேஷத்தை **மாம்** என்று காட்டுகிறான் — இவை சரமச்லோக ப்ரகரணத்தில் **மாம்** என்பதை விளக்கும் லோகாசார்யன் ஸ்ரீஸூக்திகள். திருப்பாவை 6000ப்படி வியாக்யானத்தில் இவர் தம்பியான நாயனார் ஸ்ரீஸூக்தி வருமாறு: ''**கோவிந்தா!** 'மாமேகம்'' என்றவன் பாசுரமன்றோ? கடையாவும் கழிகோலும், கையிலே பிடித்த கண்ணிக்கயிறும், கற்றுத் தூளியாலே தூஸரிதமான திருக்குழலும், மறித்துத் திரிகிறபோது திருவடிகளிலே கிடந்து ஆரவாரிக்கிற கழல்கள் சதங்கைகளும், குளிர் முத்தின் கோடாலமுமாய் நிற்கிற **உபாயவேஷத்தை ''கோவிந்தா''** என்கிறார்கள்''. **மாம் ஏகம்** என்றுத் தன்னையே உபாயமாகக் காட்டுவது, ஸாரதியாய் எளியவனாய் நிற்கும் வேஷத்தை (நிலையை). இங்கு இடைச்சிகள் கோவிந்தனை உபாயமாய் வரிக்கிறார்கள். அவர்கள்முன் நிற்கும் உபாயவேஷத்தை கடையாவும் இத்யாதி வாக்ய ஜாலத்தால் விவரிக்கிறார் நாயனார்.

லோககுருவும் நாயனாருமாகக் காட்டித்தரும் இரண்டு அர்த்தங்களும், ஸர்வஸுலபனாய், நாம் கிட்டிச்சென்று பற்றலாம்படி நமக்கு ஒரு புகலாய், வாத்ஸல்யாதி குணபரிபூர்ணனான கண்ணனே நமக்கு ரக்ஷகன் என்பதையே விளக்குமவை. கண்ணனே நமக்கு பேற்றுக்கு உபாயம். பேறுவது அவனையடைந்து அவனுக்கு ஆட்செய்கை. உனக்கே நாமாட் செய்வோம்—மற்றை நங்காமங்கள் மாற்று என்கிறார்கள் மேலே. ஆக நமக்கு உபாயமும் உபேயமும் கோவிந்தனே என்று தேறிற்றாயிற்று.

**கோவிந்தா** என்ற பெயருக்கு "அறிவிலி" என்றும் ஒரு பொருள் உண்டாம். இவர்கள் பறைதாராய் என்று கேட்டதற்கு இவர்கள் நெஞ்சில் ஓடுவதை அறியாதவன் போன்று, ஒரு பெரிய டமாரத்தை (பேரி வாத்யத்தை) எடுத்துத் தரப்புக, ***இயற்றைப்பறை கொள்வான் அன்று காண் கோவிந்தா!** என்கிறார்கள். எங்கள் நெஞ்சிலுள்ளதை அறியமாட்டாத முட்டாளாய் இருந்தாயி-பசுக்கள் பின்னே போனுல் ஞானத்திலும் அவைபோல் ஆய்விட வேணுமா? என்று கேட்கிருர்கள். ஸ்ரீஸஹஸ்ரநாமத்தில் **அவிஜ்ஞாதா** என்று ஒரு திருநாமம் படிக்கப் பட்டுள்ளது. அறியாதவன் என்றபடி, ஸர்வஜ்ஞனை இவன் அறியாதது எது? அறிய வேண்டாம் என்று உபேக்ஷிப்பது தன்னடியார் குற்றங்களைத் தான். கோவிந்த நாமாவுக்கு அறிவிலி என்பது ஒரு நிகண்டு (டிக்ஷ்னரி) அர்த்தமுமாகும். அவிஜ்ஞாதாவின் பொருளையே இந்த பெயருக்கும் ஒரு பொருளாகக் கொள்க.

கோவிந்தன் இடைச்சிகள் மனத்தைப் பளிங்குபோல் காண்பவனு யினும், காணுதவன் போல் லீலாரஸமனுபவித்து, முட்டாளே! என்று அவர்களிடம பட்டம் வாங்கி இன்புறுகிருன். இது நிற்க. நம்பாலுள்ள எல்லாக் குற்றங்களையும் மறைத்துப் பொறுப்பிக்கும் பிராட்டியே — அஜ்ஞாத நிக்ரஹையானவளே — நீர்சுடுமாபோலே (சுடவல்லாத குளிர்ந்த நீர் தொட்டவரைச் சுடுமாகில்) ஆச்ரிதர் பக்கல் குற்றம் கூறுவாளாகில், "என்னடியார் அதுசெய்யார்--செய்தாரேல் நன்று செய்தார்" என்று தமக்குப் புகலாய் நின்று ரக்ஷிப்பவன் கோவிந்தன். இதையே லோகாசார்யர் "நீர்சுடுமாபோலே சேர்ப்பாரே (புருஷகாரமானவளே) பிரிக்கும்போதும் விடமாட்டாதே ரக்ஷிக்கிற என்னை" என்கிருர், இப்படி நீர்மையே உருவான ஒரு தத்துவமே நமக்கு உபாயமாகக் கிடைத்துள்ளது நம்பாக்யமே.

"இப்படி இந்த அவதாரத்தில் உனக்கு மிக உகப்பைத்தரும் கோவிந்த நாமாவைவிட்டு, **நாராயணனே** என்று பலகால் சொன்னேும். அறியாமையால் சொன்னேும்; அன்பினுல் சொன்னேும் பரமஸௌலப்யனை உன்னை அதற்கேற்ற பெயரிட்டழைக்காதே உன் மேன்மையிட்டு ஏற்றிச் சொல்வது குற்றம்தான். * அறியாத பிள்ளைகளோம் — அன்பினுல் உந்தன்னைச் சிறுபேர் அழைத்தனவும் சீறியருளாதே என்று க்ஷமை வேண்டுகின்றனர் கோபியர்.

அருளிச் செயல் பாசுரங்களில் அங்கங்கே வரும் கோவிந்த நாமத்துக்கு அங்கங்கு பொருத்தமாக வ்யாக்யானம் அமைந்துள்ளதை எடுத்து விவரிக்கப்புக்கால் தனிப்புத்தகமாகும். இன்னும் சில இடங் களைக் கூடியவரை அநுபவிப்போம். நாச்சியார் திருமொழியில் "வாரணமாயிரம்" பதிகத்தில்,

"கோளரிமாதவன் கோவிந்த னென்பாரோர்
காளைபுகுதக் கனாக்கண்டேன் தோழீ! நான்

என்ற இடத்து வ்யாக்யானம் ரஸகனமானது. கண்ணன் தன்னை வந்து திருமணம் பண்ணிக்கொண்டதாகத் தான் கண்ட கனவினைத் தோழிக்கு விவரமாகக் கூறுகிறாள் நாச்சியார். கோளரி—ராஜஸிம்மம்; மாதவன் — ச்ரிய:பதி — திருமகள் கேள்வன்; காளை — பருவத்தில் மிடுக்கன். எல்லாம் மாப்பிள்ளையின் பெருமைகளைச் சொல்லும் திருநாமங்கள். இவற்றின் நடுவே நீர்மை பிரகாசிக்கும் திருநாமமான கோவிந்தன். இங்கு பெரியவாச்சான் பிள்ளையின் விளக்கம்: "விவாஹமாயிரா நின்றது; ஆராலே என்ன விக்னம் வருமோ— என்றறியாமலே எல்லாருக்கும் கையாளாய் முகங்கொடுத்துக் கொண்டு வந்தபடி." என்பதே. என்ன ரஸிகசிகாமணிகள் நமது ஆசாரியர்கள்! நம் பாக்யம்தான் என்னே! இப்படிப்பட்ட வியாக்யானங்களுக்கு இட்டுப் பிறந்தமை!

முன்பு ராமாவதாரத்தில் தசரதன் பாரித்து, வசிஷ்டர் நாளிட்டு, பெருமாளும் பெரிய பெருமாளை முன்னிரவெல்லாம் முறையே பூசித்திருந்தும் மறுநாள் பட்டாபிஷேகம் ஒரு கூனியால் தடைப்பட்டது. திருவாய்மொழியில் (1-5-5) ஒரு சிறு ஸம்பவம் பேசப்படுகிறது.

கூனேசிதைய உண்டைவில் நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா!

மந்தரை என்று பெயர் கொண்ட கூனியின் முதுகில் கூன் (முகப்பு) முன்னும் பின்னும் தள்ளும்படி ஒரு சுண்டு வில் கொண்டு விளையாட்டாய் எறிந்தானும் ஸ்ரீராமன் குழந்தை பருவத்தில். இதன் விளைவே பின்னர் பட்டாபிஷேகம் தடைபட்டு வனவாஸம் அநுபவித்தது.

கூனிகூன் உண்டைகொண்டு அரங்கவோட்டி மகிழ்ந்த நாதன்

என்று திருமழிசைப்பிரானும் இந்த வரலாற்றைப் பேசி அநுபவிக்கிறார். இப்படி யதாஜாதையான ஒரு கூனி பட்டாபிஷேகத்தை நடக்கவொட்டாமல் செய்தாற்போல இங்கும் ஆகிவிடக் கூடாதே என்று மிகவும் பவ்யதை தோற்ற வந்தானும் கண்ணன். கல்யாண மண்டபத்தில் குழுமியுள்ளார் யார் காலிலும் விழ ஸித்தமாய் வந்தானும் கண்ணன் ஆனால் ஒரு ஐயம் எழும்—உண்டைவில் கதை ராமனதாயிருக்க ஆழ்வார் இதை கோவிந்தன் தலையில் ஏற்றுவானேன்?

*பல்லாயிரவர் இவ்வூரில் பிள்ளைகள் தீமைகள் செய்வார்—எல்லாம் உன்மேலன்றிப் போகாது எம்பிரானே! என்று அசோதை வயிறுபிடிப்பதாக பெரியாழ்வார் பாசுரம். அதற்கு இதுவும் ஒரு உதாரணம் என்று கொள்க. இங்கு நம்பிள்ளை ஈட்டு பங்கதிகள்: "கோவிந்தா—பூமிக்கு ரக்ஷகனானவன் என்கிறது. (கோவிந்த நாமம் ராமனுக்கும் பொருந்தும் என்றபடி). தீம்பு சேருவது க்ருஷ்ணனுக்கே ஆகையாலே, "போம் பழியெல்லாம் அமணன் தலையாடே" என்னுமா போலே, அவன் (கண்ணன்) தலையிலே ஏறிட்டுச் சொல்லுதல்" என்பவை. தீம்பறியாத ராமன் தீம்பு செய்தான் என்பதை ஒத்துக் கொள்ள மனமில்லாமல் அதைக் கண்ணன் தலையிலிட்டார் போலும் ஆழ்வார்!

"**போம் பழியெல்லாம் அமணன் தலையாடே**" என்பதை அரும்பதக்காரர் ஒரு கதை மூலம் விளக்குகிறார். மூட்டாளும் மூர்க்கனுமான ஒரு அரசன் அரசு செலுத்திய தேசம். அதில் ஒரு கள்ளன் ஒரு பிராமணன் வீட்டில் திருடுவதற்காகக் கன்னம் வைத்துப் புகுந்தான். சுவர் ஈரமாயிருந்ததால் இடிந்து அவன்மேல் விழுந்து அவன் மாண்டான். மறுநாள் அவனைத் தேடிவந்த அவன் மனைவி, கணவன் செத்திருப்பதைக் கண்டு வீட்டுக்காரனை பழியிட்டாள். உன் சுவர் இடிந்து விழுந்தன்றோ என் கணவன் மாண்டான்? நீ நஷ்டஈடு தர வேண்டும் என்று கேட்க, இந்த விவாதம் ராஜாவிடம் போயிற்று, பிராமணன் கொத்தனன்றோ ஈரச்சுவர் வைத்தான்?— அவனைக் கேளுங்கோள் என்ன, கொத்தன் நீர்வார்த்த சிற்றாள் அதிகமாக நீரை விட்டான் என்று குறைசொல்ல, சிற்றாள், பானை பெரியதாயிருந்தது நானென் செய்ய? என்ன, பானை பெரிதாகச் செய்த குயவனை அழைத்துக் கேட்க, அவனும் பானை சமைக்கும் போது ஒரு வேச்யை போக வரத்திரிந்தாள்; அவளைப் பார்க்கும் பராக்கில் பானை பெரியதாயிற்று என்ன, வேச்யையை அழைத்துக் கேட்க, அவள், வண்ணான் என் சேலையைத் தராததால் பலமுறை நடக்கும்படியாயிற்று என்ன, வண்ணானை அழைத்துக் கேட்டதில், சலவைத்துறையில் கல்லின்மேல் அமணன் ஒருவன் உட்கார்ந்திருந்ததால் துணி துவைக்க தாமதமாயிற்று என்ன, அமணனை அழைத்து விசாரிக்க, அவன் மௌன விரதம் பூண்டிருந்தமையால் பதில் ஏதும் சொல்லவில்லை. அவனே குற்றவாளி என்று அரசன் அமணன் தலையைச் சீவிவிடச் சொன்னானாம்!

அனைத்துலகும் வாழப்பிறந்த எதிராஜரான ராமாநுஜாசார்யரின் திவ்யாஜ்ஞைகளில் ஒன்று—திருமலை திருப்பதி ஐதிஹ்யமாலையான **திருமலை ஒழுகு** என்னும் நூலில் காண்பது—ஸ்ரீவேங்கடாசல யாத்ரை பண்ணும் பரமபாகவதர்கள் இதர பகவந் நாமங்களைச் சொல்லாமல்

**கோவிந்தா! கோவிந்தா!** என்று கோவிந்த நாம ஸங்கீர்த்தனத்துடன் படி ஏறவேண்டும் என்பதே. **குஷ்யதே ஸங்கசச் சோச்சை' கோவிந்தேதி புந: புந:** என்று ஸ்ரீவராஹபுராண வசனம். திருத்தேரை வடம் பிடித்திழுக்கும் போதும் இந்தத் திருநாமமே அடியார்களால் அதிகம் பாடப்படுகிறது. ஸ்ரீவேங்கடாசலாதீசனை (ஸ்ரீநிவாஸனை( கோவிந்தன் என்றே ஆண்டாள் அழைப்பதும் இங்கு குறிகொள்ளத் தக்கது.

**குளிரருவிவேங்கடத்து என்கோவிந்தன் குணம்பாடி**
**அளியத்த மேகங்காள்! ஆவிகாத்திருப்பேனே!**

என்பது நாச்சியார் திருமொழி. இங்கு கோவிந்த நாமம், — ஸர்வ ஸுலபனான நிலையைத் தவிர்க்கவொண்ணாதிரே—என்று வியாக்யானிக்கப் பட்டுள்ளது. "அகலகில்லேன்" (திருவாய்மொழி 6-10-10) பாசுரத்தில் **நிகரில் புகழாய்!** என்ற இடத்தில் திருவேங்கடமுடையானுக்கு வாத்ஸல்யம் என்ற மஹாகுணமே நிகரில்புகழ் என்று அறுதியிடப்பட்டுள்ளது. மேலும் நாச்சியார் மன்மதனை விளித்து, உன மலர் பாணங்களையெய்து என்னையும் வேங்கடவனையும் சேர்த்து வைக்கப்பாராய் என்று வேண்டுகையில்,

**கொத்தலர்பூங்கணை தொடுத்துக்கொண்டு கோவிந்த**
**னென்பதோர் பேரெழுதி**
**வித்தகன் வேங்கடவாணனென்னும் விளக்கினிற்புக என்னை**
**விதிக்கிற்றியே.**

என்று வேண்டுகிறார். இங்கும் பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானம் இன்சுவையானது. கொத்துக் கொத்தான புஷ்பங்களைத் (**வில்லில் அம்பாக**) தொடுத்துக்கொண்டு, **எங்களுடைய ரக்ஷணத்துக்கு முடிசூடி இருக்கிறவனுடைய** திருநாமத்தையும் நெஞ்சிலே எழுதிக் கொண்டு எய்து, வேங்கடம் மேய விளக்கில் நான் புகும்படி நியமிக்க வேண்டும். **வித்தகன் வேங்கடவாணன்** — பரமபதத்தில் நித்யஸூரிகளுக்குத் தன்னை அநுபவிக்கக் கொடுத்துக் கொண்டிருக்கக் கடவன், அவ்விருப்பை விட்டு, *கானமும் வானரமும் வேடும் தன்னை அநுபவிக்கும்படி வந்து நிற்கும் ஆச்சர்யபூதன். * மிகுமதத்தேன் விண்டமலர் கொண்டு கண்டு வணங்கும் களிறு என்று இவன் திருவாராதனம் கொள்வது காட்டு யானையிடம். * வைப்பன் மணிவிளக்காம் மாமதியை மாலுக்கென்று எப்பொழுதும் கைநீட்டும் யானை என்கிறபடி திருமலையப்பனுக்குத் திருவிளக்கிடுவதும் அக்காட்டு யானையே. திருமலையில் வந்து நின்றபிறகே ஸ்வரூபகுணங்கள் நிறம்பெற்றுச் சுடர்விட்டு ப்ரகாசிப்பது. ஆக, கோவிந்தநாமம் நமக்குக் காட்டித்தரும் ஸௌலப்யமும் வாத்ஸல்யமும் குன்றிலிட்ட விளக்காய்த் திகழ்வது திருவேங்கடத்தானிடம்தான்.

அர்ச்சையிலும் **கோவிந்தராஜன்** என்ற பெயரைத் தாங்கி உறங்குவான் போல் யோகுசெய்த பெருமாளுப் ஸேவை ஸாதிப்பது திருமலை அடிவாரத்தில் (திருப்பதியில்). ஜகத்ரக்ஷணத்தை மனதில் சிந்தனை செய்து சயனித்துள்ள நிலை, உத்ஸவர் ஒரு திருக்கையை அபயஹஸ்தமாகக் கொண்டும் மற்றதைச் சிறிது மடித்துக் காட்டியும், ஒரு திருவடியைத் தொங்கவிட்டுக் கொண்டு மற்றதை மடித்து உட்கார்ந்துள்ள நிலை, பிடித்த சிறுவாய்க்கயிறும்...கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கும் ஸாரத்யவேஷத்தை நினைப்பூட்டும்படி உள்ளது தில்லைத் திருச்சித்திரகூடம் என்ற திவ்யதேசம்ஒரு அரசனால் அழிக்கப்பட்டபோது அங்கு பூஜை கொண்டிருந்த அர்ச்சாபேரங்கள் திருமலை அடிவாரத்தில் நிர்மாணிக்கப்பட்ட ஸன்னிதியில் எம்பெருமானாரால் ப்ரதிஷ்டிப்பிக்கப் பெற்றது ப்ரஸித்தமான வரலாறு. செல்வப்பிள்ளையிடம் உள்ள புத்ரவாத்ஸல்யம் போலவே இங்கு உடையவருக்கு ஈடுபாடு. **திருவேங்கடமுடையானும் கோவிந்தனும் ஒரே திவ்யதேசத்தெம் பெருமான்** என்றே அபிமானித்து, ராமாநுசனடியாா யாவரும் அப்படியே நடத்தவேண்டும் என்றுதிவ்யாஜ்ஞை பிறப்பித்து, இன்றும் நடந்து வருகிறது.

**வெங்கடவர்க்கென்னை விதிக்கிற்றியே''** என்ற ஆண்டாளின் பிரார்த்தனையை இங்கு கோயிலண்ணர் (உடையவர்) அர்ச்சையில் நிறைவேற்றியுள்ளார். தனிக்கோயில் பிராட்டியின் ஸ்தானம் பெருமாளுக்கு வலதுபுறமைந்த ஸன்னிதியிலும் பூமிப்பிராட்டியான ஆண்டாளுக்கு பெருமாளுக்கு இடதுபுறமைந்த ஸன்னிதியிலும் என்பது எல்லாக் கோவில்களிலும் ப்ரத்யக்ஷமாகக் காணலாம். திருப்பதியில் மட்டும் ஆண்டாள் ஸன்னிதி பெருமானின் வலது பார்ச்வத்தில் பெரிய பிராட்டியாரின் ஸ்தானத்தில். இந்த ஆண்டாள் (அர்ச்சாரூபி) எம்பெருமானாரால் ப்ரதிஷ்டை பண்ணப்பட்டவர். இவருக்கும் கோவிந்தனுக்கும் சேர்த்து நடக்கும் உத்ஸவங்கள் (எம்பெருமானார் ஏற்படுத்தியவை) நாச்சியார் திருமொழியில் ஆண்டாள் திருவேங்கடவனிடம் பாரித்ததெல்லாம் இங்கு நடைமுறையில் கண்டருளும்படி அமைந்துள்ளன. இதைப்பற்றி மேலும் விவரங்கள் முன் சொன்ன **திருமலை ஒழுகு** நூலில் கண்டுகொள்க. திருமங்கையாழ்வார் பெரிய திருமடலில்,

**தென்தில்லைச் சித்திரகூடத்து என்செல்வனை —**
**மின்னி மழை தவழும் வேங்கடத்து எம் வித்தகனை**

என்று கோவிந்தராஜனையும் திருவேங்கடத்தானையும் ஒக்க எடுத்து மங்களாசாஸனம் பண்ணியுள்ளார். எம்பெருமானார் காலத்தில் இந்த செல்வன் திருவேங்கடமலையின் அடிவாரத்தில் நிலையாக வந்து

ஆடிகொண்டு விட்டான்! இன்றைக்கும் திருமலையப்பன் நித்யாநுஸந்தானத்தில் ஊன் வாட, வாடமருதிடை என்ற திருச்சித்திரகூடத்துக் கோவிந்தன் விஷயமான திருமொழிகளைக் கேட்டு இன்புறும்படியும், கீழே கோயில் கொண்டுள்ள கோவிந்தன், திருமலையப்பன் விஷயமான ஒழிவில்காலம், உலகமுண்ட பெருவாயா திருவாய் மொழிகளையும் திருச்செவிசாய்க்கும்படி அநுஷ்டானமாக நடக்கிறது.

எதிராஜரான (ஸந்நியாசி) உடையவருக்கும் இரண்டு குமாரர்கள் வாய்த்தனர். இவர்களை தமதுயிர்க்கும் மேலாய் நேசித்து இருவரும் கால தத்வமுள்ளதனையும் பெரும் பெருமையுற்றவர்களாய் இருக்கும்படி திவ்யாஜ்ஞையிட்டு நடத்திவைத்தார் எதிராஜ மாமுனிவர். முதல் பிள்ளை ஸம்பத் குமாரராம் செல்வப்பிள்ளை. இரண்டாவது கோவிந்தராஜர். கோவிந்தன் செல்வம் ஓங்கவும் திருமலை ஸ்ரீநிவாஸனுக்கு ஒப்பாக ப்ரகாசிக்கும்படிக்கும், ''பெரும் பூதூர் மாமுனிக்குப் பின்னானாள்'' என்று தமதன்புத்தங்கையான ஆண்டாள் திருவேங்கடத்தானை அநுபவிக்கப் பாரித்ததெல்லாம் (அர்ச்சையில்) கோவிந்தனிடம் பெற்றுக்களிக்கும்படியும் பல ஏற்பாடுகள் செய்து வைத்துள்ளமையிலிருந்து கோவிந்தனிடம் இவருக்குள்ள மட்டற்ற ப்ரேமம் நன்கு விளங்கும்.

திருமாலையில் முதல் பாசுரம் எம்பெருமான் திருநாமத்தின் பெருமையை இயம்புவது.

*** நாவலிட்டு ழிதருகின்றோம் நமன்தமர் தலைகள்மீதே**
**மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வ! நின் நாமம்கற்ற**
**ஆவலிப்புடைமை கண்டாய்—**

என்று. ''ஆதிபகவந்! தேவரீருடைய திருநாமத்தைக் கற்ற செருக்கினால், எமனுடையவும் அவன் கிங்கரர்களுடையவும் தலைமீது அடியிட்டு ''நாவலோ நாவல்'' என்று வெற்றிகூவி உலாவுகின்றோம் கண்டாயே'' என்கிறார் ஆழ்வார். திருநாமபலத்தினால் எமனை வென்றதைச் சொல்லுகிறபடி. மேலே நாலாம் பாசுரத்தில் கத்திரபந்து கோவிந்த நாமத்தினால் பராங்கதி பெற்றதைப் பேசுகிறார்.

நாராயண நாமத்தின் பெருமை திருமங்கையாழ்வாரால் பரக்கப் பேசப்பட்டுள்ளது. எல்லாவிதங்களிலும் அர்த்தபூர்த்தியுள்ள திருநாமம் நாராயண நாமமே என்று நம் ஆசார்யர்கள் நமக்குப் பெரிய திருமந்திரத்தை உபதேசமாய் நல்குகின்றனர். அந்தத் திருநாமத்தை விட கோவிந்த நாமம் சீரியதா என்று கேட்க வேண்டாம். அது நமக்கு

விஷயமுமில்லை; அவச்யமுமில்லை. எம்பெருமானுக்கு பரத்வமும் ஸௌலப்யமும் இணைபிரியாத குணங்கள். முமுக்ஷுப்படியில் நாராயண நாமத்தை விளக்குகையில் "இத்தால் பலித்தது பரத்வ ஸௌலப்யங்கள்" என்றருளிச் செய்கிறார் லோகாசார்யன். கோவிந்த நாமத்தால் பலிப்பது ஸௌலப்ய பரத்வங்கள் என்னலாம். எத்தனை பெருப் பெருத்தவனாயினும் நமக்கு ஸுலபன் — சென்று கிட்டி நம் குற்றங்களைப் பொறுப்பித்துக் கொண்டு அடிமை செய்து வாழ்ச்சி பெறலாம் என்ற துணிவைத் தருவது கோவிந்தநாமம். தாய்ப் பாசுரமான பெரியாழ்வார் திருமொழியிலும் மகள் பாசுரமான நாச்சியார் திருமொழியிலும் இந்தத் திருநாமமே அதிகம் செவிப்படு வதையும் ஆங்காங்கு நமது ஆசார்யர்கள் எவ்வாறு இதை விளக்கி இன்புற்று நம்மை வாழ்விக்கிறார்கள் என்பதையும் ஓரளவு அநுபவித்தோம்.

எம்பெருமானே நமக்கு உபாயம். ஆண்டாள் இந்த உபாய—சரண்ய—வேஷத்தை **கோவிந்தா** என்ற விளியினால் காட்டித்தருவதை நாயனார் திருவாக்கைக் கொண்டு மூதலித்தோம். அவன் பேரைச் சொல்லி நாம் அவனைப் பற்றும்பற்றும் உபாயமாகாது என்பது வடி கட்டின ஸத்ஸம்ப்ரதாய 'உண்மையாயினும், நமக்கு அவனிடமுள்ள காதலையும் அவனின் ரக்ஷகத்வத்தில் அத்யவஸாயத்தையும் நினைக்கைக் கும் வாய் வெருவுகைக்கும், போதுபோக்கைக்கும் திருநாமங்கள் வேண்டுமே. நம்மாழவார் பக்தரா—ப்ரபன்னரா? என்ற கேள்விக்கு, "ஆழ்வார் ப்ரபன்னர் தாம்; பக்தி இவருக்கு தேஹயாத்ராசேஷம்" என்று எம்பார் விடைதந்தாராம். வைஷ்ணவலக்ஷணங்களை நமக்குக் காட்டித்தரும் லோகாசாரியன், "எம்பெருமானே தஞ்சம் என்று பற்று கையும், பேறுதப்பாதென்று துணிந்திருக்கையும், இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே குணாநுபவ கைங்கர்யங்களே பொழுது போக்காகையும் வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதங்கள்" என்றருளிச் செய்துள்ளார். ப்ரபந்நகுல முதல்வரான நம்மாழ்வார் கண்ணனையே தமக்கு உண்ணும் சோறு, பருகு நீர், தின்னும் வெற்றிலை எல்லாமுமாகக் கொண்டு தமது தேஹயாத்ரையை நடத்தினார். ஆண்டாள், "குளிரருவி வேங்கடத்தென் **கோவிந்தன்** குணம்பாடி ஆவி காத்திருப்பேனே" என்று தன் ஆத்மயாத்ராப்ரகாரத்தை வெளியிட்டருளினான்.

பெரிய திருவந்தாதியின் முடிவில், நம்மாழ்வார் ஒருகேள்வி கேட்கிறார்; "கார்கலந்த **மேனியான் சீர்கலந்த சொல் நினைந்து**

**போக்காரேல் சூழ்வினையின் ஆழ்துயரை என் நினைந்து போக்குவரிப் போது?"** என்று, நீலமேகச்யாமள மூர்த்தியானவனும் குணபூர்த்தியுள்ளவனுமான (கண்ணன்) திருநாமங்களை ஸதா அநுஸந்தானம் பண்ணி நம் பெரும்பாபச்சுமையினால் உண்டாகும் துன்பங்களைக் களைந்து போது போக்காவிடில், வேறு எது நினைந்து போது போக்க முடியும்?

"உனக்கு எளியவனாயுள்ள, என்னையே உபாயமாகப்பற்று. ஸர்வசக்தனான நான் உன் பேற்றுக்குத் தடையாயுள்ள பாபங்களை இல்லை செய்கிறேன், வருந்தற்க!" என்று கண்ணன் அருளிய வார்த்தையில் திடமான நம்பிக்கை வைத்து, கார்கலந்த மேனியான் சீர்கலந்த சொல்லான **கோவிந்தா! கோவிந்தா!** என்று அவன் குணம்பாடி ஆவிகாத்திருக்க நமது பார்த்தஸாரதியும் **கீதாசார்யன்** அருள் புரியும்படி வேண்டி நிற்போம்.

---

# அரையர் சேவை

பேராசிரியர் இரா. அரங்கராஜன் M A.,B.T.

**அரையர் சேவை** திருமால் திருக்கோயில்களில் இறைவன் திருமுன்னர் நாலாயிரதிவ்யப் பிரபந்தப் பாசுரங்களைக் கையில் தாளம் ஏந்தி இசையுடன் பாடி அபிநயத்துடன் ஆடிப் பொருள் விளக்கம் செய்யும் ஒருவகைக் கலை நிகழ்ச்சியாகும். இந்தத் தெய்விகக் கலையில் வல்லவர்களைத்தான் **'அரையர்கள்'** என்று வழங்குகிறார்கள். இவர்களையே கல்வெட்டுகள் **'விண்ணப்பஞ் செய்வார்கள்'** என்று குறிப்பிடுகின்றன. இத்தொடர் திருவாய்மொழி ஈடு வியாக்கியானத்திலும் நம்பிள்ளையால் ஆளப்பட்டிருக்கிறது. இக்கலையின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் கோயில் ஒழுகு, நாலாயிர திவ்யப் பிரபந்தங்களின் வியாக்கியானங்கள், குருபரம்பராப் பிரபாவம் முதலிய நூல்களின் துணைகொண்டு அறியமுடிகிறது. மேலும் இக்கலையில் வல்லுநராகவும் பேரறிஞர்களாகவும் வாழ்ந்த அரையர்கள் பலரின் பெயர்களையும் அவர்களாற்றிய அருஞ்செயல்களையும் அவற்றால் நன்கு அறிய முடிகிறது.

திருமங்கை ஆழ்வார் ஒரு கார்த்திகைத் திருநாளில் தாம் பாடிய திருநெடுந்தாண்டகத்தைத் திருவரங்கத்திலுள்ள இறைவனாகிய நம்பெருமாள் முன்னர் இனிமையாகப் பாடி மகிழ்வித்து ஒரு வரம் வேண்டிப் பெற்றார். மார்கழித் திங்கள் சுக்கில பட்சத்தில் ஏகாதசி முதல் பத்து நாட்கள் நம்பெருமாள் வடமொழி வேதங்களைக் கேட்டருள்வதுபோல் நம்மாழ்வார் பாடியருளிய திராவிட வேதமாகிய திருவாய்மொழியையும் வேதத்தோடு சமமாகக் கேட்டருள வேண்டும் என்பதுதான் திருமங்கை ஆழ்வார் கேட்ட வரம். அப்படியே திருவரங்கர் ஆணை பிறப்பிக்க, திருக்குருகூரிலிருந்து மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரின் திருவுருவை நன்றாக அலங்கரித்துத் திருவரங்கத்திற்கு ஒரு பல்லக்கில் எழுந்தருளச் செய்தார். நம்மாழ்வாரின் ஸ்தானத்தில் மதுரகவியாழ்வாரே நின்று திருவரங்கர் திருமுன்னர்த் திருவாய்மொழியைத் தொடங்கி தேவகானத்தில் அபிநயத்துடன் இசைத்துப் பத்தாம் நாள் இரவில் பூர்த்தி செய்தார். மதுரகவியாழ்வாரின் இசையில் உள்ளம் பூரித்த திருவரங்கர் அவருக்குத் 'திருவாய்மொழி விண்ணப்பஞ் செய்வார்' என்ற விருதும் பிற வரிசைகளும் வழங்கினார். மதுரகவியாழ்வாரின் இத் திருப்பணியை அவர் மரபினர் தொடர்ந்து, பல ஆண்டுகள் செய்து வந்தனர். இப்பத்து நாட்களும் திருவாய்

**மொழித் திருநாள்'** என்று அழைக்கப்பட்டது. இத்திருநாளும் இடைக்காலத்தில் நின்றுவிட்டது. நம்மாழ்வாருடைய திருவுருவைத் திருவரங்கத்திற்கு எழுந்தருளச் செய்யமுடியாத சூழ்நிலை ஏற்பட்டதே அதற்குக் காரணம். மேலும் நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களைப் பயில்வாரும் பயில்விப்பாரும் இன்றிப் போயிற்று

இந்நிலையில்தான் நாதமுனிகள் என்ற பெரியார் கி.பி (823-917) கி. பி. 823ல் அவதரித்து நம்மாழ்வாரின் பாடல்களைத் தேடித் திருக்குருகூர் சென்றார். அங்கே மதுரகவியாழ்வார் செய்த 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்ற நூலொன்றே கிடைத்தது அந்த நூலைப் பக்தியுடன் நம்மாழ்வார் சந்நிதியில் உருச்சொல்லி யோகத்தில் ஆழ்ந்தார். யோகநிஷ்டையில் நம்மாழ்வாரைத் தரிசித்து அவரிடமிருந்து திருவாய்மொழியையும் மற்றப் பிரபந்தங்களையும் உபதேசமாகப் பெற்றார். பிறகு அப்பிரபந்தங்களைத் தம் சீடர்களுக்கும் பிறருக்கும் ஓதுவித்துத் தமிழகத்தில் திவ்வியப்பிரபந்தப் பாசுரங்களைப் பிரசாரம் செய்தார். பாசுரங்களுக்குப் பண்ணும் தாளமும் வகுத்தார். திருமங்கை ஆழ்வாரைப் போலவே இவரும் ஒரு கார்த்திகைத் திருநாளில் திருநெடுந்தாண்டகத்தைப் பாடித் திருவரங்கரை மகிழ்வித்து வரம் வேண்டி மற்ற ஆழ்வார் பாடல்களுக்கும் வேதசாம்யத்தைப் பெற்றார். திருவாய்மொழித் திருநாளுக்கு முன்னதாகப் பத்து நாள்களில் மற்ற ஆழ்வார்களின் திருமொழிகளையும் திருவாய்மொழித் திருநாளைக்கு மறுநாள் இயற்பா முழுவதையும் சேவிக்கும்படி நியமித்தார். இயற்பா முழுவதும் இசையின்றி இயலாகவே சேவிக்கப்பட்டது. நாதமுனிகள் தொடங்கிய பத்துநாள் விழா **'திருமொழித் திருநாள்'** என்று வழங்கப்பட்டது. திருக்கண்ணமங்கை என்ற ஊரில் வாழ்ந்த தம் மருமக்களான கீழையகத்தாழ்வான், மேலையகத்தாழ்வான் என்ற இருவர்க்கும் நாதமுனிகள் பாசுரங்களைப் பண்ணுடன் கற்பித்து அவ்விருவரையும் திருவரங்கர் திருமுன்னே தாளத்துடனும் இசையுடனும் அபிநயத்துடனும் இயற்பா ஒழிந்த மற்ற மூவாயிரத்தையும் சேவிக்கும்படி நியமித்தார்.

திருவரங்கராகிய அழகியமணவாளனும் அவ்விருவரின் இசையிலே உகந்து ஒருவருக்கு **'மதியாத தெய்வங்கள் மணவாளப் பெருமாள் அரையர்'** என்றும் மற்றவருக்கு **'நாதவிநோத' அரையர்'** என்றும் சிறப்புத் திருநாமங்களை வழங்கினான். அன்று முதல விண்ணப்பஞ் செய்வார்களை **'அரையர்கள்'** என்றே வழங்கும் வழக்கமும் ஏற்பட்டது. அரையர் எனில் இங்கு இசைக்கலை உலகில் மன்னர்கள் என்று பொருள். மேலும் இத்தலைமைக்கு அடையாளமாக அரையர்களுக்குத் தலையில் அணியாக அரசர்க்குரிய மகுடம் போன்று குல்லாயும்

தொங்கல் பரிவட்டமும் திருவரங்கரால் வழங்கப்பட்டன. அவற்றை 'பிரபுத்வஸூசகங்கள்' என்று கோயில் ஒழுகு என்னும் பழைமையான நூல் குறிப்பிடுகிறது. இவற்றை அணிய அரையர்களைத் தவிரப் பிற பரிசனங்களுக்கு உரிமையில்லை.

நாதமுனிகளுக்குப் பிறகு அவருடைய திருப்பேரனார் ஆளவந்தார் திருவரங்கத்திலேயே நிலையாகத் தங்கி அரையர் சேவையில் புதிய நிகழ்ச்சிகளைப் புகுத்தி அக்கலையை வளர்த்தார். தம்முடைய திருக்குமாரரான ஆழ்வார் திருவரங்கப் பெருமாள் அரையரை அரையர் சேவையில் வல்லுநராக்கினார். திருவரங்கப் பெருமாள் அரையர் இசைநாடகங்களில் நல்ல பயிற்சி பெற்றார். திருமொழி திருவாய் மொழித் திருநாள்களில் நடந்த அரையர் சேவையில் இவர் வேடங்கள் புனைந்துகொண்டு திருமால் உலகளந்தது, கம்சவதம் போன்ற புராண வரலாறுகளை நாடகமாக நடித்துக் காட்டினார். அந்நடிப்பைப் பாராட்டும் முறையில், அழகிய மணவாளன் அவருக்குக் **'கோயிலுடைய பெருமாள் அரையர்'** என்ற சிறப்புத் திருநாமத்தை வழங்கினான். கூரத்தாழ்வான் இவரை 'இசைகாரர்' என்று பெருமையோடு அழைப்பராம். இந்த அரையரோடு ஒரு இசைப் புலவர் போட்டிக்கு வந்த போது அவரைத் திருமங்கையாழ்வாரின் 'வாலிமாவலத்து' என்ற திருமொழிப் பதிகத்தை இசைத்து வென்றார் என்று அறியப்படுகிறது. ஒருமுறை வடநாட்டில் எழுநூற்றுக் காத தூரத்துக்கும் அவ்வருகிலிருந்து திருவரங்கரை சேவிக்க ஒரு பக்தர் வந்தார். அவருடைய இசையில் உள்ளம் மயங்கிய திருவரங்கப் பெருமாள் அரையர் அந்த பக்தரைத் திருவரங்கர் திருமுன் அழைத்துச் சென்று தாமே திருமாலை என்னும் திவ்யப்ரபந்தத்தை இசையிலே ஏறிட்டுப் பாடித் திருவரங்கரை மகிழ்வித்தார். அதனால் திருவரங்கர் தாமே திருக்கைத் தலத்தில் எழுந்தருளி வடநாட்டுப் பக்தர் இருக்குமிடம் சென்று அவருக்குச் சிறப்புகள் செய்தார். இந்த நிகழ்ச்சியை நம்பிள்ளை தம் ஈட்டில் குறிப்பிட்டிருக்கிறார்.

இருபது நாள்கள் நடக்கும் திருமொழித் திருநாளும் திருவாய்மொழித் திருநாளும் முறையே பகற்பத்து, இராப்பத்து என்று வழங்கப்பட்டன. இந்த இருபது நாள்களில் 'அரையர் சேவை' சிறப்பாக நடந்தது. ஸ்ரீராமாநுஜர், கூரத்தாழ்வன், எம்பார் போன்ற ஆசாரியர்கள் இச் சேவையின்போது அருகே அமர்ந்து கண்டுகளித்தனர். பகற்பத்து, இராப்பத்து தவிரவும் மேலும் சில சந்தர்ப்பங்களில் அரையர் சேவை நீட்டிக்கப்பட்டது. திருவூறல் உற்சவத்தில் நம் பெருமாள் திருக்காவேரிக்கு எழுந்தருளித் திரும்பி எழுந்தருளும்போது இசையுடன் எழுந்தருளும்வதும், பங்குனி உத்திரத் திருநாளில் நாய்ச்சியாருடன் சேர்த்தியிலே அரையரின் இசை கேட்டருளுவதும், ஆழ்வார்

திருவரங்கப் பெருமாள் அரையர் காலத்தில் தொடங்கியது. இதற்கு உதவியாக இருந்தவர் ஸ்ரீராமாநுஜர். அரையர்களின் அபிநயத்திலும் ஸ்ரீராமாநுஜர் கவனமாக இருந்து உரிய திருத்தங்களைச் செய்தார். இயற்பா ஆயிரமும் இசையின்றி இயலாகவே சேர்க்கப்பட்டது. அதனை மட்டும் 'திருவரங்கத்து அமுதனார்' சேவிக்கும்படி மாற்றி யமைத்தார் இராமநுஜர். ஸ்ரீராமாநுஜரின் சீடரான எம்பார் என்ற ஆசாரியரும் முத்தமிழ் வல்லவராயிருந்ததால் உய்ந்தபிள்ளை என்ற அரையரின் நடிப்பில் பல திருத்தங்களைக் கற்பித்தார். இச் செய்திகளை யெல்லாம் நாலாயிர திவ்வியப் பிரபந்த வியாக்கியானங்களிலிருந்து தெரிந்து கொள்கிறோம். நஞ்சீயர் காலத்தில் அரையர் சேவையில் 'பள்ளு' என்ற இசைபாடும் நிகழ்ச்சியும் சேர்த்துக்கொள்ளப்பட்டது. திரு ஆறல் திருநாள் நடந்து நம்பெருமாள் திரும்பி எழுந்தருளுகிறபோது ஓர் அரையர் பள்ளும் பறையும் இசையிலே பாடி மகிழ்வித்தார். அவருக்குத் திருவரங்கர் 'வரம் **தரும் பெருமாள் அரையர்**' என்கிற விருதுப் பெயர் வழங்கிச் சிறப்பித்தார். ஆக நான்கு பட்டப் பெயர் கள் திருவரங்கத்து அரையர்களுக்கு ஏற்பட்டது.

நாதமுனிகள் காலத்தில் திருவரங்கத்தில் மட்டுமே 'அரையர் சேவை' நடந்து வந்தது. இராமாநுஜர் காலத்தில் அரையர் சேவை பிற திவ்விய தேசங்களிலும் தொடங்கப் பெற்றது. திருநாராயண புரம், காஞ்சிபுரம், திருநறையூர், திருக்குறுங்குடி, திருக்கண்ணபுரம், திருவனந்தபுரம், திருவழுந்தூர் ஆகிய தலங்களில் அரையர் சேவை நடைபெறறன. இங்கு வாழ்ந்த அரையர்கள் யாவரும் இராமாநுஜ ரின் சீடர்கள் என்று குருபரம்பராப்பிரபாவம் கூறுகிறது. அரையர் கள் இயற்றமிழிலும் புலமை பெற்று ஆழ்வார் பாசுரங்களுக்கு விரிவுரை யும் நிகழ்த்தினர்கள். ஆழ்வார் திருவரங்கப் பெருமாள் அரையரை ஆசிரயித்து இராமாநுஜர் சரமோபாயத்தைக் கேட்டறிந்தார். இவ் அரையர் செய்த சில பாடல்கள் நாலாயிர திவ்யப் பிரபந்தத் தனியன்களில் சேர்க்கப்பட்டன. நஞ்சியர் என்ற ஆசாரியர், பின்னை திருநறையூர் அரையரிடம் திருவாய்மொழிக்குப் பொருள் கேட்டறிந் தார். பாசுரங்களின் பொருளை நன்கு ஆராய்ந்திருந்ததால் அரையர் கள் ஆழ்ந்த மெய்ப்பாட்டுடன் நடிக்க முடிந்தது. அரையர்களின் இசை, நோய்க்கு மருந்தாகவும் கொள்ளப்பட்டது. நஞ்சியர் தமது நோவில, வரந்தரும் பெருமாள் அரையரை அழைத்துவரச் செய்து திருமங்கையாழ்வாரின் திருமொழியான 'தூவிரிய மலருழக்கி' என்ற பதிகத்தைத் தாளத்துடன் இசைத்து அபிநயிக்கக் கேட்டு மகிழ்ந்தார் என்று பெரியவாச்சான் பிள்ளை குறிப்பிட்டிருக்கிறுர். அரையர்களில் 'திருக்கண்ணபுரத்தரையர்' என்பவர் எழுபத்து நான்கு சிம்மாசனதி பதிகளில் ஒருவராகத் திகழ்ந்தார். அரையர்களை வெறும் நடிகர்களா கக கருதாமல் திருவிலச்சினை பொறித்து மந்திரோபதேசம் செய்யும்

ஆசாரியர்களாக ஏற்று வைணவர்கள் வழிபட்டனர் என்று தெரிகிறது. இராமாநுஜருக்குப் பிறகு பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை வடக்குத் திருவீதிப் பிள்ளை, பிள்ளை லோகாசாரியர் போன்ற ஆசாரியர்கள் காலத்தில் அரையர் சேவை முக்கியத்துவம் அடைந்தது.

இக்காலத்தில்தான் அரையர் சேவையில் 'கொண்டாட்டம்', 'முத்துக்குறி' போன்றவை இடம் பெற்றன. சோழப் பேரரசர்களின் அரண்மனையில் 'ஏத்தாளிகள்' என்ற சிலர் பேரரசரின் பெருமைகளைச் சொல்லி வந்தனர். அரசவையில் இவர்கள் இடம் பெற்றனர். அது போலவே விண்ணுலகும் மண்ணுலகும் சோராமல் ஆள்கின்ற திருவரங்கச் செல்வனாரையும் அரையர்கள் ஏத்தினர். பொய்கையார் போற்றும் பெருமாள், பூதத்தார் பரவும் பெருமாள், பதின்மர் பாடும் பெருமாள்...' என்றிவ்வாறு ஏத்துவதே கொண்டாட்டமாகும். இதில் பல தொடர்கள் அவ்வக் காலத்தில் புதியதாகவும் சேர்த்துக் கொள்ளப்பட்டன. எடுத்துக்காட்டாக 'நம் போத மணவாள மாமுனிகள் ஈடு உரைக்கக் கேட்டு உள்ளம் பூரித்த பெருமாள்' என்று கூறும் கொண்டாட்டத் தொடர் மணவாள மாமுனிகள் காலத்தில் தழுவப் பட்டது.

மணவாள மாமுனிகள் காலத்தில் அரையர் சேவையில் மற்றுமொரு புதுமை சேர்க்கப்பட்டது. திவ்வியப் பிரபந்தங்களில் சில பாசுரங்களின் வியாக்கியானங்களையும் அரையர் சேவையில் விண்ணப்பிக்கத் தொடங்கினார்கள். இந்த வியாக்கியானங்கள் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானங்களைப் பெரும்பாலும் தழுவி அமைந்தவையாகும். இவற்றைத் 'தம்பிரான்படி' என்று குறிப்பிடுகிறார்கள். அரையர்களைத் 'தம்பிரான்மார்கள்' என்று குறிப்பிடும் வழக்கமும் இருந்தது. வியாக்கியானங்களை உள்ளம் உருக மெய்சிலிர்க்கப் பக்திப் பரவசத்தோடு சேவிக்கும் முறையுடன் அரையர் சேவையின் வளர்ச்சி முழுமை அடைந்தது. இம்முழுமை நிலையில் இன்றும் திருவரங்கத்தில் அரையர்கள் பகற்பத்து இராப்பத்து விழாக்களில் அரையர் சேவையாகிய முத்தமிழ்க்கலை நிகழ்ச்சியை நிகழ்த்தி தொண்டுபுரிந்து வருகின்றனர். அவர்கள் தலையில் அழகிய பட்டுக்குல்லா அணிகின்றனர். அதில் தென்கலைத் திருமண் காப்பு சங்கு சக்கரங்களோடு பொறிக்கப் பட்டிருக்கிறது. அரையில் தொங்கற் பரிவட்டமும் கழுத்தில் மலர் மாலையும் குல்லாயில் திருப்பரிவட்டமும் அணிந்து கைகளில் தாளம் ஏந்தி அழகிய ஒப்பனையுடன் காட்சி தருகிறார்கள். இவர்களுக்கு அருளிப்பாடும் தீர்த்த மரியாதையும் வழங்கப்படுகிறது. அரையர்கள் ஆழ்வார்களாகவே மதிக்கப்படுவதால் அவர்கள் திவ்யப் பிரபந்தத்

தனியன்களை வாய்விட்டு அனுசந்திப்பதில்லை. ஏனெனில் ஆழ்வார்கள் காலத்தில் தனியன்கள் தோன்றவில்லை என்பதே காரணம்.

அரையர் சேவை இன்று திருவரங்கம், ஸ்ரீவில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி ஆகிய மூன்று திவ்யதேசங்களில் மட்டுமே நடைபெறுகிறது. அரையர் சேவை ஐந்து பகுதிகளாக அமைகிறது. கொண்டாட்டம், இசை, அபிநயம், வியாக்கியானம், கொண்டாட்டம் என்று நிகழ்த்தப்படும் அரையர் சேவையில் இடையிடையே கதை தழுவிய நாடகமும் நடிக்கப்படுகிறது. சில சமயங்களில் நாடகம் மட்டும் பிற்பகலில் நடிக்கப்படுகிறது. பழைய காலத்தில் அரையர்களுக்கு முற்றாட்டாக விளைநிலங்கள் அளிக்கப்பட்டிருந்தன. இன்று போதிய வருவாயின்றி இக்கலையைக் கற்று அரையராகப் பண்புரிய வருவோர் மிகக் குறைந்துவிட்டனர். பரபபரையாக வரும் இக்கலையைக் கற்றுத் தேர்ச்சிபெற ஏறத்தாழப் பத்து ஆண்டுகள் ஆகும். இசையிலும் பரதக் கலையிலும் அரிய தேர்ச்சி பெறவேண்டும். இத்தகைய தகுதிகளைக் கொண்ட அரையர்களின் சேவையை அரசும் அடியார்களும் போற்றித் தழைக்கச் செய்வது இன்று தலையாய சேவையாகக் கருதத்தகும்.



# அவன் உகக்கும் ரஸம்

**சாண்டில்யன்**

ஸ்ரீரங்கநாதன் சந்நிதிக்குச் செல்லும்"படிகளொன்றில் உட்கார்ந்த வண்ணம் வயதான அரையர் ஒருவர் திருவாய்மொழிப் பாசுரங்களை மெல்லிய குரலில் இசைத்துக் கொண்டிருந்தார். அவர் கண்களிரண்டும் பார்வை இழந்து கிடந்தன. எத்தனையோ நல்லவர், இருப்பினும் சதா வெற்றிலை பாக்குப் போடும் ஒரு பழக்கம் மட்டும் அவருக்கு இருந்ததால் மடியில் ஒரு வெற்றிலைச் செல்லமும் கிடந்தது. அந்த வெற்றிலைப் பெட்டியில் வெற்றிலைப் பாக்குடன் ஒரு ஸாளக்கிராமத்தையும் வைத்திருந்தார். அரையர் பாக்கைத் தேடி பெட்டியைத் தடவினார் ஒரு முறை. ஸாளக்கிராமம் கிடைத்தது. அதைப் பாக்கென்று நினைத்து வாயில் போட்டுக் கடித்துப் பார்த்தார். ஸாளக்கிராமம் என்று தெரிந்ததும் அதை வாயிலிருந்து எடுத்து மேல் வேஷ்டியில் துடைத்து மீண்டும் பெட்டியில் போட்டுவிட்டார். பிறகு பாக்கொன்றை எடுத்து வாயில் போட்டு வெற்றிலையையும் சுண்ணம் தடவி கிழித்து மென்று சுவைக்கலானார்.

இது நடப்பது முதல் தடவையல்ல தினம் பலமுறை நடந்த விபரீதந்தான். இதை ஒரு மிக வைதீக வைஷ்ணவர் நீண்ட நாளாகப் பார்த்துக் கொண்டிருந்தார். அரையர் ஸாளக் கிராமத்துக்கு இழைக்கும் அநாசாரத்தையும் அபசாரத்தையும் அவரால் பொறுக்க முடியவில்லை. ஆகவே ஒரு நாள் "ஸ்வாமி! தினம் பெருமாளை வாயில் போட்டு எச்சில் பண்ணுகிறீரே. இது நியாயமா ?" என்று கேட்டார்.

"கண் தெரியவில்லை" என்றார் அரையர்.

"அப்படியானால் பெருமாளை என்னிடம் கொடுமே, நான் ஆசாரமாக வைத்து ஆராதனம் செய்கிறேன்" என்றார் வைதிகர்.

"தாராளமாக எடுத்துப் போம்" என்று ஸாளக்கிராமத்தை எடுத்து அந்த வைதிகரிடம் கொடுத்து விட்டார் அரையர்,

அன்று அந்த வைஷ்ணவப் பிராம்மணர் வீட்டில் ஏக தடபுடல். ஸாளக்கிராமத்தை அவர் தனது கோவிலாழ்வாரில் எழுந்தருளப் பண்ணினார். திருமஞ்சனம் கண்டருளப் பண்ணி, புளியோதரை, தத்தியோதனம் முதலிய பிரசாதங்களையெல்லாம் அமுது செய்வித் தார். சேவை, சாற்றுமுறைக்கு வேறு இரண்டு மூன்று ஸ்வாமிகளையும் எழுந்தருளப் பண்ணி அதையும் விமர்சையாகச் செய்து முடித்தார். அன்று நிம்மதியாகப் படுத்தார் அந்த வைதிகர்.

அவர் நல்ல துயில் கொண்டதும் பெருமாள் அவர் சொப்பனத்தில் வந்து "நீ எதற்காக என்னை அரையர் வெற்றிலைப் பெட்டியிலிருந்து எடுத்து வந்தாய்?" என்று கேட்டார் கோபத்துடன்.

"ஸ்வாமி! அங்கு உமக்கு அபசாரம் நடக்கிறது. அதனால் எடுத்து வந்தேன்" என்றார் அந்த ஸ்வாமி.

"என்ன அபசாரம்?" என்று பெருமாள் கறுவினார்.

"தேவரீரை தினம் பத்துத் தடவையாவது எச்சில் செய்கிறார் அரையர்" என்று சொன்னார் அந்த ஸ்வாமி.

"அட பைத்தியக்காரா! அது திருவாய்மொழி சொல்லும் வாயடா தினம் அந்த ரஸத்தை சிறிது நேரமாவது நான் அனுபவிக்கிறேன். அதிலிருந்து என்னைப் பிரித்து இந்த மரப்பெட்டியில் ஏன் அடைத்து வைத்திருக்கிறாய்? உடனே கொண்டுபோய் அரையர் பெட்டியில் என்னை சேர்த்து விடு" என்றார் பெருமாள்.

சொப்பனத்திலிருந்து விழித்து எழுந்து உட்கார்ந்தார் வைதீகர். பகவான் திருவுள்ளத்தை நினைத்து நினைத்து உருகினார். "திருவாய்மொழி அனுசந்திக்கும் நாவே நாவு, அதில் ஊறும் நீரே அமுதம். அதுவே அவன் உகக்கும் ரஸம்" என்று சொல்லிக் கொண்டார்.

மறுநாளே பெருமாள் பழையபடி வெற்றிலைப் பெட்டிக்குள் பாக்குடன் கலந்து கிடந்தார். அரையர் கையும் ஒருமுறை பாக்கைத் தேடி பாக்குக்குப் பதில் ஸாளக்ரொமத்தை வாயில் போட்டு மீண்டும் எடுத்து துணியில் துடைத்து பெட்டியில் சேர்த்தது. வாய் திருவாய்மொழியை மெல்ல இசைத்தது.

---

---

**இச்சிறுகதை கீதாசார்யன் இரண்டாவது இதழில் வெளியிடப் பட்டது. அவ்விதழ் கிடைக்கப்பெறாத பெரும்பாலான வாசகர்களின் வேண்டுகோளுக்கிணங்க மீண்டும் வெளியிடப்படுகிறது**

---

# அழகு படுத்தும் பாடு

பேராசிரியர், சொல்லழகர் ஸ்ரீ உ. வே.

K. A. மணவாளன் M. A., B. O. L.

கடல் சூழ்ந்த இந்நிலவுலகில் அழகுக்கு அடிமையாகாதவர் எவரும் இல்லை. யாவரையும் அடிமைப்படுத்தவல்ல அழகினைப் பெற்று வாழ்ந்த உயரிய தலைவன் இராமபிரானேயாவான். அவன் வடிவழகில் ஈடுபட்டு மெய்மறந்து நின்ற முனிவர்களையும் அரசர்களையும் காணும்போது பெண்களைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ? இவ்வுண்மையைக் கண்டறிந்த கல்வியிற் பெரியராய கம்பர், தமது வாக்குப் பயன்பெற வேண்டுமென்ற கருத்தினாலேயே ஸ்ரீராமபிரானைக் கதாநாயகனாகக் கொண்ட இராம காதையைப் பாடினார். இனி அவ்விராமாயணத்தில் இராமனது வடிவழகில் ஈடுபட்ட சிலரைக் காண்போம்.

தசரதன் ஸ்ரீராமனைவிட்டுச் சிறிதும் பிரிந்திருக்கமாட்டான். அத்தகைய தசரதன் ஒரு சமயம் அவையில் அமர்ந்திருக்கும்போது இராமனை உடனே காணவேண்டுமென்று ஆசைப்பட்டான். சுமந்திரனிடம் சொல்லி மைந்தனை வரவழைத்தான். இராமன் தன் எதிரே வரும்போது அவனது முன்னழகிலும் முகப்பொலிவிலும் ஈடுபட்டு மகிழ்ந்தான். அவன் முன்னழகில் ஈடுபட்ட தசரதன் அவ்விராமனது பின்னழகையும் நடையழகையும் காண்பதற்காகத் தன்னருகே வந்த ராமனை 'போ' என்று சொல்லிவிட்டான். இராமன் திரும்பிச் செல்லும்போது திரும்பவும் இராமா! வா என்று அழைத்தான். இவ்விதம் வா என்றும் போ என்றும் பலமுறை சொல்லி அவன் நடையழகையும் திருமேனியின் வடிவழகையும் ஒளியையும் பருகினான் தசரதன் என்பதை "வா போகு வா இன்னம் வந்தொருகால் கண்டு போ" என்று குலசேகராழ்வார் அருளிய பாசுரத்தால் அறியலாம். தந்தையையும் வடிவழகு படுத்தும் பாடு இது!

இனி வேட்டுவனாகிய குகன் ஈடுபட்ட சிறப்பினைக் காண்போம். பிராட்டியோடு பெருமான் இளையபெருமாள் பின்தொடரக் காட்டிற்கு எழுந்தருள்கிறார். செல்லும் வழியில கங்கையின் வடகரையில் குகன் என்னும் வேடர் தலைவன் மீனையும் தேனையும் காணிக்கையாக ஏந்தித் தன் சுற்றத்தாரோடு வந்து தொழுகின்றான். அக்குகனின் அன்பின் பெருக்கையும், பக்தியையும் கண்டு அதிசயித்த இராமபிரான், 'சீதை

யை நோக்கித் தம்பி திருமுகம் நோக்கித் திராக் காதலனாகும்' என்று முகம் மலர்ந்து அவனை முதலில் நண்பனாக ஏற்றுக் கொண்டான். அயோத்திமா நகரத்தை விட்டுக் கானகம் வந்த காரணத்தை இலக்குவன் சொல்லக்கேட்ட குகன், மனமுடைந்து வருந்தினான். பிறகு அன்றிரவு இராமபிரான் கல்லிடைப்படுத்த புல்லில் தேவியுடன் துயில, அந்நிலை நோக்கிக் கண்களினின்றும் அருவிபோல் கண்ணீர்பாயக் கைவில்லேந்தி இரவு முழுவதும் இலக்குவனாகிய தம்பி காத்துநின்றான். பஞ்சணையில் பள்ளிகொள்ளவேண்டிய பரமன் வெறுந் தரையில் பிராட்டியோடு படுத்திருப்பதையும், மற்றோரரசகுமாரனாகிய இலக்குவன் எம்பிரானுக்கு நேர்ந்த நிலை எண்ணி மனம் வெம்பிக் கொதித்துக் கண் கொட்டாமல் கையும் வில்லுமாய் பாதுகாத்திருபபதையும் கண்ட குகனும் கண்களினின்றும் நீர் பெருகத் தொடுத்தவில்லுடனும் விழித்த கண்ணுடனும் இரவு முழுவதும் காத்துநின்றான். தலைவனாகிய இராமன் தனித்து உறங்கத் தம்பி வில்லேந்தி நடப்பதையும், குகன் தொடுத்த வில்லுடன், அவனடியிட்ட அடியில் தான் அடியிட்டு நிற்பதையும், அதைக் கண்டு வேடர் கூட்டம் சுற்றி வருவதையும் ஏன் என்று காண்போம்.

ஒரு கால் இவ்விளையவனாகிய இலக்குவனால் இராமபிரானுக்கு என்ன தீங்கு நேருமோ என்று இளைய பெருமாளையும் சந்தேகிக்கிறான் குகன். "நடுக்கோத்துப் பிடித்த வில்லும் தாமுமாய் நடையாடும் மதின் போலே" வளைய வருகிற இளைய பெருமாளையும் சந்தேகிக்கக் காரணம் என்ன? ஊரில் ஒரு தம்பியாகிய பரதன் தாயைக் கொண்டு கட்டின காப்போடே பெருமாளைக் காட்டிற்கு ஓட்டினான். இந்த இலக்குவனும் அவனைப் போன்ற வேறொரு தம்பியல்லவா? தனிமையில் என்ன தீங்கு செய்யக் கருதியோ இப்படி ஆயத்தனாய் நிற்கிறான் என்று சந்தேகித்து வில்லும் கோலுமாய்க் கொண்டு, இலக்குவன் இட்ட அடிகளிலே அவனுக்குத் தெரியாமல் அடியிட்டு நடந்து காத்தானும் குகன். குகனைச் சூழ்ந்துள்ள வேடர்களோ இந்த இருவரையுமே சந்தேகிக்கின்றனர்: ஏனெனில் இலக்குவனோ தாயாதியாவான். குகனோ காட்டில் வாழும் வேடனாவான் இவர்கள் இருவரும் இந்த இராமபிரானுக்கு என்ன தீங்கு செய்ய நினைத்தோ இப்படித் திரிகின்றனர் என்ற ஐயமே! இங்ஙனம் ஐயுற்றுத் தனித்தனியே, கையும் வில்லுமாய்க் கொண்டு பெருமானைக் காத்து நின்றனர். இங்கு "ஒரு நாள் முகத்திலே விழித்தவர்களையும் வடிவழகு படுத்தும் பாடாயிற்று இது" என்கிற ஸ்ரீவசன பூஷணத்தையும் அதற்கு மிக அழகாக வியாக்கியானம் வகுத்த விசதவாக் சிகாமணிகளான ஸ்ரீமணவாள மாமுனிகளின் கருத்தையும் ஒருங்கே நோக்க வேண்டும்.

இதேபோன்று இராமபிரானது வடிவழகில் ஈடுபட்ட சூர்ப்பணகை யின் வரலாற்றையும், இராம பாணத்தால் அடிபட்டு வீழ்ந்த நிலையில் வாலி பேசிய பேச்சையும் காண்போம். இராம லட்சுமணர், சீதை யோடு பஞ்சவடியில் வசித்துவருகிறபோது, இராவணனுடைய தங்கை யாகிய சூர்ப்பணகை இராமனது திருமேனி அழகைக் கண்டு மிகவும் வியந்து மன்மதனோ என்று ஐயுறுகின்றாள். பின்பு மன்மதனுக்கு வடிவ மில்லையே! அவன் அநங்கனன்றோ! என்று துணிந்து இந்திரனோ, சிவ பெருமானோ, திருமாலோ என்றெல்லாம் ஐயுறுகின்றாள். பின்பு அவள் அவ்விராமபிரானின் அவயவங்களின் சௌந்தரியங்களைப் பலவாறு வருணித்து முடிவில் அதர மாதுர்யத்தைப் பற்றிப் பேசுகின்றாள். உலகில் அதரத்திற்கு (உதடுக்கு) செம்மை பற்றிப் பவழம் சிறந்த உவமையாக எடுத்துக் காட்டப்படுகின்றது. அதனினும் மேலான இராமபிரானது அதரத்துக்கு எதைத்தான் உவமையாகக் கூறுவேன் என்று புகழ்ந்துள்ளாள். இவ்விதம் இராமன் வடிவழகில் ஈடுபட்டு மனம் மாறிக் காம பரவசையாய் அவள் பட்ட பாட்டினைக் கூறவும் வேண்டுமோ? நிலை தடுமாறிய சூர்ப்பணகை இலக்குவனால் மான பங்கஞ் செய்யப்பட்ட நிலையில், தான் விரும்பியபடி இராமனை அடைய முடியவில்லையே என்ற ஏக்கத்துடன் இலங்கையை அடைந்தாள். அவள் இன்பத்திற்கு இடையூறாக நின்ற சீதையின் பேரழகைப் பற்றிக் கூறி இராவணனுக்குக் காமத்தியை மூட்டினாள். இராவணனும் நிலை தடுமாறினான்.

கரனையும் மறந்தான் தங்கை மூக்கினைக் கடிந்து நின்றான்
உரனையும் மறந்தான் உற்ற பழியையும் மறந்தான் வெற்றி
அரனையும் கொண்ட காமன் அம்பினால் முன்னைப் பெற்ற
வரனையும் மறந்தான் கேட்ட மங்கையை மறந்திலா தான்.

அன்றிரவு அவன் உறங்கவே இல்லை. அப்பேரிருளில் அவன் கண் முன் ஒரு பெண் உருவம் ஒளிவீசி வந்தது. ஆம்! அவ்வுருவத்தை அவன் சீதை என்றே கருதினான். உடனே சூர்ப்பணகையை வரவழைத்தான். உறக்கமின்றித் தவிக்கும் சூர்ப்பணகையும் அங்கு வந்து சேர்ந்தாள். அவளை நோக்கி இதோ என்முன் நிற்கும் இப்பேரழகிதானே நீ சொன்ன சீதை என்று கேட்டான். ஆனால் அச்சொற்கள் அவள் காதில் விழவே இல்லை. இரவும் பகலும் தான் நினைந்து கொண்டிருக் கும் ஒரு ஆண் உருவத்தையே அவள் கண்டாள். உடனே அவள் கூறுகின்றாள்:—

"செந்தாமரைக் கண்ணொடும் செங்கனி வாயினொடும்
சந்தார்தடந் தோளொடும் தாழ்தடக் கைகளோடும்

அந்தார்அக லத்தொடும் அஞ்சனக் குன்றமென்ன
வந்தான்இவன் ஆகும் அவ்வல் வில்இராமன் என்றாள்''

செந்தாமரைக் கண்ணும், செங்கனி வாயும், திரண்ட தோளும், நீண்ட தடக்கைகளுமாய் நீல மலை போன்ற மேனியழகனை இராமன் இதோ என் முன்னே நிற்கின்றான் என்று பேசுகிறாள். அவன் பெண் உருவம் பற்றிக் கேட்க இவள் ஆண் உருவத்தை வருணித்தாள். இத னால் இராமன் வடிவழகு படுத்திய பாட்டை அறியலாம்.

இனி வாலி இராமனைப் புகழுமாறு எவ்விதம் என்பதனை விளக்கு வோம். இராம பாணத்தால் தாக்குண்ட வாலி கீழே விழுகிறான். மார்பினின்றும் இரத்த வெள்ளம் பெருகத் துளைத்துள்ள அந்த அம்பைப் பறித்தெடுத்தான். அந்த அம்பில் பொறிக்கப்பட்டுள்ள 'ராம' என்னும் செம்மை சேர்நாமந் தன்னைக் கண்களில் தெரியக் கண்டான். கண்டபின் பழிக்கலுற்றான். இல்லறம் துறந்த நம்பியும், வில்லறம் துறந்த வீரனுமாகிய நீ தோன்றலால் தொல்லறம் துறந்தி லாத சூரியன் மரபும் தன் நல்லறம் துறந்தது என்று எண்ணி நகை யாடுகின்றான். இப்படியெல்லாம் பலவாறு வெகுளியினால் இராமனைப் பழித்த அதே வாலி, தன்னை மறைந்து பாணத்தால் அடித்த இராமனை ஏசுகின்ற போதும், இராமன்பால் மதிப்பும் அன்பும் கொண்டுள்ளவனா தலால் அவன் செய்கைக்கு நியாயம் காட்டுவதைப் போல "ஆவியைச் சனகன் பெற்ற அன்னத்தை அமிழ்தின் வந்த தேவியைப் பிரிந்த பின்னை, திகைப்பினால் அறிவு கலங்கி இக்காரியத்தைச் செய்தாய் போலும்" என்று கூறுகின்றான் ஸ்ரீராமபிரானின் வடிவழகைக் கண் படைத்த பயனாகக் கண்டு களித்தவனாதலின் அடிபட்ட நிலையிலும் இராமனை "ஓவியத்தெழுத வொண்ணா உருவத்தாய்" என்று விளிக் கிறான். சித்திரத்திலும் இராமபிரானது திருமேனி அழகை உள்ள படி எழுத முடியாது என்பதன்றோ இதனால் அறியக் கிடக்கின்றது.

எனவே அரசர்களாலும், காட்டிலுள்ள வேடர்களாலும், வான ரங்களாலும், அரக்கியாலும் இராமன் பெருமையோடு போற்றப் பட்டானென்றால் அதற்கு அவன் வடிவழகன்றோ காரணம்! இவர்களை யெல்லாம் ஆட்டிப் படைத்தது இராமனது வடிவழகாதலால் அழகு படுத்தும் பாட்டை ஒருவாறு தெளியலாம்.

# ஒழுகும், உலாவும்

## ஸ்ரீவேணுகோபாலன்

லைப்ரரியில் எதேச்சையாகக் கிடைத்தது அந்தப் புத்தகம். எதேச்சையாகத் திருப்பினேன். Sack of Srirangam என்ற அத்தியாயம் என்னைக் கவர்ந்தது.

ஆவலுடன் அதைப் படிக்க, அரங்கன் பட்ட கஷ்டம் சுருக்கமாக அதில் விவரிக்கப்பட்டிருந்தது.

ஒரு மனிதரைப் போலல்லவா அவர் கஷ்டப்பட்டிருக்கிறார் என்று நினைத்தேன்.

சொல்லப் போனால் அவரும் படவில்லை. ஒரு ஜன சமுதாயத்தின் நம்பிக்கைத்தான் கஷ்டப்பட்டிருக்கிறது.

ஒரு சமுதாயம் தனது கொள்கை கோட்பாடுகளை உறுதியுடன் பிடித்துக் கொள்ள,

அதற்கு ஊறு விளைவிக்க வந்தது ஒரு துருக்கியப் பேரலை.

இந்தப் பேரலையை எப்படி மேலே படரவிட்டு, எப்படி ஒரு நாணலைப் போல் வளைந்து, தன்னையே காத்துக் கொண்டது ஒரு சமுதாய நம்பிக்கை என்பதையே அந்த அத்தியாயத்தில் நான் படித்தேன். படித்தேன் என்பதைவிட உணர்ந்தேன் என்பது சரி. ஏனெனில் அந்த அத்தியாத்தில் வெறும் நிகழ்ச்சிக் கோவைகள் மட்டும் விவரிக்கப் பட்டிருந்தன.

ஆனால் என் மனத்தில் அது ஒரு நம்பிக்கையின் சரித்திரமாகவே தோன்றியது.

இதையே கதை எழுதினால் என்ன என்று நினைத்தேன். அதுதான் 'திருவரங்கன் உலா'வாக உருவாகியது.

இந்தக் கதை உண்மையாக நிகழ்ந்ததால் எனக்கு இதில் ஒரு ஈடுபாடே இருந்தது.

கதாநாயகன், கதாநாயகியாக சில கற்பனைகளை நிலவவிட்டாலும், அரங்கன்தான் கதைக்கு ஹீரோ என்பதை பூரணமாக நம்பினேன்.

பயணக் கட்டுரை

# தென்பாண்டி நாட்டினிலே!

T. A. பாஷ்யம்

அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது அதனினும் அரிது கூன், குருடு, செவிடு, நொண்டியின்றிப் பிறத்தல் அரிது. அதவும் வைணவராய் பிறப்பதற்குப் பெருந்தவம் செய்திருக்க வேண்டும். வைணவக் குடியில் பிறந்தால் மட்டும் போதுமா? திவ்யசூரிகளான ஆழ்வார்களிடத்தில் பக்தியும், அவர்கள் பாடியருளியுள்ள திவ்யப் பிரபந்தத்தைக் கற்பதில் ஆசையும், அப்பாசுரங்களில் பாடப்பட்டுள்ள திவ்யதேசங்களில் ப்ராவண்யமும் அமைய வேண்டாமா? இவ்வளவும் இருந்து விட்டால் அவர் வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே என்றபடி இங்கிருந்து கொண்டே மோட்சப் பேற்றையும் அடையலாமல்லவா!

திவ்யதேசத்து எம்பெருமான்களை ஸேவிப்பதை ஆழ்வார்கள் பெரும் பாக்கியமாகக் கருதினர்கள். இதைக் காட்டிலும் சிறந்தது வேறொன்றில்லை என்றும் அறுதியிட்டார்கள் திருமங்கை ஆழ்வார் ஒருபடி மேலே போய், மோக்ஷம் என்று ஒன்று கிடையவே கிடையாது திவ்யதேசங்களை அநுபவிப்பதே மோக்ஷம் என்கிறார். இவ்வளவு பெருமை வாய்ந்த திவ்யதேச யாத்திரை ஆசை எங்களையும் பிடித்துக் கொண்டது மேலும் சேர்ந்தாற் போல் மூன்று நாட்கள் அலுவலக விடுமுறை கிடைக்கவே ஏதாவது சில திவ்யதேசங்களை ஸேவித்துவிட்டு வரவேணும் என்று தீர்மானமிட்டோம். யார்? அருளிச்செயல் அன்பர் அவையைச் சேர்ந்த நாங்கள் ஐவர்.

ஏற்கனவே சோழநாட்டு திவ்யதேசங்கள் அனைத்தையும் ஸேவித்திருக்கிறோம். பாண்டி நாட்டிலும் திருநெல்வேலியிலுள்ள திவ்ய தேசங்களைச் சேவித்திருக்கிறோம். ஆனால் புதுக்கோட்டை, ராமநாத புரம் மாவட்டங்களிலுள்ள திருமெய்யம், திருக்கோட்டியூர், திருப் புல்லாணி முதலிய திவ்யதேசங்களை சேவிக்கும் பாக்கியம் இதுவரை கிடைக்கவில்லை. காரணம் இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு மூலையில் உள்ளதுதான். இம்முறை எப்படியாவது இத்திவ்யதேசங்களை ஸேவித்து விடுவது என்று உறுதி கொண்டு பயணத்திட்டங்களை வகுத்தோம். மூன்று நாட்களில் சுமார் 1200 கி மீ. தூரம் செல்ல வேண்டும்! அதுவும் ரயிலிலும், காரிலும், பஸ்ஸிலும் சென்றே பயணத்தை முடிக்க வேண்டும் என்றால் ஆகிற காரியமா? ஆனால் நமது

அந்த ஈடுபாட்டில் எழுதும்போது, அவர் வாடினால் நா வாடினேன். அவர் வதங்கினால் வதங்கினேன். அவருக்கு நேர்ந் தெல்லாம் ஓரளவு எனக்குள்ளும் நிகழ்வதாகப் பாவித்தேன்.

உண்மையாக அனுபவித்தேனோ, அனுபவித்ததாகப் பிரமை கண்டேனோ, எனக்கு அந்த உணர்ச்சிகள் பரவசம் தருவதாக இருந்தன.

விதை விழுந்தது கிட்டத்தட்ட 15 ஆண்டுகளுக்கு முன். எழு ஆரம்பித்தது இத்தனை ஆண்டுகளுக்குப் பின்தான். இந்த இடைவெ ஆண்டுகளில் சிறுகச் சிறுக விஷயத்தின் சேகரிப்புகள் நடந்தன.

முக்கியமாக கோவில் ஒழுகு என்ற புத்தகம் வேண்டிவந்தது. எனக்குத் தெரிந்தவர்களிடம் கேட்க, அது கிடைக்கவில்லை. (இப்போது திருச்சியில் திரு. கிருஷ்ணசாமி அய்யங்கார் பிரசுரித்திருக் கிறார்.)

பல இடங்களில் தேடினேன், பல இடங்களில் சுற்றினேன். எனக்கு வேண்டியது இரவல் புத்தகமல்ல. எனக்கே சொந்தமாக ஒரு புத்தகம் வேண்டும் என்று விரும்பினேன். புத்தகம் கடைசியாக பதிக்கப்பட்ட ஆண்டோ 1904. என் கதைக்கோ அது மிகவும் அவசியம்.

தேடினேன் தேடி அலைந்தேன்.

கடைசியில் காஞ்சிபுரத்தில் ஒரு விழா. பந்தல் மணலில் ஒருவர் புத்தகங்கள் வைத்து விற்றுக் கொண்டிருந்தார். எப்போதும் ஆவலாகப் பார்ப்பது வழக்கம். அன்றும் பார்த்தேன். ஒரு பழைய புத்தகம் கிடைத்தது. பின்னை உலகாசிரியரின் ரகசியப் புத்தகம்.

"கோவில் ஒழுகு இருக்கிறதா?" என்று கேட்டேன்.

எதிர்மறை பதில் எதிர்பார்த்தேன்.

"இருக்கே!"

தூக்கிவாரிப் போட்டது.

"எங்கே?"

"இங்கே இல்லை. சென்னை வாங்கோ. ஒரே ஒரு காப்பி இருக் கிறது. தருகிறேன்."

உச்சி குளிர்ந்துவிட்டது.

அந்த வியாபாரியார் வருவதற்காகக் காத்திருந்தேன். பூக்கடை பக்கத்தில் ஒரு விலாசம் கொடுத்திருந்தார்.

ஆவலோடு போனேன். அவர் ஒரு அறை வாசி போலும் உள்ளே போய் புத்தகத்தை எடுத்து வந்தார். ஒன்னரை ரூபாய் வாங்கிக் கொண்டார். என் கையில் விலைமதிக்க முடியாத பொக்கிஷம் கிடைத்தது போல் உணர்ச்சிப் பெருக்கம்.

ஆனந்ததுடன் புத்தகத்தைப் பார்த்தேன். 1898ல் பதிப்பித்தது. பரம்பரை வழியாகவோ வேறு வழியாகவோ ஒரு காப்பி விற்கப் படாமல் வந்திருக்கிறது. அல்லது என் கைக்கு வருவதற்காகவே ஒரு காப்பி 1898லிருந்து விலைக்கு இலக்காகாமல் இருந்திருக்கிறது. என் அனுமானம் சரியோ தப்போ! அப்படித்தான் நினைத்தேன்.

அதையே தெய்வச் செயல் என்று நினைத்தேன்.

ஒழுகு கிடைத்துவிட சீக்கிரம் 'உலா' எழுத ஆரம்பித்தேன்.

[ இத்தெய்வீகத் தொடர்நாவல் விரைவில் கோசார்யனில் வெளியிடப்படும். ]

அவையின் காரியதரிசி ஸ்ரீ. உ. வே P. T. விஜயராகவன் ரகு அவர்கள் மிகவும் திறமையாக பயணத்திட்டங்களை வகுத்தார். அதன்படியே சென்றதில் மிகவும் சுலபமாக மூன்றே நாட்களில் வெவ்வேறு மூலையி லுள்ள 7 திவ்யதேசங்களையும் ஸேவித்தோம். நீங்களே பாருங்களேன்!

பயணத்தைப் பொறுத்தவரையில் இராக்காலப் பயணமே சௌகர்யமானது; நாம் தூங்கும் நேரம் பயணத்தில் கழிந்துவிடு கிறது. பகலில் புறப்பட்டால் ஒருநாள் முழுவதும் வீணாகி போய்ச் சேர்வதற்கு இரவாகி விடுகிறது. எனவே 19-7-79 அன்று சென்னையி லிருந்து ஐவரும் பரமக்குடி செல்லும் பஸ்ஸில் புறப்பட்டோம். மறு நாள் காலை சுமார் 5-30 மணிக்கு புதுக்கோட்டையில் இறங்கிக் கொண்டோம். உடனே அங்கிருந்து ஒரு டவுன் பஸ்ஸைப் பிடித்து திருமயம் என வழங்கப்படும் திருமெய்யத்தை அடைந்தோம். புதுக் கோட்டையிலிருந்து சுமார் 21 கி. மீ யில் உள்ள திருமெய்யத்தை அடைய காலை 7 மணி ஆகிவிட்டது.

திருமயம் ஊரின் நடுவில் ஒரு பெரிய மலை உள்ளது. மலையின் மீது ப்ரம்மாண்டமான கோட்டை ஒன்று உள்ளது. மலை அடிவாரத் தில் மலையை ஒட்டினாற் போல் முதலில் ஒரு சிவன் கோவில் உள்ளது. அதையடுத்து, சற்றுத் தள்ளி அதேபோல் மலையை ஒட்டி, திருமெய்யம் திவ்யதேசத்து ஸ்தலாதிபதியான ஸத்ய மூர்த்திப் பெருமாள் கோயில் உள்ளது. நேற்றிரவு புறப்பட்ட நாங்கள் இன்னும் குளிக்கவில்லை, எங்கு குளிப்பது என்றும் புரியவில்லை, குழப்பத்துடனே கோவிலில் நுழைந்தோம். எதிரில் பெருமாளே வருவதுபோல் ஒருவர் வருகிறார். "அட! வெளியூரிலிருந்து வருகிறீர்களா? இதோ கோயிலுக்குள்ளே கோயிலின் வலது புறத்தில் குளம் உள்ளது. நீராடிவிட்டு வாருங்கள், பெருமாளை சேவிக்கலாம்" என்கிறார். அப்படியே செய்கிறோம். அந்தக் குளம்தான் எவ்வளவு ரம்யமாக இருக்கிறது. நம் போன்ற பட்டண வாசிகளுக்கு இம்மாதிரியான குளத்தில் நீராடும் சுகம் கிடைப்பது அரிதல்லவா? எனவே இன்னும் சிறிது நேரம் நீரில் அமிழ்வோமா? என்று எண்ணுகிறோம். நீராடிவிட்டு அங்கேயே திருமண்காப்பு அணிந்து கொண்டு ஸந்தியாவந்தனம் செய்துவிட்டு புறப்படுகிறோம்.

காலை சுமார் 7-30மணிக்கு ஸன்னிதி திறக்கப்பட்டு விச்வரூபம் நடக்கிறது. கோவிலில் ஒரு அர்ச்சகரையும், ஒரு அலுவலரையும் (எங்களையும்) தவிர வேறு யாருமேயில்லை. விச்வரூபம் முடிந்த பிறகு எங்களுக்கு ஸேவை செய்து வைக்கிறார் அர்ச்சகர். பெருமாளுக்கு அழகிய மெய்யன் என்று திருநாமம். இவர்தான் பிரதானப் பெருமாள். நின்ற திருக்கோலத்தில் மிகவும் சாதாரணமாக எழுந்

தருளியிருக்கிறார். இவ்வளவு தூரம் சிரமப்பட்டு ஸேவிக்க வந்தவர்களுக்கு இது ஏமாற்றமாகவே இருந்தது. திருமெய்யத் தெம்பெருமானைப் பற்றி விசேஷமாக ஏதேதோ கேள்விப் பட்டிருந்தோமே இங்கே ஒன்றும் காணவில்லையே! இவ்வளவுதானா? ஒன்றும் புரியவில்லையே!

பிறகு அர்ச்சகர் அடுத்த ஸன்னிதிக்குப் போகலாம் வாருங்கள் என்று கூப்பிடுகிறார். பின் தொடர்கிறோம். பக்கத்திலுள்ள ஸன்னிதிக்குள் நுழைகிறோம். கண்முன்னே கண்ட காட்சி......ஆஹா! என் சொல்வோம்! இவ்வளவு தூரம் நாங்கள் பயணம் செய்த களைப்பெல்லாம் இந்த ஒரு காட்சியிலேயே மறைந்துவிட்டது. அங்கே திருமெய்யத்து எம்பெருமான் **ஸத்ய மூர்த்திப்** பெருமான் அத்யாச்சர்யமாக சயனித்துள்ளான், ஆதிசேஷனென்கிற படுக்கையிலே. அவ்வெம்பெருமானுக்குத் தீங்கு செய்ய எண்ணி வருகிறார்கள். மது, கைடபன் எனும் அசுரர்கள். அவர்களைக் கண்ட மாத்திரத்தி ஆதிசேஷன் தனது வாயிலிருந்து விஷஜ்வாலையைக் கக்குகிறான். அதன் வேகம் தாங்காமல் மது கைடபர்கள் திரும்பி ஓடுகிறார்கள். திருவடியருகில் அமர்ந்திருக்கும் பூமாதேவியும் விஷத்தின் வேகம் தாங்காமல் சற்றே ஒதுங்கியிருக்கிறார்கள். பெருமானுடைய திருமார்பில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீதேவியும் திருமார்பில் மறைந்து ஒதுங்குகிறாள். தனது இடது திருக்கரத்தை உட்பக்கமாய் திருமார்பிற்கு மேலே அழுத்தி ஸ்ரீதேவியை "பயப்படாதே" என்று சொல்லும் முகமாய் சயனித்திருக்கிறான். ஆதிசேஷன் "எம்பெருமானது கட்டளைக்கு முன்பே நாம் இப்படி விஷஜ்வாலையைக்கக்கி விட்டோமே" என்று வெட்கப்பட்டு தனது ஐந்துதலைகளையும் கவிழ்த்துக் கொள்ள, பெருமான் தனது வலது திருக்கரத்தால் அவனைத் தட்டிக் கொடுத்த வண்ணமாக ஆசிர்வதிக்கிறான். திருநாக்கமலத்திலே பிரம்மா; சுற்றிலும் முப்பத்து முக்கோடி தேவர்களும், ரிஷிகளும் புடைசூழ சயனித்திருக்கிறான் **ஸத்ய மூர்த்தி.**

ஒரு ஓவியனாகப் பிறக்கவில்லையே என்ற ஏக்கம் ஏற்பட்டது. பிறந்திருந்தால் அவனுடைய அந்த அற்புத தரிசனத்தை கிதாசாரியன் வாசகர்களுக்கு அப்படியே சித்திரமாக வழங்கியிருக்கலாமே என்ற ஏக்கம்தான் ஏற்பட்டது. மலையின் உட்புறத்தைக் குடைந்து கர்ப்பக்ருஹம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. உட்புறத்திலுள்ள பாறைகளே மேலே கண்ட அற்புதக்காட்சியுள்ள எம்பெருமானாக வடிக்கப் பட்டிருக்கிறது. இத்தனை அற்புதங்களையும் உள்ளடக்கிய ஒரு ஸேவையைக் கண்டவுடன் வெள்ளத்தினிடையில் முழுகியவரைப் போல் தத்தளித்தோம், மலையே திருவுடம்பான அவ்வெம்

பெருமானை ஆழ்வார்கள் "**திருமெய்யத்து இன்னமுத வெள்ளம்**" என்று பாடியுள்ளது எவ்வளவு பொருத்தம்!

கம்பீரமாக நின்ற திருக்கோலத்தில் எங்களைக் கவர்ந்தவர் திருவல்லிக்கேணி ஸ்ரீ வேங்கட கிருஷ்ணன். வீற்றிருந்த திருக்கோலத்தில் காஞ்சி பாண்டவதூதன். இன்று சயனத் திருக்கோலத்தில் திருமெய்யம் ஸத்ய மூர்த்தி. கம்பராமாயணத்தில் வாலி இராமனை "ஓவியத்து எழுத ஒண்ணா உருவத்தாய்" என்கிறான். அதே நிலை தான் எங்களுக்கும். அவனழகினை எழுத்தால் வர்ணித்து முடியாது; நேரில் கண்டே ஆநந்திக்க வேணும். பிரியவே மனமில்லாமல் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே ஸன்னிதியிலிருந்து வெளியே வந்தோம். பிறகு மற்றொரு சன்னிதியில் **உஜ்ஜீவனத்தாயாரையும்** சேவித்துவிட்டு திருமயம் பஸ்டாண்டை வந்தடைந்தோம்.

அங்கிருந்து திருப்பத்தூருக்கு வந்தோம். திருப்பத்தூரிலிருந்து திருக்கோட்டியூருக்கு வந்தோம். எல்லாம் பஸ் மூலமாகத்தான். அப்போது காலை மணி 9-30.

திருக்கோட்டியூர் பிரபலமான சிற்றூர். இங்குள்ளாரால் திருக்கஷ்டியூர் என வழங்கப்படுகிறது. ஆளவந்தாரின் சீடரான திருக்கோட்டியூர் நம்பிகள் அவதரித்த ஸ்தலம். ஸ்ரீராமாநுஜர் இவரிடம் ரஹஸ்யார்த்தங்கள் பெறுவதற்காக 18முறை இவ்வூருக்கு வந்திருக்கிறார். மிகவும் பெரிய கோயில். இங்குள்ள விமானம் அபூர்வமாய் அஷ்டாங்க வடிவில் அமைந்துள்ளது. அதாவது எட்டுக்கட்டோடு மூன்று தளமாய் அமைந்துள்ளது. ஒவ்வொரு தளத்திலும் ஒரு ஸன்னிதியுள்ளது நாங்கள் கோயிலுக்குள் நுழைந்ததுமே எங்களை வரவேற்பவர் போல எதிர்கொண்டார் ஒரு இளைஞர். அக்கோயிலின் மணியக்காரர் என்று தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டார். சுமார் இருபதே வயதுள்ள மாதவன் என்ற அந்த இளைஞரது சுறுசுறுப்பு எங்களை அதிசயிக்க வைத்தது. கோயில் முழுவதையும் நன்றாகச் சுற்றிக் காண்பித்தார். விமானத்தின் மூன்று தளங்கள் மீதும் ஏறினோம். மூன்றாவது தளத்தில் எம்பெருமானார் தாம் பெற்ற ரஹஸ்யார்த்தங்களை ஆசையுடையோர்களுக்கு உபதேசித்த இடமிருக்கிறது எல்லாவற்றையும் நன்கு ஸேவித்தோம். அடித்தளத்தில் பிரதான பெருமான் சயனத்திருக்கோலம். நாங்கள் சென்ற சமயம் ஆண்டாள் உத்ஸவமானபடியால் உத்ஸவர் திருப்பள்ளியறையிலே ஆண்டாளோடு எழுந்தருளியிருந்தார். ஆழ்வார் '**வெள்ளியான்......திருக்கோட்டியூரானே**" என்று பாடியுள்ளதற்கேற்ப வெள்ளியாலான திருமேனியுடன் எழுந்தருளியிருக்கிறார். எல்லாம் ஸேவித்து முடித்த போது பகல் 11-30. பசிவயிற்றைக் கிள்ளியது.

மணியக்காரர் புரிந்து கொண்டார். "நித்யம் இங்கு வெளியூர் யாத்ரிகர்களுக்காக தேசாந்திரி தளிகை உண்டு. ஆனால் இன்று ஏகாதசியானபடியால் இன்று மட்டும் கிடையாது. ஆனாலும் பெருமாளை ஸேவிக்க வேண்டுமென்றும் வெகுதூரத்திலிருந்து வந்திருக்கிறபடியால் உங்களுக்காகவென்றே பொங்கல் தளிகை பெருமாளுக்கு அமுது செய்து வைத்திருக்கிறோம். வாருங்கள் மடைப்பள்ளிக்குப் போவோம்" என்று கூறியவுடன் எங்கள் நெஞ்சம் நெகிழ்ந்துவிட்டது. **"காசின் வாய்கரம் விற்கிலும் கரவாது மாற்றிலி சோறிட்டு தேச வார்த்தைபடைக்கும் வண்கையினர்கள் வாழ் திருக்கோட்டியூர்"** என்று பெரியாழ்வார் பாடியுள்ளது பொய்யன்றே! எவ்வளவு வற்புறுத்தியும் எங்களுக்களித்த ப்ரஸாதத்திற்கான செலவையும் ஏற்கமறுத்துவிட்டனர். விடைபெறுவதற்காக கோயில் வாசலுக்கு வருவதற்கும் அங்கேயே பஸ் வருவதற்கும் சரியாக இருந்தது. எங்களைப் பிரியவே மனமில்லாமல் அன்புடன் வழியனுப்பி வைத்தனர்.

திருக்கோட்டியூரிலிருந்து பஸ் மூலம் ராமனாதபுரத்தினை வந்தடைந்தோம் சுமார் 4–30 மணிக்கு. அங்கிருந்து ஒரு டாக்ஸி மூலம் **திருப்புல்லாணி** வந்தடைந்தோம். (திருக்கோட்டியூரிலிருந்து திருப்புல்லாணி சுமார் 80 கி. மீ.). அப்போது மணி 5–30. கோயில் வாசலில் **ஸ்தானீகம் வயலாலி** ஐயங்கார் ஸ்வாமியை சந்தித்தோம், அப்போதே சேதுஸ்நானம் செய்ய வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டது. கோயிலிலிருந்து சேது ஸமுத்திரம் சுமார் 4 கி. மீ யில் உள்ளது. வயலாலி ஸ்வாமி ஒரு வாடகை சைக்கிள் கடையில் 3 சைக்கிள்கள் வாங்கிக் கொடுத்தார். சுமார் ஒரு மணி காலத்திற்குள் சேது ஸ்நானத்தை முடித்துக் கொண்டு கோயிலுக்குத் திரும்பினோம். அன்று வெள்ளிக்கிழமை. பெருமாள் தாயாரோடு சேர்ந்து எழுந்தருளியிருந்தார். திருப்பாவை கோஷ்டியில் அந்வயித்தோம்.

ஸ்ரீராமபிரான் சமுத்திரத்தைக் கடக்க தனக்கு வழிவிடுமாறு வேண்டி சமுத்திர ராஜனை "சரணம் புகுந்த" இடம் இது. அதற்குச் சேர பெருமாள் தர்ப்பசயனத்தில் எழுந்தருளி இருக்கிறார். இங்கு எழுந்தருளியிருக்கும் அனுமார் "கண்டேன் சீதையை" என்று சொல்லும் முகமாய் கை கட்டி வாய்பொத்தி பவ்யமாய் எழுந்தருளி இருக்கும் அழகு ஸேவித்தே அறியலாகும். விபீஷணனுக்குப் பட்டாபிஷேகம் நடந்த இடமும் இதுவே. ஸன்னிதியில் பெருமாளுக்கு அருகில் ஸமுத்திர ராஜன், விபீஷணாழ்வான் முதலியோர் எழுந்தருளியிருக்கின்றனர்.

திருப்புல்லாணியிலிருந்து மதுரை வழியாக ஸ்ரீ வில்லிபுத்தூர் செல்வது என்று தீர்மானித்தோம். புல்லாணி எம்பெருமான்

பிராசாதங்களை புசித்துவிட்டு இரவு 9-30 மணிக்கு ராமநாதபுரம் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்தோம். இரவு 1 மணிக்கு மதுரை பேசஞ்சர் வரும் என்று அறிந்தோம். என்ன செய்வது. ஸ்டேஷனிலேயே சிறுநித்திரை. சரியாக ஒருமணிக்கு ரயில் வந்தது. மறுநாள் காலை 6மணிக்கு மதுரை அடைந்தோம்.

இங்கிருந்து ஸ்ரீவில்லிபுத்தூர் செல்ல வேண்டும். இதற்கு பஸ்ஸில் சென்றால் சுமார் 3மணி காலமாவது ஆகும். என்ன செய்வது என்று தெரியாமல் தவித்தோம். வழித்துணையாம் கானமேகத்தின் அருகில், இருக்கும் எங்களுக்கு உதவவே வந்ததுபோல் காத்திருந்தது ஒரு கார் ராஜபாளையத்திலிருந்து மதுரை வந்த அக்கார் ராஜபாளையத்திற்குத் திரும்பும் நிலையிலிருந்தது. பஸ் சார்ஜுக்கு எங்களை ஸ்ரீவில்லி புத்தூரில் 8மணிக்கு இறக்கிவிட்டது அக்கார். எங்கே தங்குவது என்று தெரியாமல் சில நிமிடங்கள் அலைந்தோம்; திண்டாடினோம். முடிவில் ஸன்னிதி வீதியிலிருந்த ஒரு சத்திரத்திற்குள் நுழைந்தோம் என்ன ஆச்சர்யம்' நமது நண்பரான சர்வோபகாரி செட்டியார் அங்கிருந்தார். எங்களை மகிழ்ச்சியுடன் வரவேற்று நீராடுவதற்கான ஏற்பாடுகளையும் செய்து கொடுத்தார். அவர் எங்களுக்குச் செய்த உதவிகள், அப்பப்பா......எழுத்தால் எழுத முடியாது. அவரிடம் எங்களைச் சேர்த்தது ஆண்டாளின் திருவருளே.

ஸ்ரீவில்லிபுத்தூரில் இன்று திருவாடிப்பூர இரண்டாவது நாள் உத்ஸவம். காலை பல்லக்கில் ரங்கமன்னாரும் ஆண்டாளும் பல்லக்கில் திருவீதிப் புறப்பாடு கண்டருளினர். மாடவீதியிலுள்ள அருளாளப் பெருமான் எம்பெருமானார் ஸன்னிதியில் மண்டபப்படி. இதை விசேஷமாக நடத்துபவர் அச்சன்னிதியின் நிர்வாககரான ஸ்ரீ. உ. வே. V. K. ஸ்ரீனிவாஸாசாரியார் ஸ்வாமி. எங்களைக் கண்டவுடன் பெரு மகிழ்ச்சியுடன் வரவேற்ற அவர் எங்களையே மண்டபப்படி உபயதார்களாக்கி மாலை மரியாதைகளை எங்களுக்கே அளித்து தமது பெருந்தன்மையையும், எங்கள்பால் அவருக்கிருந்த அன்பையும் வெளிப்படுத்தினார். மேலும் அன்று எங்களுக்கு விசேஷ ததியாராதனையையும் தமது திருமாளிகையில் நடத்தினார்.

மத்யானம் மூன்று மணிக்கு அருகிலுள்ள திருத்தண்கால் என்ற திவ்ய தேசத்திற்குச் சென்றோம். ஆஹா! இத்திவ்யதேசத்தின் அழகைக் காணக் கண்கோடி வேண்டும். மிக அழகான முறையில் அமைந்துள்ள இக்கோயிலில் பெருமான் நின்றும் இருந்தும் கிடந்தும் ஸேவை தருகிறான். இங்கு தாயாருக்கு ப்ராதான்யம் அதிகம்.

அநுதினமும் தாயாருக்கு (மூலவர்) திருமஞ்சனம் நடைபெறுகிறது. சயன மூர்த்தியான ஸ்ரீரங்கநாதன் ஸன்னிதி ஒரே கல்லில் ஆனது. தாயார் உத்ஸவர் இரண்டே திருக்கரங்களுடன் நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளார். சுமார் 6–30 மணிக்கு ஸ்ரீ வில்லிபுத்தூர் திரும்பினோம். பெரியாழ்வாரையும் வடபத்ரசாயியையும் ஸேவித்தோம். 8மணி அளவில் வடக்கு ரதவீதியிலுள்ள மண்டபம் ஒன்றில் ஆண்டாளுக்கும் ரங்கமன்னருக்கும் (இரண்டாவது) திருமஞ்சனம் நடந்தது. பின்னர் பெரியாழ்வார் திருமொழி இரண்டாம்பத்தும் திருவாய்மொழி இரண்டாம்பத்தும் சேவை நடந்தது. இரவு 10மணி முதல் இரவு 1மணிவரை திருவீதிப் புறப்பாடு ஆண்டாள் சந்திரப் பிரபையிலும் ரங்கமன்னர் சிம்மவாகனத்திலும் எழுந்தருளினர்கள். இரண்டாம் திருவந்தாதி கோஷ்டி. இவ்வாறு ஆண்டாளின் இரண்டாவது நாள் உத்ஸவத்தினை பூர்த்தியாக அனுபவிக்கும் பேறு பெற்றோம். உத்ஸவத்தை முன்னிட்டு ஸ்ரீவில்லிபுத்தூரே விழாக் கோலம் பூண்டிருந்தது. கோயிலின் முன் போடப்பட்டுள்ள மிகப் பெரிய பந்தலின் கீழ் தினசரி உபந்யாசங்கள், கச்சேரிகள் முதலியவைகள் நடந்துகொண்டே இருந்தன.

மறுநாள் (22–7-79— ஞாயிறு) காலை கிளம்பி சுமார் 8மணிக்கு மதுரை வந்து அங்கிருந்து டவுன்பஸ் மூலம் திருமாலிருஞ்சோலையை (21 கி.மீ ) அடைந்தோம். சுந்தரத் தோளுடையான் கள்ளழகரைச் மனதாரச் சேவித்தோம். இன்று திருவாதிரை. எனவே ஸ்ரீராமாநுஜருக்கு இராமாநூற்றந்தாதி ஸேவை நடந்தது. அதில் அன்வயித்துவிட்டு, அழகர்மலையிலிருந்து பெருகும் நூபுரகங்கையில் ஸ்நாநம் செய்யக் கிளம்பினோம். சுமார் 4 கி.மீ. நடந்து மலையுச்சியை அடைந்தோம். அங்கே பெரும் கூட்டம். எனினும் தீர்த்த மாடிவிட்டு கீழே இறங்கினோம். ஸன்னிதி பிரசாதத்தை ஸ்வீகரித்துவிட்டு சுமார் 4மணிக்கு மதுரை திரும்பினோம். மதுரையின் நடுவேயுள்ள கூடலழகர் ஸன்னிதிக்குச் சென்றோம் அங்கு வானோங்கியுள்ள அஷ்டாக்ஷர விமானத்தையும், மூன்று நிலைகளிலும் பெருமான் நின்றும், இருந்தும், கிடந்தும் ஸேவை ஸாதிக்குமழகையும், ஸன்னிதி ஸமீபத்தில் நன்றாக திருப்பணிகள் செய்யப்பட்டு பாங்குடன் விளங்குவதையும் கண்டோம். இத்திருப்பணிகளில் பெரும் பங்குவகித்து சிறப்புற நடத்திய பேராசிரியர் அரங்கராசன் எங்களுடன் கூடவே வந்து அனைத்தையும் விளக்கினார்.

இவ்வளவு திவ்யதேசங்களையும் ஸேவித்து விட்டாலும் இன்னும் ஸேவிக்க வேண்டும் என்ற ஆவல் பெருகிக் கொண்டே போகிறது.

ஆனாலும் லௌகிக நிர்ப்பந்தங்கள் (நாளை காலை ஆபீசுக்குப் போயாக வேண்டுமே) எங்களுடைய ஆசைக்கு அணைபோட்டன. எனவே அன்றிரவு 7–10 மணிக்கு பாண்டியன் எக்ஸ்ப்ரஸ்ஸில் கிளம்பி மறு நாள் காலை சென்னை வந்து சேர்ந்தோம்.

பயணம் செய்வதில் விருப்பமுடையவர்களுக்கு ஏதோ சுற்றுலாத் தலங்களைக் காண்பதைக் காட்டிலும் திவ்யதேச தரிசனமாக அமைவது சிறந்ததல்லவா? இப்பயணத்தின் போது அங்கங்கே பஸ்களும், ரயில்களும், டாக்ஸிகளும் குறித்த நேரத்தில் கிடைத்த அதிசயம் எம்பெருமானுடைய திருவருளே. இல்லாவிட்டால் மூன்றே நாட்களில் 1200 கி.மீ பயணம் செய்வது அதுவும் பஸ்களையும் ரயில்களையும் நம்பி "அருளிச்செயல் அன்பர் அவை" என்ற பெயருக்கேற்ப ஆங்காங்கே திவ்யப்ரபந்த கோஷ்டிகளில் அன்வயிக்கும் பாக்கியமும் எங்களுக்கு ஏற்படுத்தி வைத்தது அவனுடைய திருவருளே.

இப்பயணக் கட்டுரை எழுதியதன் நோக்கம் இதனைக் கண்ணுறும் அன்பர்கள் திவ்யதேச யாத்திரை செய்ய விரும்பினால் அதற்கு உதவும் என்ற நம்பிக்கையே.

---

# தங்கையும் தமையனும்

ஸ்ரீ R. வேங்கடராமானுஜன்

தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு

என்பது திருக்குறள். மணலின் கண் உள்ள கேணியின் நீர் அதனைத் தோண்டிய அளவும் செல்ல ஊறும்; அதுபோல் நூலினைப் பயின்ற அளவிற்கேற்ப மக்கட்கு அறிவு வளரும் என்பது பொருள். இதற்கு விஷயமானது வேதநூல் எனலாம். வேதத்தைத் தங்களுடைய ஞானத்தின் மிகுதியால் கண்டவர்கள் இருடிகள்; இறைவனுடைய அருளால் பெற்ற திவ்யஞானத்தால் கண்டவர்கள் ஆழ்வார்கள்; யோக முயற்சியினால் பெற்ற ஞானம் அளவுபட்டிருக்கும் இறைவனுடைய அருளால் பெற்ற ஞானம் அளவற்றதாகும்; இந்த திவ்ய ஞானத்தால் அருளிச் செய்யப் பெற்றமையால், ஆழ்வார்களுடைய அருளிச் செயலுக்கு திவ்யப்ரபந்தம் என்ற பெயர் ஏற்பட்டது.

இவற்றுள், பெரியாழ்வார் திருமொழி முதல் பிரபந்தமாகும். வேதத்திற்கு திருமொழி என்று பெயர். "இருக்கிலங்கு திருமொழிவாய் எண்டோளீசர்க்கு" (6 6.8) என்றவிடத்துத் திருமங்கையாழ்வார் அருளிச் செய்திருப்பது காணலாம். இருக்கு—வேதம். அதில் இலங்குகின்ற — விளங்குகின்ற. திருமொழி — ஸ்ரீ புருஷசூக்தம் முதலியவை என்பது பொருள். திரு என்பது உயர்வைக் குறிக்கும். உயர்ந்த வேதம் என்று பொருள். இத்தகைய வேதத்தின் பொருளை உள்ளவாறு உணர்த்துவதால், ஆழ்வாருடைய பிரபந்தமும் திருமொழி எனப்பட்டது. பெரியாழ்வாரால் அருளப்பட்டமையால் பெரியாழ்வார் திருமொழி என்று வழங்கப்படுகிறது.

இதில் "தங்கையை மூக்கும் தமையனைத் தலையும் தடிந்த எம்தாசரதி" என்ற சரித்திரத்தைக் காண்கிறோம். இதன் கருத்து யாது? என்பதை அறிதல் வேண்டும். தங்கை சூர்ப்பணகை அவளுடைய மூக்கை அறுத்தான்; தமையன் இராவணன். அவனுடைய தலையை அறுத்தான்; இங்ஙனம் செய்தவன் எம்முடைய தாசரதி என்று அருளியிருக்கிறார். சூர்ப்பணகை என்பவள் இராமபிரானுடைய வடிவழகில் ஈடுபட்டு, அவனை வலிய மணந்துகொள்ள விரும்பினாள். இராமபிரான் அதற்கு இடம் அளிக்கவில்லை. அதனால் சீதையின்மேல் சினந்து சீதையைக் கொல்ல நினைந்து, அவளை அப்பால் தூக்கிச் செல்ல முயன்றாள். இதனை அறிந்த இளைய பெருமாள் சூர்ப்பனகையின் மேல் பாய்ந்து பிடித்துக் கொண்டார். அவளுடைய மூக்கையும் காதுகளையுமறுத்து விட்டார். இச்செயல் இளையபெரு

மாளுடையதாயினும் இருவருக்குமுள்ள ஒற்றுமை கருதி, இதனைப் பெருமாள் செயலாக ஆழ்வார் அருளியிருக்கிறார் என அறியலாம். ஸர்வலோக நாதரான பெருமானை இவள் நாதராக விரும்பியதில் குற்றமில்லை. பிராட்டியைப் பிரித்துப் பெருமானை விரும்பினதும், பிராட்டியைக் கொன்றுவிட வேண்டுமென்று நினைத்ததும் பெருங் குற்றமாயிற்று. அதனால் சூர்ப்பணகை தண்டிக்கப்பட்டாள்.

ஆனால், இத்தகைய பெருங்குற்றத்தைச் செய்த இவளுடைய தலையை அறுத்து விடாமல், மூக்கையும் காதுகளையும் அறுத்து விடுவானேன்? என்று கேள்வி எழும். எத்தகைய அபராதம் செய்தவர்களாயினும், பிராட்டியின் முன்பு அவர்களைக் கொல்ல இயலாது; பிராட்டியின் மனம் பொறுக்காது என்று கருதிப் பெருமாள் அவர்களைக் கொல்ல மாட்டார். திருவடி, ராக்ஷஸிகளைக் கொல்ல நினைத்த போது, பிராட்டி, தன்னுடைய மனநிலையைக்காட்டிப் பொறுப்பித்தது இங்கு காணலாம். ஆகவேதான், மஹாபராதம் பண்ணின காகாசுரனைப் பெருமாள் கொல்லாமல் விட்டுவிட்டார். இந்த வுண்மையை ஸ்ரீமத் பிள்ளை லோகாசாரியர் "இவள் சந்நிதியாலே காகம் தலைபெற்றது; அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்று முமுக்ஷுப்படியில் அருளியுள்ளது காணலாம். ஆதலால், பிராட்டியின் சந்நிதியாலே சூர்ப்பணகை உயிருடன் விடப்பட்டாள் என்பதை அறியலாம். பெண்பால் என்பதால் விடப்பட்டாள் என்றால் தாடகையும் விடப்பட்டிருக்க வேண்டும். இனி; இராவணனிடம் சென்று முறைப்பட்டதால், இராவணனுக்கு விபரீத புத்தி ஏற்பட்டது. அதனால், மாரீசனைக் கொண்டு பெருமாளைப் பிரித்து வைத்துப் பிராட்டியைக் கொண்டு சென்றான். பிராட்டியைத் தாயென மதியாது அவளிடம் தகாத புத்தியைச் செய்தான். இது காரணமாகப் பெருமாளுக்குச் சீற்றம் பிறந்து இராவணனுடைய தலையை அறுத்து அவனைக் கொன்றருளினார். இராவணனுடைய வதத்திற்குக் காரணம் சூர்ப்பணகை என்பதும் புலனாயிற்று. இது தோன்றவே, சூர்ப்பணகையை முற்படக் கூறியுள்ளார் ஆழ்வார். தங்கை என்று அருளியிருப்பதும் அதுபற்றி என்று கொள்ளலாம். இதனைக் கம்ப நார் அழகுறக் காட்டியிருக்கிறார். (கம்பரைக் கம்ப நாதன் என்று முன்னோர்கள் வழங்கியுள்ளனர் திருவாய் 3 6 8. அரும்)

நீலமா மணிநிற நிருதர் வேந்தனை
மூல நாசம்பெற முடிக்கும் மொய்ம்பினள்;
மேலை நாளுயிரொடும் பிறந்து, தான்வினை
கால மோர்ந்துடனுறை கடிய நோயனாள்.

(ஆரண்ய காண்டம் 232)

என்கிறார், 'நிருதர் வேந்தனை மூல நாசம்பெற முடிக்கும் மொய்ம்பினள்' என்றதால் இராவணனுடைய குல நாசத்திற்குக் காரணமானவள் இவள் என்பதை அறியலாம். இதனை ஓர் உவமை முகத்தால் விளக்குகின்றார். "மேலைநாளுயிரொடும் பிறந்து தான்விளை கால மோர்ந்துடனுறை கடிய நோயாளுள்" என்று. சில வலிய நோய்கள் உடன் பிறந்தே கொல்லும்; அது போன்று இவள் உடன் பிறந்தே இராவணனைக் கொல்லுவித்தாள் என்று தெரிவித்துள்ளார். ஆழ்வார், 'தங்கை' என்று அருளியுள்ளதைக் கம்பர் விளக்கியிருக்கிறார் என்பது தெரிகிறது.

வேதப் பொருளாய் மிக விளங்கும் ஸ்ரீராமாயணத்தில் காணப் படுகின்ற தங்கையை மூக்கும் தமையனைத் தலையும் தடிந்த செயல் வேதாந்தப் பொருளாம் என்பதை ஆழ்வார் காட்டியுள்ளார் என்கிறார் விசதவாக் சிகாமணி என்னும் விருது பெற்ற ஸ்வாமி மணவாளமாமுனிகள். "ஸர்வலோகத்துக்கும் மாதாவும் பிதாவுமாய்க் கொண்டிருக்கும் மிதுனத்தை முறையிலே விரும்பாமல் முறைகெட விரும்புவோர் பெறும் பேறு இது என்னுமிடம் தோற்றவிறே தங்கையை மூக்கும் தமையனைத் தலையும் தடிந்தது. அதாவது முக்ய விசேஷண பூதையான பிராட்டியை உபேக்ஷித்து, விசேஷ்ய பூதரான பெருமாளை விரும்பின சூர்ப்பணகைக்கு மூக்கிய அங்கஹானியே பலமாயிற்று; அவனுக்கு விசேஷ்ய பூதராய்க் கொண்டு ஸர்வர்க்கும் ப்ராணனாயிருக்கிற பெருமாளை உபேக்ஷித்து, விசேஷண பூதையான பிராட்டியை, விபரீத புத்தியினாலே விரும்பின ராவணனுக்கு ப்ராண ஹானியே பலமாய் விட்டது என்கை. இவ்வர்த்தத்தை ப்ரகாசிப்பிக்கைக்காகவாயிற்று இவர் பலவிடங்களிலும் அருளிச்செய்தது" என்பது ஸ்வாமியின் திருவாக்கு. வேறு யாரும் அருளிச் செய்யாத மறைப் பொருளை (இரகசியத்தை) ஸ்வாமி அருளிச் செய்திருப்பது காணத் தக்கது ஒன்று.

ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தில் சிறந்தனவாக விளங்கும் கொள்கைகள் பலவுண்டு. அவற்றுள் பிராட்டியும் பெருமானும் விட்டுப்பிரியாத தத்துவங்கள் என்பது மிகவும் முக்கியமானது, ஒரு பொருளுக்கு உண்டான சிறப்புத் தன்மையானது, அதனைப் பிற பொருள்களின் நின்றும் வேறுபடுத்திக் காட்டும். அது போலவே பிராட்டியும், பெருமானுக்குச் சிறப்புத் தன்மையாக இருந்து கொண்டு, அவனை எல்லாப் பொருள்களின் நின்றும் வேறுபடுத்துகிறாள் என்பது உண்மை. அதனால் "முக்கிய விசேஷண பூதையான பிராட்டியை" என்று அருளிச் செய்துள்ளார். விசேஷணம் சிறப்புத் தன்மை, அதில் முக்கியம் பிராட்டி என்பதாம். எல்லாப் பொருள்களும் இறைவனைவிட்டுப்

பிரியாது அவனுக்கு உடலாக அமையுமென்று வேதம் கூறுகின்றது. பிராட்டியும் அவ்வாறே இருந்து கொண்டு இறைவன் தோன்றும் போது கூடவே தோன்றுவாள். ஆதலால் இவள் அவனுக்கு முக்கிய விசேஷணம் எனப்படுகிருள். இறைவனுக்குள்ள சிறப்புத் தன்மைகள் பலவற்றையும் அருளிச் செய்யத் தொடங்கிய பாஷ்யகாரர், 'ஸ்ரீய: பதி:—பிராட்டிக்குத் தலைவன்' என்று கீதாபாஷ்யத்தின் ஆரம்பத்தில் அருளிச் செய்தது இது பற்றியாம் என்கிருர்கள்.

சூரியனை விட்டு அதன் ஒளியை எவ்வாறு பிரிக்க இயலாதோ அவ்வாறே எங்கள் இருவரையும் பிரிக்க இயலாது என்று பிராட்டியும் பெருமாளும் கூறியிருக்கிருர்கள். நம்மாழ்வார், பிராட்டியைப் பற்றி அருளிச் செய்யுமிடத்து ''உன் திரு; மார்வத்து மாலை; நங்கை'' என்ற சொற்களால் அருளிச் செய்துள்ளார். ''மாயஞ் செய்யேல் என்னை'' என்ற பாசுரத்தில் இதனைக் காணலாம். உன்திரு—உனக்குத் திரு; உனக்கு மேலான சம்பத்து என்பதாம். பிராட்டியால் இறைவனுக்கு மேன்மை என்பது பொருள். இதனல் பிராட்டி, இறைவனுக்குச் சிறப்புத் தன்மையாக விளங்குவது காணலாம். உன்னுடைய திரு என்ற போது, உன்னுடைமை அவள் என்பது பெறப்படும். இதனல், இறைவன் அவளுக்கு உயிராய் விளங்குகின்ருன் என்பது தோன்றும். இங்ஙனம் உடலும் உயிருமாய் நிற்பது மாத்திரமல்லாமல், இருவருடைய திருமேனிகளும் விட்டுப் பிரியாதவை என்பதை 'மார்வத்து மாலை' என்ற சொல்லால் ஆழ்வார் அருளிச் செய்திருக்கிருர். மாலையினல் மார்புக்கு அழகு ஏற்படுகிறது என்பதும், மார்பினல் மாலைக்கு அழகு ஏற்படுகிறது என்பதும் கொள்ளலாகும். இங்கு, பிராட்டியினல் இறைவனுக்கு உண்டாம் பெருமையும், இறைவனல் பிராட்டிக்கு உண்டாம் பெருமையும் தோன்றும். ஒளிக்கு ஆதாரமாய் இருப்பது கொண்டு மணிக்குப் பெருமையிருந்தாலும் ஒளியால்தான் மணிக்குப் பெருமை உண்டாகிறது. ஒளியைப் பற்றி மணியை விரும்புகிருர்கள். அதுபோலவே நாம் பிராட்டியைப் பற்றி இறைவனை விரும்புகிறோம். இதனை நங்கை என்று ஆழ்வார் காட்டியிருக்கிருர். நங்கை—குணத்தால மிக்கவள் என்று பொருள்.

இங்ஙனம் முக்ய விசேஷணமான பிராட்டியை வெறுத்ததால், சூர்ப்பணகைக்கு முக்ய விசேஷணமான உடலினுறுப்புப் போயிற்று. அனைவருக்கும் உயிராய் நின்று பெருமானை வெறுத்ததால், இராவணனுக்கு உயிர் போயிற்று. ஆதலால் உடலும் உயிருமான இருவரையும் சேர்த்து விரும்புதல் வேண்டுமென்பது பெறப்பட்டது. ''ஆக இச் சேர்த்தி உத்தேச்யமாய் விட்டது'' (முமுக்ஷுப்படி) என்ற வாக்கியத்தை இங்கே அநுஸந்தித்தல் தகும்.

# ஏன் பள்ளி கொண்டீர் ஐயா?

கவியரசு கண்ணதாசன்

என் இறைவனே!

துயில் நீங்கிப் பள்ளி எழுமாறு உன்னை பக்தர்கள் பலர் வேண்டியிருக்கிறார்கள்.

உண்மையில் இரவில் நீ தூங்குகிறாயா?

ரயிலில் நாங்கள் தூங்குகிறோம்; ஓட்டுபவர் விழித்துக் கொண்டிருக்கிறார்.

அவரும் தூங்கி விட்டால், பிறகு எல்லோரும் நிரந்தரமாகத் தூங்க வேண்டியிருக்குமே!

நீ தூங்கவில்லை, சற்று ஓய்வெடுத்துக் கொள்கிறாய்.

மாநில அரசாங்கங்களுக்குப் பொறுப்பேற்றுக் கொண்டவர்களே, இரவிலே தூக்கம் இல்லாமல் தவிக்கிறார்கள்.

மண்டலங்கள் அனைத்துக்கும் பொறுப்பேற்றுக் கொண்ட நீ எப்படித் தூங்க முடியும்?

தாங்கவொண்ணாத அசதியின் காரணமாக உன் கண்கள் மூடுகின்றன.

கொடியின் இலைகள் கொடிய வெயிலில் தங்கள் சக்தியை இழந்து சாய்ந்து கிடப்பதுபோல், நீயும் களைப்பினால் பள்ளி கொண்டிருக்கிறாய்!

திருமலையில் அந்த அகாலக் குளிர்வேளையிலேயே, உனக்கு சுப்ரபாதம் பாடிப் பள்ளி எழுச்சி நடத்துகிறார்கள்.

திருமாலே!

கோசலையின் திருக்குமரா!

பரந்தாமா!

உன்னைப் பள்ளியெழுப்பும் அளவுக்கு சிவபிரானையோ, முருகனையோ சைவர்கள் எழுப்புவதில்லை.

காரணம் என்ன?

அவர்கள் தூங்கவில்லையா?

அதிகம் அவர்கள் உழைக்கவில்லையா?

களைப்பில்லையா? அசதி இல்லையா?

இல்லை; உன்னைவிடப் பொறுப்புகள் அதிகமா?

எனக்குத் தெரிந்தவரை மனித ஜாதிக்கு மிகவும் பக்கத்தில் இருப்பவன் நீயே.

மனிதர்களுடைய சகவாசம் உனக்கே அதிகம்!

மனித வாழ்க்கையோடு நேரடித் தொடர்பு கொண்டவன் நீயே!

ஆற்றுத் தண்ணீரையும், ஏரித் தண்ணீரையும் பயிருக்கு இறைக்கலாம்; ஆனால் பயிருக்கு அடியிலேயே தண்ணீர் இருந்து விடுமானால், நிலத்துக்குச் சொந்தகாரன் எவ்வளவு அதிர்ஷ்டகாரனாகி விடுகிறான்!

மற்றவர்கள் எல்லாம் ஏரித் தண்ணீர்; நீயே நிலத்தடித் தண்ணீர்.

தாதிக்கு எஜமானியின் குழந்தையிடம் உள்ள கடமையைவிட, தாய்க்கு மகனிடம் உள்ள கடமைகள் அதிகம்.

மனிதன் 'ஓ'வென்று சத்தமிடும் போதெல்லாம், அந்தச் சத்தம் உன்னைத்தேடிப் போடப்பட்டதாகவே நீ கருதுகிறாய்.

இடைவிடாமல் அந்த ஒலி எழுந்தும் கூட, இடை இடையே உனக்குத் தூக்கமும் வருகிறது.

ஸ்ரீரங்கத்தில் எப்போது நீ படுத்தாயோ, இன்னும் நீ எழுந்திருக்கவில்லை. திருமலையின் மீது எப்போது நிற்கத் தொடங்கினாயோ, இன்னும் படுக்கவில்லை!

ஆனால், அங்கே படுத்துக் கொண்டிருந்தாலும் விழித்துக் கொண்டிருக்கிறாய்; இங்கே நின்று கொண்டிருந்தாலும் இடை இடையே தூங்குகிறாய்.

அதனால்தான் ஸ்ரீரங்கத்தில் கேட்காத ஸுப்ரபாரதம், திருமலையில் கேட்கிறது.

நீ கோசலையின் திருக்குமாரனான போது, கோசலை உன்னைத் தாலாட்டித் தூங்க வைத்தாள்.

எங்கள் குலசேகர ஆழ்வாரும் உனக்குத் தாலாட்டுப் பாடினாரே!

நீ பாலராமனாக காட்டுக்குச் சென்றபோது, முனிவர் உன்னைத் தூங்க விடவில்லை.

சீதா பிராட்டியை நீ சந்தித்த பிறகு, உன் தூக்கம் இன்னும் கெட்டுவிட்டது.

சுயம்வரம் வெற்றிகரமாக முடிந்த பிறகு நீ கொஞ்சம் நிம்மதியாகத் தூங்கினாய்.

நீ தூங்குவதை மந்தரை விரும்பவில்லை. அதனால் கைகேயியின் மூலம் உன்னை எழுப்பிவிட்டாள்.

ஆரண்யத்தில் நீ சற்று அமைதியாகத் தூங்கினாய்; இலங்கை நாயகன் அந்தத் தூக்கத்தை கலைத்தான்.

வனவாசம் முடிந்து நீ நாடு திரும்பியதும் மறுபடியும் கண்களை மூடினாய்; அந்தத் தூக்கத்தையும் ஒரு சலவைத் தொழிலாளி கலைத்தான்.

ரகுராமா!

நீ தூங்கித் தூங்கி விழித்தாய்; விழித்து விழித்து தூங்கினாய்!

நீ எப்போதும் இரவிலே தூங்குவதாகக் கற்பனை செய்துகொண்டு, எங்களுடைய தேவைகளுக்காகவே உன்னை எழுப்புகிறோம்.

நள்ளிரவில் நோயாளி உயிரோடு போராடினால், மருத்துவர் தன் தூக்கத்தைப் பெரிதாகக் கருத முடியாதே!

இரவிலே நெஞ்சைப் பிடித்துக் கொண்டு கணவன் கதறினால்! தான் அயர்ந்து தூங்க வேண்டும் என்று மனைவி விரும்ப முடியாதே,

எல்லாம் வல்லவனே!

நீ உனக்காகத் தூங்குகிறாய்; எங்களுக்காக விழிக்கிறாய்.

எங்களை மறந்து நீ எப்போது தூங்க ஆரம்பிக்கிறாயோ, அப்போதே உலக இயக்கம் நின்றுவிடும்.

கடலில் அலை இருக்காது; கடல் நீர் உறைந்து போகும். நதி ஓடாது. மரங்கள் அசைய மாட்டா. மானிடம் செயலற்றுப் போகும், சக்தி வாய்ந்த விலங்குகள் எல்லாம் எலும்புக் கூடுகள்போல் காட்சியளிக்கும்.

பெண்டுலம் ஓடிக் கொண்டிருந்தால்தான், கடிகாரத்தின் முள் நகரும்.

நீ விழித்துக் கொண்டிருந்தால்தான், எங்கள் இயக்கம் தொடரும்.

அதனாலேயே உனக்குப் பள்ளி எழுச்சி பாடுகிறோம். இந்தப் பள்ளி எழுச்சிக்கு உண்மையான பொருள்; நீ தூங்கிக் கொண்டிருக்கிறாய் என்பது அல்ல; நீ தூங்கி விடக்கூடாதே என்பதுதான்.

"கடவுள் கூடத் தூங்குகிறானோ?"

"ஏ, முட்டாள்களே! ஏன் பள்ளி எழுச்சி பாடுகிறீர்கள்?"

—என்று எங்கள் பகுத்தறிவாளர்கள் கேட்கிறார்கள்.

அவர்களுடைய பகுத்தறிவு பாதிதான் வெந்திருக்கிறது; மீதியு வெந்த பிறகுதான் அது சோறாகும்.

'காரியங்களுக்குச் சில நோக்கங்கள் உண்டு; நோக்கங்களில் சி தோற்றங்கள் உண்டு' என்பது அவர்களுக்குத் தெரியாது.

தலைசீவிக் கொண்டிருக்கும் பெண், கண்ணாடி பார்க்காமலேகூட கூட சீவிக் கொள்கிறாள். கண்ணாடி பார்க்காமலேயே வகி எடுக்கிறாள்.

அப்போது அவள் கையே கண்ணாடி!

கண்ணாடியின் உணர்வு கைக்கு வந்துவிட்டால் முகத்துக்கு நே கண்ணாடி இருக்க வேண்டியதில்லை. 'எனது இறைவனும் கொஞ்ச தூங்க வேண்டும்' என்று ஆசையோடு விரும்புகின்ற பக்தன், அவருக் திருப்பள்ளி எழுச்சி பாடுகிறான்.

"அப்பா! ஏன் இப்படி ஓய்வு ஒழிச்சல் இல்லாமல் அலைகிறீர்கள் கொஞ்சம் நிம்மதியாகத் தூங்குங்களேன்", என்று பிள்ளை கேட்கிறது

அதிக நேரம் தகப்பன் தூங்கி விட்டால், "உடம்புக் என்னப்பா?" என்று எழுப்புகிறது.

இறைவா!

நாங்கள் உன்னை அர்த்த ஜாமத்தில் தூங்க வைக்கிறோம் அதிகாலையில் எழுப்புகிறோம்.

உன்னுடைய தூக்க நேரங்கள் என்னென்னவோ எங்களுக் தெரியாது; எங்களுடைய கணக்கு இது!

கிருஷ்ணாவதாரத்தில் நீ தூங்கியதாக வரலாறே இல்லை!

பகல் எல்லாம் புறம்; இரவெல்லாம் அகம் என்றே உன் வாழ்க்கை கழிந்தது.

கோபியர் உன்னைத் தூங்க விட்டார்களா?

ராதா உன்னைத் தூங்க விட்டாளா?

பதறி அழுத பாஞ்சாலி தூங்க விட்டாளா?

பாண்டவர்கள் தூங்க விட்டார்களா?

இல்லை, உன் பக்தர்கள்தான் தூங்க விட்டார்களா?

இமைக்காதவர்கள் என்கிற பொருள் 'தேவர்' என்ற சொல்லுக்கு உண்டு. அதனால் அவரை 'இமையோர்' என்பார்கள்.

தேவர்கள் யாவருமே தூங்கவில்லை என்பது இதன் பொருளா? இல்லை; அவர்களது கூர்மையான கவனத்தை அது காட்டுகிறது.

கவனிப்பது ராதாவையாயினும், பாண்டவர்களையாயினும் கண்ணன் கூர்ந்து கவனிக்கிறான்.

திருமாலே!

உனது அவதாரங்களிலெல்லாம் கிருஷ்ணவதாரமே, ஓய்வு ஒழிச்சலற்றது

அதனால்தான் ஸ்ரீகிருஷ்ணனை பள்ளி எழுப்பும் போது கோதை நாச்சியார் உருகுகிறார்.

நப்பின்னையிடம் 'சிபாரிசு' வைக்கிறாள்.

யசோதையிடம் 'சிபாரிசு' வைக்கிறாள்

"எல்லோரும் அவரை எழுப்புங்களேன்......!" என்று கெஞ்சுகிறாள்.

'ருத்ரன்' ஆன பரமசிவனுக்கு இப்படி எந்தவிதச் சிபாரிசுகளும் இல்லை.

ஆனால் மானிட ஜாதியில் கலந்துவிட்ட மதுசூதனுக்கு இது மிக அதிகம்

ஸ்ரீபதி ஜகன்நாதா!

நீ தூங்கினாலும் சரி, விழித்தாலும் சரி; நீ பூட்டிவிட்ட யந்திரம் ஒழுங்காக இயங்கிக் கொண்டிருக்கிறது.

சூரியோதயத்தைப் பார்த்து நாங்கள் கடிகாரத்தைத் திருப்பப் முடிகிறது.

சந்திரனின் வடிவத்தைப் பார்த்து நாங்கள் திதியை உணர முடிகிறது.

வசந்த காலம் வந்துவிட்டதென்பதற்கு அறிகுறிகள் தோன்றுகின்றன.

இலைகள் உதிருகின்றன; மீண்டும் தழைக்கின்றன.

சமயங்களில் 'மழை, வெள்ளக் காடாகிறது; வெயில் நெருப்புக் கோளமாகிறது.

அவனவனுக்கென்று நீ போட்டு வைத்த விதிக் கோடுகள்; அவனவனை இயக்கிக் கொண்டிருக்கின்றன.

அவன் உன்னை எழுப்புவதற்கெல்லாம் காரணம், "என் விதி ரேகைகளில் எங்கேனும் தவறுகள் இருந்தால், என் இறைவா! கொஞ்சம் கருணை வைத்து அதை மாற்று!" என்று வேண்டவே!

ஒரு முறை எழுதியதை நீ அழித்து எழுதுவதில்லை; விதியின் வேகத்தைக் குறைக்கிறாய்.

கங்கையில் விழுந்தவர்களே சிலர் கரையேறி விடுகிறார்கள். 'வைகை'யில் விழுந்தே சிலர் மடிந்து போகிறார்கள்.

காரணங்கள் உனக்கு மட்டுமே தெரியும்.

உன்னை எழுப்பிக் கேட்டாலொழிய மனிதன் தன்னை உணர முடியாது.

உண்மை, பொய் என்பதெல்லாம், விளைவுகளுக்குப் பின்னாலேயே!

தொடக்கம் உன்னிடமிருந்தே!

ஆகவே, தொடக்கி வைப்பவனை நாங்கள் எழுப்புகிறோம்.

ஸ்ரீமந் நாராயணா!

பள்ளி எழுந்து வருவாயாக!

# நூற்றெட்டுத் திருப்பதிகள்

தீபம் நா. பார்த்தசாரதி

ஸ்ரீ வைஷ்ணவ திவ்யதேசங்கள் எவை எவை என்று இந்தத் தலைமுறையைச் சேர்ந்த இளைஞர்கள் பலருக்குத் தெரியாது. நூற்றெட்டு ஊர்கள் என்ற மொத்த எண்ணிக்கையே தெரியாதபோது அந்த ஊர்களின் பெயர்களைச் சொல்லுமாறு கேட்பதோ அறவே இயலாத காரியமாகிவிடும். ஆழ்வாராசாரியர்களில் யார் யார் எதை எதை மங்களாசாஸனம் செய்துள்ளார்கள் என்று கேட்டாலோ அறவே தெரிந்திருக்காது. அஷ்டப் பிரபந்தத்தில் ஒன்றாகிய நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதியை எத்தனைபேர் படித்திருப்பார்கள் என்பதே சந்தேகம்தான். ஏனென்றால் அது பிரபலமாக்கப்பட யாரும் முயற்சி எடுக்கவில்லை.

இங்கே நமது மத்திய மாநில அரசாங்கங்களின் சுற்றுலாப் பிரிவு (Department of tourism) களும் சிம்லா, நைனிதால், உதகமண்டலம், கோடைக்கானல் ஆகிய மலைவாசஸ்தலங்களுக்குச் செய்கிற விளம்பரங்களைக்கூட ஆன்மீகத் திருத்தலங்களுக்குச் செய்வதில்லை. லௌகிகம் விளம்பரம் பெறுகிறது. ஆன்மீகமோ வைதிகமோ விளம்பரம் பெறுவதில்லை.

ஐரோப்பாவில், இங்கிலாந்திலும், ரோமிலும்கூட காண்டர்பரீ, வெஸ்ட்மின்ஸ்டர், வாடிகன் ஆகிய புனித தேவாலயங்களுக்கும், அவை அமைந்திருக்கும் நகரங்களுக்கும் அரசாங்கம் பிரமாதமான விளம்பரம் செய்கிறது. இந்தியாவில் திருப்பதி தேவஸ்தானத்துக்கு ஆந்திர அரசு செய்யும் விளம்பரத்தைத்தவிர வேறெந்த திவ்ய தேசத்துக்கும் விளம்பரம் செய்யப்படுவதில்லை. சுகவாசஸ்தலங்களுக்கு அளவுமீறி விளம்பரங்கள் செய்யப்படுகின்றன. உண்மையான சுகவாசஸ்தலம் திவ்ய தேசங்களே.

தென்பாண்டி நாட்டுத் திருப்பதிகள், சோழ நாட்டுத் திருப்பதிகள், சேரநாட்டுத் திருப்பதிகள், நடுநாட்டுத் திருப்பதிகள், வடநாட்டுத் திருப்பதிகள், தொண்டை நாட்டுத் திருப்பதிகள் எனப் பிரிவுகளை உடைய ஸ்ரீவைஷ்ணவ க்ஷேத்திரங்களைப்பற்றித் தனித் தனியே படங்களோடு துண்டுப் பிரசுரங்கள் வெளியிடுவது அரசாங்கச் சுற்றுலாத் துறையின் கடமை. சுற்றுலாத்துறை அதை அவசியம் செய்ய வேண்டும்.

காலஞ் சென்ற சி. என். அண்ணாதுரையின் சமாதியையும் வள்ளுவர் கோட்டத்தையும் கூடச் சுற்றுலாத் துறையினர் அக்கறையோடு விளம்பரப் படுத்தும் அதே சமயம் காஞ்சீபுரம் வரதராஜப் பெருமாள் கோவிலையும் ஸ்ரீரங்கநாத ஸ்வாமி கோவிலையும், திருவெள்ளறையையும், திருக்கண்ணபுரத்தையும் ஏன் விளம்பரப் படுத்தக் கூடாது என்பதுதான் இங்கே நான் கேட்க விரும்பும் கேள்வி. இந்து அற

நிலையைப் பாதுகாப்புத் துறையும் இதை எல்லாம் கவனிப்பதாகத் தெரிய வில்லை. இப்படியே விட்டுவிட்டால் மங்களாசாஸனம் செய்த பாடல் கள், ஸ்தலங்கள், பிரபந்தங்கள், பாடிய ஆழ்வார்கள் பாடப்பட்ட தெய்வங்கள் என்று இணைத்துப் பார்க்கும் தொடர்பு விட்டுப் போய் விடும்

இங்கே சென்னை நகரம் என்று வந்தால்கூட, கபாலிகோயிலும், புதிதாக வந்திருக்கும் அஷ்டலட்சுமி கோயிலும் பெறுகிற விளம்பரத் தைப் பார்த்தசாரதிப் பெருமாள் கோயிலும், மாதவப் பெருமாள் கோயி லும், கேசவப் பெருமாள் கோயிலும் திருநீர்மலையும், ஸ்ரீ பெரும்பூதூரும் பெறுவதில்லை.

நமது ஸ்ரீவைஷ்ணவ சங்கங்கள் நூற்றெட்டுத் திருப்பதிகளைப் பற்றிப் பிரச்சாரம் செய்யவேண்டும். சுற்றுலா ஏற்பாடு செய்ய வேண்டும் அஷ்டப் பிரபந்தத்திலுள்ள நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி யைத் தனியே எடுத்து வெளியிட வேண்டும். குழந்தைகளுக்கு அவற் றைச் சொல்லிக் கொடுக்க வேண்டும். சில முக்கிய திவ்யதேசக் கோயில்கள் கவனிப்பாரின்றிப் புல்பூண்டு முளைத்துப் போகிற நிலையில் உள்ளன அவற்றை ஜீர்ணோத்தாரணம் செய்யக் கமிட்டிகள் அமைக்க வேண்டும், இது ஸ்ரீ வைஷ்ணவர்கள் உடனடியாகக் கவனிக்க வேண்டிய காரியமாக முன் நிற்கிறது.

சிந்தனையைத் தூண்டும் இக்கட்டுரை மீண்டும் ஒருமுறை வாசகர் களுடைய கவனத்திற்குக் கொண்டு வரப்படுகிறது.

# ஆழ்வார் காதல்

## V. பிரேமா வரதன்

உலகில், ஒவ்வொரு பொருளிடத்தும் இருபிரிவுகள் இருக்கின்றன. அவை அகம், புறம் எனப்படும். இன்னதன்மை உடையது எனப் பிறரால் சுட்டிக் காட்டவொண்ணாததும் ஒரு சமயம்தானே அனுபவித்து, மற்றொரு சமயம் அது இன்ன நிலையிலுள்ளது எனச் சொல்ல முடியாதது, அகம் எனப்படும். அவரவர் உணர்வால் மட்டுமே அன்றி வேறு ஒன்றினால் அறிய முடியாததாகும். அக நிகழ்ச்சிகள் யாவும் அன்பின் அடைப்படையிலே அமைவதாகும். ஒத்த பண்பும், நலனும் திருவும் உடைய இருவரிடையே தோன்றும் அன்பே காதல் எனப்படும். காதல் நிகழ்ச்சிகளைப் புறத்தே எப்படிக் காண முடியும்? எனவே இதை "அகப்பொருள்" என்றனர் முன்னோர். இத்துறையில் தமிழ்நாடு மிகவும் நாகரிகம் வாய்ந்ததாகும். வேறு எந்த நாட்டிலும் இத்துணை சிறப்பு வாய்ந்த அகநூல்கள் இல்லை எனலாம்.

"காதல்" என்றால் இன்றைய நிலையில் மிகவும் கேவலமான பதமாகக் கருதப்படுகிறது. அது ஒரு கடைச்சரக்கு என்றே மதிக்கின்றனர் பலர். இவ்வாறு மதிப்பிடுவது அறிவீனமாகும். காதல் தெய்வீகமானது. சுத்த மனம்; இரண்டும் ஒன்றை ஒன்று இணைத்துக் கொண்டு பிரிக்க முடியாதநிலை அடைவதை நாம் புறக்கணிக்க முடியுமா?

இக்காதல் வாழ்க்கையை கேவலம் சிற்றின்பத்திற்கு மட்டும் உபயோகப்படுத்திக் காலத்தைக் கடத்தி விடாமல், நம் பெரியோர்கள், இதை ஒரு வட்டவரையாக வைத்துப் பேரின்பத்தோடு இணைந்து கொள்ளவும் வழிகோலினார்கள். ஆண் உயிரிலே பெண் உயிர் ஒன்றி விடுவதை, ஜீவாத்மா பரமாத்மா ஐக்யத்தோடு ஒப்பிட்டு உணர்ந்தார்கள். ஜீவாத்மாக்கள் பூராவும் பெண் தன்மை கொண்டது. பரமாத்மா ஒன்றுதான் ஆண் தன்மை உடையது என்பது வேதாந்த முடிவாகும். எனவேதான் பரமாத்மாவுக்கு "புருஷோத்தமன்" என்ற திருநாமம் வாய்க்கப் பெற்றதாகும். இதை விரிக்கிற்பெருகும்.

ஆழ்வார்கள் இறைவனிடம் வைத்த காதலை நாம் உணருமிடத்து ஈடு சொல்லி விளக்க முடியாமலே போய்விடும், இம்முறையிலே,

பரமாத்வை, நாயகனுகவும், ஜீவாத்மாவை நாயகியாகவும் வைத்து மனமுருகி அகத்துறைப் பாடல்களாகச் சுவைசொட்டும் பக்தி இலக்கியம் செய்தவர்களிலே திருமங்கை மன்னனும், நம்மாழ்வாரும் தலைசிறந்து விளங்குகிறுர்கள். இவ்விரு ஆழ்வார்களின் காதல் நிலையை நாம் காண வேண்டியது அவசியம்.

அன்றெரு நாள், நறுமணம் வீசும் பூங்காவிலே அவனை அவள் சந்தித்தாள். இருவர் உள்ளமும் இணைந்து கொண்டது. உள்ளக் குறிப்பினைக் கண்பார்வையிலே இருவரும் பரிமாறிக் கொண்டனர். இருவரும் பேசிக் கொண்டதைக் காட்டிலும் மௌனத்திலும்கூட எத்தனையோ காதல் கவிதைகள் நிறைந்திருந்தன.

ஒருநாள் அவன் பிரிந்தான். தலைவி துடித்துப் போனுள்! அவனுக்கு மட்டும் இவளைப் பிரிவதில் ஆசையா? ஆசையிருந்தால்தான் முடியுமா? காதலில் பிணைப்பு அத்துணை நெகிழ்ச்சியுடையதல்லவோ! இருப்பினும் ஏதோ கடமை நினைந்து மனம் சாம்பித்தான் பிரிந்தான். திரும்பிவரும் நாளை உறுதி செய்துவிட்டுதான் பிரிந்தான். தலைவிக்கு அவன் குறித்தநாள் ஒவ்வொன்றும் பலபல ஊழிக்காலங்களாகத் தோற்றம் கொண்டு நின்றன. கணத்தின் ஒவ்வொரு கூறிலும் அவன் பிரிவை எண்ணி உருகிருள். உள்மெலிந்தாள். உண்ணும் நாளில்லை, உறக்கமும்தானில்லை. என்ன செய்வாள்? "உறக்கத்தாலும் மறப்போம் என்றுல் கனவிலே வந்து புன்முறுவல் செய்து என்னை விழிக்கச் செய்து விடுகிருனே. என்ன ஆச்சரியம்! உண்ணும் உணவிலும் பருகும் நீரிலும் கூடவா அவன் எழில் தோற்றம் காணவேண்டும்?"

இத்தகைய எண்ணத்தை நினைக்காமலிருந்து, பொழுது சீக்கிரம் விடிந்தாலும் மனத்தை வேறு பொருள்களில் செலுத்தலாம். அஞ்சுடர் வெய்யோன் அணி நெடும் தேர் தோன்றப் போவதே இல்லையா? இப்படியே ஊரெல்லாம் துஞ்சி உலகெல்லாம் நள்ளிருளாய் இருந்து விடுமா? என் பிரிவின் துயரை வளர்ப்பதற்காகவே இக்காரிருள் உண்டாக்கப்பட்டதா? என இவ்வாறெல்லாம் புலம்புகிருள்.

தலைவியின் நிலை மெல்ல ஊரார் அறிந்தனர். பேச்சுப் பலவாருக எழுந்தது. சிலர் தூற்றினர். ஊரில் பரவிய செய்தியை கேட்ட தோழி, தன் தலைவியிடம் வந்து கூறினுள். தலைவியோ அவன் பிரிந்து விட்ட துன்பத்தியிலே வெந்து பச்சைப் புண்ணுக இருக்கிருள். "உன்னைப் பற்றி ஊரார் அலர் தூற்றுகிருர்கள் என்ற தோழியின் சொல் அந்தப் புண்ணிலே சுடுவேல் செருகியது போல் ஆயிற்று. தலைவிக்கு ஆத்திரம் மூண்டுவிட்டது. தோழியிடம் விடை கூறுகிருள்

"தோழி! தலைவன் செந்தாமரைக் கண்ணன், என்னை நிறையழியச் செய்துவிட்டான். என் நிறம் அழிந்து மேனி மெலிவு எய்தி, செய்ய வாயும், குவளைமலர் போன்ற கண்களும் வெளிறிவிட்டதே! இனிமேலா மறைத்துவிட முடியும்? தன் தாமரைக் கண்ணழகாலே என்னை மயக்கி விட்ட அவனே என் அகப்படுத்திக் கொண்ட பின்பு இந்த ஊரார் தூற்றும் அலர் என்ன செய்துவிடும்?

"என் செய்யும்? ஊரவர் கவ்வைதோழி இனி நம்மை
என் செய்ய தாமரைக் கண்ணன் என்னை நிறைகொண்டான்.
முன்செய்ய மாமையிழந்து மேனி மெலிவுவெய்தி
என்செய்ய வாயும் கருங் கண்ணும் பயப்பூர்ந்தவே"

என்று, உறுதிப்பாட்டைக் கூறிவிடுகிறாள். பிரிவுதரும் துன்பம் தாங்க முடியவில்லை. வீட்டிலும் அடைபட்டுக் கிடக்க எவ்வளவு நேரம்தான் முடியும்? ஆகவே, இனிய தென்றல் வீசி மனத்தைக் குளிரச் செய்யும் தன்மை கொண்ட சோலையிலே உலாவி வருவோம் எனச் சொல்கிறாள் தலைவி. அங்குச் சென்றால் மட்டும் மனம் அமைதியா கொள்கிறது? மேலும் தாபத்தைக் கிளறிவிடும் காட்சியாகவே தென்படுகின்றது.

அழகிய சோலையிலே மலர்கள் பூத்துக் குலுங்கி நிற்கிறது. மாதவிப் பந்தலிலே குயில் இனங்கள் தங்கள் பேடையுடன் களித்துச் சுகித்த பெருமை தெரிய, இனிய குரலில் பாடுகின்றன. தேனுக்கு வட்டமிடும் வண்டுகள், ரீங்காரத்தால் குயிலிசைக்குச் சுருதி கூட்டு கின்றன. தாமரை மலர்கள் பூத்த வாவிகளிலே சேவலுடன் கூடித் திரியும் நாரைகளும் அன்னங்களும், எங்களைப் போல் இன்பம் துய்க்க யாரால் முடியும் என்ற கர்வக்குறிப்புத் தோன்ற மேய்ந்து திரிகின்றன. இக்காட்சிகளைக் காணும் தலைவிக்கு அவன் நினைவு வலுப்படுவது இயற்கை தானே?

"அன்னங்களே! என்ன பாக்கியம் செய்தீர்கள் பெடையோடும் கூடியிருப்பதற்கு? அன்று மாவலி பால் வஞ்சகமாக வந்து உலகைக் கொண்ட கள்வன் என்னையும் வஞ்சித்துச் சென்று விட்டானே. அன்று அவனைக் கண்டு காதல் கொண்டது முதல் மதியெலாம் உள் கலங்கி என் அறிவை இழந்து இன்று வருவான், நாளை வருவான் என எதிர் பார்த்து மயங்கி நின்று தவிக்கிறாள் ஒரு பெண்" என்று சொல்லுங்கள் என்று அந்த அன்னங்களை அவனிடம் தூதாக அனுப்புகிறாள் தலைவி.

"விதியினால் பெடைமணக்கும் மென்னடைய அன்னங்காள்!
மதியினால் குறள்மாணாய் உலகு இரந்த கள்வற்கு
மதியிலேன் வல்வினையேன் மாளாதோ என்று ஒருத்தி
மதியெலாம் உள் கலங்கி மயங்குமால் 'என்னீரே''

இவ்வாறு காணும் வண்டையும் பறவையையும் அவனிடம் நான் படும் பாட்டைக் கூறுங்கள் என்று தூதுவிட்டுப் பைத்தியம் கொண்டவள் போல அலைகிறாள்.

தலைவியின் தாய்க்கு மகளின் காதல் விவகாரம் தெரிகிறது. பெண்ணைப் பலவகையாகத் தேற்றுகிறாள். இது நம் குடிக்குத் தக்கதா? இப்படிக் காதல் கொண்டு தவிக்கிறாயே? இது கைகூடுமா? என்ற சந்தேகக் கேள்விகளையெல்லாம் எழுப்பிப் பார்க்கிறாள்.

பெண்ணின் உறுதி மேலும் வலுக்கிறதே அன்றி உளைந்துப் போக வில்லை. ஆயிரம்தான் இருந்தாலும் பெற்றமனம் அல்லவா? மகள் படும் வேதனை தாங்காமல் தானும் வேதனைப் படவாரம்பிக்கிறாள். தலைவனிடம் மகள் கொண்ட உறுதிப்பாட்டை நினைத்து அவனுடன் சேர்த்து வைப்பதுதான் தக்கது. இல்லையெனில் இவள் நமக்குமில்லை அவனுக்குமில்லை என்ற பரிதாப நிலை வந்துவிடும்......இப்படியெல்லாம் சிந்தித்த தாயின் வாயில் வெளிப்பட்ட பாடலைக் கேட்போம்.

"கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்
கண்ணநீர் கைகளால் இறைக்கும்
சங்கு சக்கரங்கள் என்று கைகூப்பும்
தாமரைக் கண் என்றே தளரும்
எங்கனே தரிக்கேன்? உன்னைவிட்டு, என்னும்
இருநிலம் கை தொழவிருக்கும்
செங்கயல் பாய் திருவரங்கத்தாய்!
இவள் திறத்து என் செய்கின்றாயே?''

என்று மகளுக்காகத் தானும் வருந்தி இடர்ப்படுகிறாள். இப்படி எத்தனையோ இரவு பகல் கழிந்தன. ஒருவாறு அவன்வரை செய்த நாளும் கழிகிறது. அவனும் வந்தான்! தலைவியும் தெளிந்தாள்! பிரிந்துவிட்டதால் அடைந்த ஆறாத வெம்மையை அவன் அருகிலேயே இருந்து விடையறாத இன்ப வெள்ளத்தில் மூழ்கிப் போக்கிக் கொண்டாள்.

இது நம்மாழ்வார் தலைவி நிலையில் இருந்து பாடிய பாடலாகும். இவர் அருளிய அகத்துறைப் பாடல்களை பாடுபவரும் கேட்பவரையும் அந்த நிலைக்கே கொண்டிடும் தன்மை வாய்ந்தவை. இதற்கு, பக்தி உணர்வும் சிறந்த ரசிக உள்ளமும் இருந்தால்தான் சாத்தியமாகும். "பொழுது போகவில்லை, திருவாய்மொழியை யாலும் புரட்டுவோம்" என்ற ரீதியில் பார்ப்பவர்களுக்கு இதில் ஒன்றும் இல்லை என்றுதான் புலப்படும். ஆழ்வார் பாடியுள்ள பாடலின் பெருமையை இச்சிறு கட்டுரையால் விளக்கிவிட ஆற்றல் ஏது? எனவே, நமக்குச் சந்தர்ப்பம் நேர அவகாசத்தை ஏற்படுத்திக் கொண்டு பாடி இன்புற வேண்டியது தான்.

வேதாந்த மூலம் அறிந்து கொள்ள ஒருவாறு முடியும் பரமாத்மாவை அதே வேதாந்த ரீதியில் எல்லோரும் அறிந்துகொண்டு விடமுடியாது என்ற நோக்காலேதான், யாவர் மனத்தையும் எளிதில் கவரும் சிருங்கார ரஸானுபவத்தைக் கலந்து பாடல்களாகச் செய்தனர் போலும்.



# சூடிக் கொடுத்த சுடர்க்கொடி

## மோஹனுதிருமலை

"அம்மா! குழந்தாய்! என்ன காரியம் செய்தாய்? இதற்கு உன் மனம் எவ்வாறு துணிந்தது? சிறு பிராயம் முதல் பாகவதர்களோடு பழகியும் நீ இவ்வாறு செய்யலாமா?" என்று மனம் வருந்திக் கூறுகிறார் பெரியவர்.

அவரது கண்டனத்திற்கு உள்ளான சிறுமியோ, அவர் இன்னது சொன்னாரென்று விளங்காவிடினும் ஏதோ வருத்தப்படுகிறாரென்பதைப் புரிந்து கொண்டு விம்மி விம்மி அழத் தொடங்கினள்.

அருமைப் புதல்வியின் கண்களில் நீரைக் கண்ட பெரியவரான விஷ்ணுசித்தர் தம் புதல்வியான கோதையின் கண்ணீரைத் துடைத்துத் தேற்றினர். "தேவர்களும் செய்யத் துணியாத இச்செயலைச் சிறுமியாகிய நீ செய்யலாமா? இனி இப்படிச் செய்யாதே", என்று கூறித் தேற்றினர்.

கோதையோ தான் செய்தது பாவமென்றோ, தகாத செயலென்றோ எண்ணவில்லை, தலைகுனிந்து மெள்ளச் சொல்லுகிறாள், "தான் அவனுடைய காதலி அல்லவா?".

அவளுடைய இந்த மனநிலை அவருக்கே ஆச்சரியமாயிருந்தது. திகைத்துப் போனார்; திகிலடைந்தார். அவரது மனமோ இறைவனுக்கு இன்று மாலைசூட்ட இயலாமல் போய்விட்டதே என்பதையெண்ணி வருந்தியது. பரந்தாமனுக்கே பல்லாண்டு பாடிய பட்டர் பிரானன்றோ! பகவான் விஷயத்தில் ஏற்பட்ட அபசாரமும் கோதையின் நகைமுகத்தில் திடீரென்று வந்த கண்ணீரும் மாறிமாறி அவர் மனக்கண்முன் தோன்றி அவரை அலைக்கழித்தன. கோதையைத் தம் புதல்வியாகக் கண்டெடுத்த அந்த இனியநாளை நினைந்து மெய்சிலிர்த்தார் பெரியாழ்வார். அவரது நினைவுகள் பின்னோக்கிச் சென்றன.

ஆ! அன்றொருநாள் வழக்கம் போல் வடபெருங்கோயிலுடையானுக்கு மாலை சாத்துவதற்காகப் பூக்கொய்து கொண்டிருக்கிறார் பெரியாழ்வார். பொழுது புலராத அந்தக் காலை நேரத்தில் நந்தவனத்தின் ஒருபக்கம் ஜோதி வெள்ளமாகக் காணப்பட்டது. அதனை அறியச் சென்றவர் திருத்துழாய்ச் செடியையே தாயாகக் கொண்டது போன்று கிடந்த ஒரு பச்சிளங் குழந்தையை கண்டு

ஆச்சரியமடைந்தார். அகமகிழ்ந்தார். முன்னோர்கள் செய்த புண்ணியத்தின் பயனாய்க் கிடைத்த அக்குழந்தையை எடுத்து மார்போடணைத்து உச்சிமோந்தார். முத்தமிட்டார். அவர் ஆனந்தத்திற்கு அளவேயில்லை.

"கோதை"யென்று பெயரிட்டு அருமையாய் வளர்த்தார். அவளும் தந்தையை மிகவும் நேசித்தாள். எப்பொழுதும் அவள் கனவிலும் நனவிலும், புருஷோத்தமனான ஸ்ரீமந் நாராயணனே தான் படர்வதற்கேற்ற கொழுகொம்பு என்பதை அறிந்தது அவள் உள்ளம். ஆனால் அவனுக்கேற்ற அழகிதானா தான் என்பதில் அவளுக்குச் சந்தேகம் வந்துவிடும் அடிக்கடி. அதனால் தன்னை ஆடை ஆபரணங்களால் நன்கு அலங்கரித்துக் கொண்டு கண்ணாடியில் அழகு பார்ப்பாள். ஓரளவு திருப்தி ஏற்படும். தந்தையில்லாத நேரம் பார்த்து அவர் பகவானுக்கென்று கட்டிவைத்த மாலைகளை எடுத்துத் தான் அணிந்து கொண்டு, கூந்தலிலும் சூடி அழகு பார்ப்பாள். இப்பொழுதுதான் அவனுக்கேற்ற தேவி என்ற எண்ணம் உறுதிப்படும். அன்று சோதனைபோல் தந்தை பார்த்துக்கொண்டே வந்துவிட்டார். அதனால் இருவருக்கும் மனவருத்தம்.

ஏதேதோ எண்ணி வருந்திய பெரியாழ்வார் ஒருவாறு மனம்தேறி, அந்த மாலைகளை இறைவனுக்குச் சாத்த விரும்பாமல் புதிய மாலைகள் கட்டி எடுத்துச் சென்று பெருமாளுக்குச் சாத்தினார். ஆயினும் ஏனோ அன்று பெருமாள் வழக்கம் போல் காட்சி தரவில்லை! நேற்றிருந்த பொலிவு இன்று இல்லை. அந்த மாலைகளுக்கோ சிறிதும் மணம் இல்லை இவ்வளவு ஏன்? சன்னிதியே ஒளியிழந்து போயிற்று என்றால் மிகையாகாது.

இதனைக் கண்ட ஆழ்வார் தம் புதல்வியின் அடாத செய்கைதான் பகவானுக்கு அவ்வளவு அதிருப்தி உண்டாக்கியிருக்க வேண்டுமென்று நினைந்து நெஞ்சம் கலங்கினார்.

அன்றிரவு அவரது கனவில் தோன்றிய பகவான், "ஆழ்வாரே! இன்று நமக்கு மணமில்லாத மாலைகளைச் சாத்தினீரே!" என்று புகார் செய்தான். ஆழ்வார் தம் புதல்வியின் அடாத செயலால் நேர்ந்த பிழையை மன்னித்தருளும்படி பிரார்த்திக்கிறார்.

"உம்முடைய மகளை நீர் அறிந்து கொள்ளவில்லை. அவள் நமக்குப் பூமாலை சூடிக் கொடுக்கவும், பாமாலை பாடிக் கொடுக்கவும் தானே பிறந்திருக்கிறாள்! அவள் கூந்தலில் சூடிக் கொடுக்கும் மாலையே

நாம் விரும்பும் மணம் பெற்ற மாலை!" என்று சொல்லிக் கோதையின் அவதார ரகசியத்தை விளக்குகிறான் எம்பெருமான்.

நித்திரை கலைந்தெழுந்த பெரியாழ்வார் தம் கனவை நினைத்து ஆச்சரியமடைந்தார். பெருமானுக்குப் பூமாலைகளைக் கட்டி முடித்ததும் தம்புதல்விமுன் வைத்து அவைகளைச் சூடிக்கொள்ளுமாறு வேண்டினார். கோதையோ ஆச்சரியமும், சந்தோஷம் அடைந்து அவைகளைச் சூடிக் கொடுத்தாள். அந்த மாலைகளுக்கு பழைய மணமும் அழகும் வந்து விட்டது! அன்று பகவானுடைய தரிசனம் அற்புதமாக இருந்தது. தாம் கனவில் கண்ட தேஜஸ் அந்த முகத்திலும், கண்களிலும், இள நகையிலும் ஜொலித்துக் கொண்டிருப்பதைக் கண்ட பெரியாழ்வார் அருகேயிருந்த மகளை நோக்கி ஆனந்த பாஷ்பம் பொழிந்து, "என்னை ஆண்டாள் இவளே!" என்று குதூகலமாய்ச் சொன்னார். அன்று முதல் சூடிக்கொடுத்தாள் என்ற பெயரும் இவளுக்கு வழங்கு வதாயிற்று.

பூமாலை சூடிக்கொடுத்த சுடர்க்கொடி பாமாலை பாடியும் கொடுத்தாள். தான் பிறந்த ஸ்ரீவில்லிபுத்தூரைக் கோகுலமாகவும், தன்னை கோபிகா ஸ்திரீகளில் ஒருத்தியாகவும் பாவனை செய்து கொண்டாள். காதல்வெள்ளம் கரைபுரண்டு ஓட, ஸ்ரீகிருஷ்ணனை அடையும் மார்க்கமாக நோன்பு நோற்கலானாள். அதுவே பாவை நோன்பு! விளைவு இருப்பாவை என்னும் பாமாலை! பயனே பேரின்ப மூர்த்தியாகிய ஸ்ரீகிருஷ்ணனே! ஆம்,

"மானிட வர்க்கென்று பேச்சுப்படில்
வாழகில்லேன் கண்டாய் மன்மதனே!"

என்று கூறித் தன் கொள்கையில் உறுதியாய் நின்றாள் ஆண்டாள்.

காதல் கனிரசம் ததும்பும் "நாச்சியார் திருமொழி" ஓர் உயர்ந்த காவியமாகும். ஆண்டாளின் காதலை வெறி என்றே கூறலாம்.

உள்ளே உருகி நைவேனை
உளளோ? இலளோ? என்னாத
கொள்ளை கொள்ளிக் குறும்பனைக்
கோவர்த்தனனைக் கண்டக்கால்"

என்றெல்லாம் பாடுகிறவள் நெஞ்சிலே காதல் எரிமலைக்குள்ளே குமுறும் நெருப்புப் போல் குமுறிக் கொண்டிருக்குமல்லவா? தனக்குக் காதல்நோய் தந்து தன்னை அலைக்கழிக்கும் பெருமானை ஏசியும் பேசியும் புகழ்ந்தும் பலவிதங்களில் பாடி மகிழ்கின்றாள் ஆண்டாள்,

காதலன் ஊதிவந்த வெற்றிச் சங்கைப் பார்த்து, ''அந்த வாய்ச் சுவையும் வாசமும் எப்படி இருக்கின்றன? ஆசையாகக் கேட்கிறேன் சொல் சங்கே!'' என்ற பீடிகையோடு,

''கருப்பூரம் நாறுமோ?
கமலப்பூ நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய்தான்
தித்தித் திருக்குமோ?''

என்று ரஸமான கேள்வி போடுகிறாள்.

முல்லைப் பூக்கள் மலர்ந்திருப்பதைப் பார்த்ததும் அவனுடைய முல்லைச் சிரிப்பு ஞாபகத்திற்கு வருகிறது. உடனே முல்லைக்கொடியை நெருங்கி,

''முல்லைப் பிராட்டி! நீஉன் முறுவல்கள்
கொண்(டு) எம்மை
அல்லல் விளைவியேல்; ஆழிநங்
காய்! உன் அடைக்கலம்''

என்று முறையிட்டுக் கொள்கிறாள்.

பின்பு தன் காதலனுக்குத் தூது விடுகிறாள். ''குயிலே! நீ என் புண்ணியன், என் மாணிக்கம் வருமாறு கூவவேணும்'' என்று குயிலை நோக்கிக் கூறுவாள். ''இந்தச சோலையில் வாழ விருப்பம் உண்டா? அப்படியானால் நான் சொன்னபடி செய்யவேணும்'', என்று கண்டிப்பாகக் கட்டளையிடுவாள். பிறகு,

''விண்ணீல மேலாப்பு
விரித்தாற்போல் மேகங்காள்!''

என்று மேகங்களை அழைத்துத் தூது விடுவாள்.

இறுதியில் அவள் கனவில் வருகிறான் அழகிய மணவாளன். மத்தளம் கொட்ட, வரிசங்கம் நின்றூத அவள் கைத்தலம் பற்றுகிறான் அந்த மதுசூதனன். ஆழ்வார் ஆனந்தப் பரவசராய், ''என் அருமைப் புதல்வி ஆண்டாளை உனக்குக் கன்னிகாதானம் செய்கிறேன்'', என்று கூறி தாரை வார்த்துக் கொடுக்கிறார். மணச் சடங்குகள் இனிது நடைபெறுகின்றன. ஆண்டாளின் மலர்க்கை பிடித்தவன் அவள் அடிகளையும் பிடித்து அம்மி மிதிக்கச் செய்கிறான். ஆண்டாள் பகவானோடு யானைமேல் ஊர்வலம் வருகிறாள். அரங்கன் சன்னிதிக்குள் நுழைகிறாள். அங்கே அரங்கன் திருவடிக்குள் ஐக்யமாகி மறைந்து விடுகிறாள். அரங்கனுடன் மணம் கொண்ட ஆண்டாளின் கனவு பலிக்கிறது. சூடிக்கொடுத்த சுடர்க்கொடி அரங்களின் இதயத்தில் ஒரு இடத்தைத் தேடிப்பிடித்து விட்டாள்.

—o—